ௐ.

# ஸநாதன தர்மம்.





காசியப்பிரதான ஹிந்து வித்தியாசாலைக் கம்மிட்டியாரால்
பிரசுரஞ்செய்யப்பட்டது.



Madras:
PRINTED BY THOMPSON AND CO.,
AT THE " MINERVA " PRESS, POPHAM'S BROADWAY

1907.

# அடக்க அட்டவணை



## முதலாம் பாகம்.



---

## இரண்டாம் பாகம்

---

## மூன்றாம் பாகம்.

### தர்மாதர்ம உபதேசங்கள்.

# முகவுரை.

---

வெண்பா.

கண்ணைவிழிமின், கருதி கருத்துணர்வோர்
தன்னையடுத்தே தருக்கறுமின்—எண்ணில்
முழுது நிலைமையே முன்னிற்கு மல்லால்
பழுதுபடுமே பழுது.

காசிப்பிரதான ஹிந்து வித்தியாசாலையின் சம்ரக்ஷணை கமிட்டியார் தம் ஆட்சிக்குட்பட்ட சகல வித்தியாசாலைகளிலும் சிறுவர்க்கு மதம், நீதி இவற்றின் விஷயங்கள் கற்பிக்கப்படுவதற்கு அடியிற்கண்ட லக்ஷணங்கள் அல்லது ஒழுங்குகளை ஏற்படுத்தியிருக்கின்றார்கள்.

இக்காசிப்பிரதான ஹிந்து வித்தியாசாலை ஸ்தாபனத்தின் கருத்தாவது, சிறுவர்க்கு இக்காலத்தில் அவசியமான மேற்றிசையாரின் படிப்போடு, ஹிந்துக்களின் மதம், நீதி, இவற்றையும் சேர்த்துக் கற்பித்தலேயாதலால், இவ்வித மதநீதி விஷயங்கள், புறமதக் கொள்கைகளை நீக்கிக் கேவலம் ஹிந்துமதத்தை மட்டும் சேர்ந்தனவாகியும், இவ்ஹிந்துச் சிறுவர்களுள் யாவரும் கற்றுப்பயனடையுமாறு ஹிந்துமதத்தின் கணக்கற்றவுண்மத வித்தியாசங்களைச் சம்பந்தியாமல், விசாலமும் சமரஸமும் பொருந்தினவாகியு, மிருத்தல்வேண்டுமென் பதுடன் ஹிந்துமதத்திற்குட்பட்ட எச்சார்பிலுமுள்ள

விஷயங்களையும் பொதுவாய் விளக்கிக்கொண்டும், ஏனை யவாகியபுற மதங்களைச்சேர்ந்த வியவஹாரங்களைச் சிறி தும் சம்பந்தியாமலும், நிற்றலும் வேண்டுமென்பதாம். பிரசித்தமான உட்சமயங்களிலுள்ளார் ஒருவருக்கொருவர் வாதம் புரிந்துவரும் பல வேற்றுமைகளையுடைய கொள்கைகளனைத்தையும் விலக்கி நிற்றல்வேண்டும். இந்நாட்டில், தற்காலம் நடைபெற்றுவரும் ராஜரீக சம் பந்தமானதும் வருணாசிரம தர்மங்களைப்பற்றியதுமான, வியவகாரங்களில் சம்பத்தித்தலு முதலாவது, பின்னை. ஹிந்துமத, நீதிவிஷயங்களில் சிறுவர் இவ்விளமைப்பருவத்தில் ஆழ்ந்து அகன்ற அஸ்திவாரமெனக் கூறத்தகும் ஆஸ்திகாபிமானத்தைப் பெறும்படி செய்வித்தலே இவ்வித மதவிஷயப் பயிற்சியின் பயனாகும். இவ்வஸ்திவாரதின்மீது இச்சிறுவர் பருவம் வந்தபின் தமது மானசிக காமிக சுவபாவங்களுக்கேற்ப மேம் பட்ட பதவிகளுக்குரிய தனி லக்ஷணங்கள் கற்கவும் அவ்வவ்வியவஹாரங்களை யனுசரிக்கவும் தகுதியடைவரன்றோ! இன்னும் இச்சிறுவர்க்காம் பயிற்சி, இவரிடம் ஒழுங்காய் நடத்தையை ஸ்தாபித்து! இவரை பக்தி, விநயம், பலம், உறுதி, ருஜுதை, சத்தியம், அமைதி, சாந்தி இவை முதலிய சகல நற்குணங்களையு மடைந்து விளங்கும்படி செய்விக்கவேண்டும். இவ்வித நன்னடத்தை நற்குணம்வாய்ந்த சிறுவர் தக்க காலத்தில் நற்குண நற்சீலமுடைய குடும்பஸ்தராகவும், நகர வாஸியுமாவதற்குத் தடையேது? நமது வாழ்வுயாது, அதன் பயன்யாது, நாம் பிறர்மாட்டுச் செயத்தகும் கடமைகள்யாவை, இவை முதலிய மதத்தின் மூலாதார

விஷயங்களைக் கற்பித்தலே மேற்கூறிய நற்குண நற்சீல தை வருவித்தற்கு போதுமானதாகும். ஹிந்துக்களனை வரையும் (ஒன்று சேர்ப்பிக்கும்) ஏகமதஸ்ராகும் சகலபொதுவான கொள்கைகள் யாவும் மிச்சிறுவர்க்கு தெளிவாயும் சுலபமாயும் போதிக்கப்படல் வேண்டும். அன்றியும் முடிவில், அம்மதத்தின் உட்பிரிவினரது கொள்கை, ஆசார முதலியவற்றில்போல் சகல அன்னிய மஸ்தரின் வியவஹாரங்களிலும் மதிப்பு கவுரவம் இவற்றோடும் நடந்துகொள்ளவும், உலகின் பலமதங்களும் பரப்பொருளாகிய கடவுளையடைதற்கு ஏற்பட்டிருக்கும் பலவழிகளே எனப் பாவிக்கவும் வேண்டிய சமரஸ்புத்தி இச்சிறுவர்க்குண்டாகும் வண்ணம் இப் பயிற்சி நடைபெற.

(1) இம்மத நீதிப்பயிற்சியில் சிறுவர்க்குக் கூறப்படும் விஷயங்கள் யாவும் ஹிந்துக்களுள் சகலரும் ஒப்புக்கொள்ளக் கூடியனவா யிருத்தல் வேண்டுமெனவும்.

(2) புறமதங்களி னின்றும் ஹிந்து மதத்தை வேறுபடுத்திக் காட்டும் தனிவிஷயங்களனைத்தையும் சிறுவர்க் குபதேசித்தல் வேண்டுமெனவும்.

(3) ஹிந்துமதத்திலுள்ள ஒரு குறிப்பிட்ட வகுப்பு அல்லது உட்பிரிவைச்சேர்ந்த தனி விஷயங்களை முற்றிலும் இப்பயிற்சியில் ஒத்திருக்கவேண்டுமெனவும்.

ஆகிய மேற்கூறிய லக்ஷணங்களுக் கிணங்க வியற்றப் பட்டிருக்கும் இம்முதற்புத்தகம் இவ்விந்திய நாட்டின் கண்ணுள்ள 'ஹைஸ்கூல்' பாடசாலைகளில்

பிற்பாதி, மத்திம வகுப்புகளில் கல்விகற்கும் சிறுவர்க் குபயோகமாம்படி யமைக்கப்பட்டிருக்கிறது. இம்மகா மதத்தின் பொதுவான தத்துவங்களைத் தெளிவுடனிச் சிறுவர்க்கு விளக்குவிக்க இது போதுமானது. இதில் கூறப்படும் விஷயங்களை மேம்பட்ட காலேஜ் முதலிய கலாசாலைகளில் பிற்காலத்தில் ஏற்படும் கல்வியால் மிக விசேஷத்துடன் விருத்திபண்ணிக்கொள்ள ஏதுவுண் டேயன்றி ஏதேனும் முக்கியமான பாகத்தில் பிசகான வற்றைத் திருத்தி நூதனமாய் வேறு கொள்கைகளை ஸ்தாபித்துக்கொள்ளவேண்டிய அவசியமிராது.

எவரும் ஒப்புக்கொள்ளத் தடையிராதபிரசித்த மான சகல கொள்கைகளும் விஷயங்களும் இப்புத்த கத்தில் காணப்படுமாயினும், உண்மதச்சண்டைக்கிடம் தரும்பாகம் அல்லது விவரங்கள் அகப்படா. இதிலுள்ள விஷயங்களைப் படிப்பிக்கும் பிதா அல்லது ஆசிரியர் தம் சிறுவர்க்கு அவற்றைத் தம்மிஷ்டப்படி விஸ்தரித்து க்கூறக்கூடுமேயன்றி, ப்பின்னை முற்றிலும் ஆக்ஷேப னைக்கிடமாய்த் தாம் அப்புறபடுத்திக் கொள்ளவேண்டி யதாய் உத்தேசிக்கத்தக்க பாகம் சிறிதும் தட்டுப்படா தென்பது திண்ணம்.

இப்புத்தகத்தைச் சிறுவர் தாமே கற்கும்படிவிட்டு விடக்கூடுமாயினும், ஆசிரியன் ஆங்காங்கு விஷயங் களைத்தெளிவாய் விளக்கிச் சுருக்கிச்சொல்லுதல் ஆவ சியகம். இதற்கெனவே ஒருநாள், இரண்டுநாள் பாடங் கட்கு ஆதாரமாய் இதில் ஒவ்வொருவதிகாரமும் யமை க்கப்பட்டிருக்கிறது.

இவ்வதிகாரங்களி னிறுதியில் உதகரிக்கப்பட்டிருக்கிற சுலோகங்களைச் சிறுவர்கள் மனப்பாடம்பண்ணிக்கொள்ள வேண்டியது. இவ்விதம் செய்வதால் தம் மதக்கொள்கைகட்கு ஆதாரமான சாஸ்திரப் பிரமாணங்களை மிகப் பிரயோசனப்படும்படி கைக்கொண்டவராவர்.

இப்புத்தகங்களின் கொத்து அல்லது சமுகத்துக்கு "ஸநாதநதர்மம்" என்னும் பெயர் வெகு விசேஷவாலோசனை விவாதங்கள் நடந்தபிறகு அளிக்கப்பட்டது. அதிற் கூறியிருக்கும் மூலதத்துவங்களை மற்றப் பெயர்களைக் காட்டிலும் மிக நன்ருய் விளக்குகிறதென்னும் காரணம் பற்றி இப்பெயர் இடப்பட்டது. ஹிந்தியாவில் சிலபாகங்களில் இப்பெயர் ஒரு வுள் மதத்தையே குறிப்பிடுவது வாஸ்தவமாயினும் இவ்விடத்தில அவ்விதக் கருத்துகள் சிறிதுமின்றி உண்மையான பொருளாகிய சாசுவதமான மதம்" என்னும் கருத்தையே அங்கீகரித்துப் பிரயோகிக்கப்பட்டிருக்கின்ற தென்பதை யாவரும் தெரிந்துகொள்ளக்கடவர்.

இனி இப்புத்தகமானது ஹிந்துச்சிறுவர், சிறுமியர் மனதில் நேர்மையான விசாரத்தை நாட்டிவிளக்குவிக்க வேண்டுமென்றும், அன்னோரை நாளாவர்த்தியில் பக்தி, நன்னடக்கைகள் பொருந்தி இந்நாட்டிற்கும் இம்மகாராஜ்பத்திற்கும் பேருதவியாம்படி ராஜவிசுவாசம் உபகாரசிந்தை இவை வாய்ந்துவிளங்கும் வண்ணம் ஆக்குவித்தற்குப் பெற்ரோர் ஆசிரியர் முதலியோர்க்கு உதவவேண்டுமென்றும் பிரார்த்தனையுடன் இப்புத்தகத்தை எடுத்தெழுதினவர்கள் பிரசுரப்படுத்துகின்றனர்.

ஓம்.

# ஸநாதன தர்மம்.



## முதலாம் பாகம்.

### பிரவேசம்.

ஸநாதன தர்மம் என்றால் நித்தியமான மதம் அல்லது புராதனவிதி என்று பொருள்படும். இது வெகு காலங்களுக்கு முன் மானிடர்க் களிக்கப்பட்ட புண்ணிய புஸ்தகங்களான வேதங்களை யாதாரமாகக்கொண்டது. இந்த மதத்திற்கு ஆரியமதம் என்ற பெயரும் இடப்பட்டிருக்கின்றது. ஏனெனில் ஆரிய மகாஜாதியாருள் முதலாம் வகுப்பாருக்கு இம்மதம் கொடுக்கப்பட்டது. 'ஆரிய' என்னும் பதத்திற்கு மேன்மை பொருந்திய என்று அருத்தம். இவ்வுலகில் பூர்வகாலங்களில் வசித்துச்சென்ற ஜாதியார்களைக்காட்டிலும் ஒழுக்கம், ரூபம், இவற்றிற் சிறந்த ஒரு மகாஜாதியாருக்கு இந்த 'ஆரிய' என்னும் பெயரிடப்பட்டது. இவ்வாரிய மகாஜாதியாரின் முதல் குடும்பங்கள் இப்பொழுது இந்தியாவென்று கூறப்படுமிந்நாட்டின் வடபாகத்தில் குடியேறினார்கள். அவ்விதமவர்கள் முதலில் குடியேறின நாட்டிற்கு 'ஆரிய வர்த்தம்' என்ற பெயரிடப்பட்டது.

"கிழக்கு மேற்குச் சமுத்திரங்கட்கும் ஹிமாலயம் விந்தியமாகிய இவ்விரண்டுபர்வதங்கட்குமத்திபிலுள்ள பூமியை ஆரியாவர்த்தம் எனக்கூறுவர் பெரியோர்."

அக்காலத்திற்குப் பிறகு இம்மதம் ஹிந்துமதம் என்னும் பெயரடைந்தது. இப்பெயராலேயே தற்காலம் அது வழக்கமாய்க் குறிப்பிடப்படுகின்றது. இவ்வுலகில் பிரசித்திபெற்று விளங்கிவரும் சர்வமதங்களிலும் இதுவே பிராசீனமானது. இதுபோல் வேறெந்த மதமும் இவ்வளவு கணக்கற்ற உத்தம ஆசாரியர்கள், கிரந்தகர்த்தர்கள், ஞானிகள், பக்தர்கள், சான்றோர்கள், அரசர்கள் யுக்தவீரர்கள், ராஜதந்திரிகள், லோகோபகாரிகள், தேசாபிமானிகள். ஆகிய இவர்களை யுண்டு பண்ணினதில்லை. இம்மதத்தைப்பற்றி எவ்வளவுக்கு அதிகமாய் நீங்கள் தெரிந்து கொள்வீர்களோ அவ்வளவுக்கு இதில் விசேஷ அன்பும் கவுரவமும் உங்களுக்குண்டாகும். நீங்கள் இதில் ஜனனமடைந்ததற்குச் சந்தோஷமடைவீர்கள். ஆனால் நீங்கள் அதற்குத் தக்கபடி ஒழுகி நாளடைவில் உங்களைச் சீர்திருத்திக் கொள்ளாவிடில் இவ்வுயர்ந்த மதத்தால் உங்களுக்கு விசேஷப் பிரயோசனம் கிடையாது.

## ஸநாதன தர்மத்தின் மூலப்பிரமாணங்கள்.

இப்புராதன மதமாகும் கட்டடத்திற்கு அதிதிருடமான ஓர் அஸ்திவாரமுண்டு. அதன்மேற்றான் இக்கட்டடத்தின் சுவர்கள் எழுப்பப்பட்டிருக்கின்றன.

இவ்வஸ்திவாரந்தான் சுருதி; சிரவணம் பண்ணப்பட்டது என்று பொருள்தரும். இதனை யாதாரமாகக்

கொண்டவர்களே ஸ்மிருதிகள். ஸ்மரிக்கப்பட்டவை அல்லது ஞாபகத்தில் வைக்கப்பட்டவை என்று பொருள் தரும்.

இச்சுருதி தேவர்களிடமிருந்து சிரவணத்தாற்பெற்றுக்கொண்ட பெரியோர்கள் மூலமாய் உலகத்திற்கு வெளியிடப்பட்டது. இவ்வுயர்ந்த விஷயங்கள் சமீபகாலம் வரை புத்தகரூபமாய் எழுதப்படாமலேயிருந்து மனப்பாடம்பண்ணி ஒருவருக்கொருவரால் வாயால் ஓதுவிக்கப்பட்டே வந்தன.

சிஷ்யருக்கு இவற்றை வாயால் ஒரு தடவைக்குச் சிலவார்த்தைகளாய்க் குரு ஓதுவிப்பார். உடனே அவருக்குப்பின்னால் கூடவே சிஷ்யரும் அவ்வார்த்தைகளை ஒப்புவிப்பார்கள். இவ்விதமே முழுமையும் செவ்வையாய்ப் பாடமாகும்வரை செய்வார்கள். முன்னோர்கள் பூர்வகாலங்களில் செய்துவந்த இந்தப்பிரகாரமாகவே நாளைக்கும் இத்தேசத்தில் வைதிக பாடசாலைகளில் வேதங்கள் கானம் பண்ணப்பட்டு வருவதைக் காணலாம்.

இச்சுருதி சதுர்வேதம் அல்லது நான்கு வேதங்களடங்கியது. வேதம் எனின் அறிவு, அல்லது அறியப்பட்டபொருள் என்று அருத்தம்; மதத்துக்கு ஆதாரமான சகல விஷயங்களும் மானிடர்க்கு இந்நான்கு வேதங்களில் வெளியிடப்பட்டிருக்கின்றன. அவைகளின் பெயர்களாவன:—

ருக்வேதம், ஸாமவேதம், யஜுர்வேதம், அதர்வணவேதம் என்பனவாம்.

இவ்வொவ்வொரு வேதமும் அடியில் வருமாறு மூன்று பாகங்களாக வகுக்கப்பட்டிருக்கின்றது.

(1) மந்திரம் அல்லது சம்ஹிதை (சமூகம் அல்லது திரட்டு.)

(2) ப்ராம்ஹணம்.

(3) உபநிஷத்.

மந்திரபாகத்தில் மந்திரங்கள் அடங்கியிருக்கின்றன. மந்திரங்களாவன சப்தங்களை யொன்றன் பின் ஒன்றாய் உச்சரிக்கும் விதத்தால் விசேஷ சக்திகளை யுண்டுபண்ணக்கூடிய அல்லது பலனைக்காட்டக் கூடிய சில வாக்கியங்கள். இவையாவும் தேவர்களுக்கு ஸ்தோத்திரரூபமாய் அமைக்கப்பட்டிருக்கின்றன. இத் தேவர்கட்கும் மானிடர்க்கு முள்ள சம்பந்தங்களைச்சற்றுப்பின்னர் விசாரிப்போம். இவற்றைச் சரியாயுச்சரிக்கக் கற்றுக்கொண்டவர்களால் இவை யுச்சரிக்கப்பட்டால் சில பலன்கள் உதிக்கின்றன. இம்மந்திரங்கள் வைதிக கர்மங்களில் உபயோகப்படுத்தப்படுகின்றன. அவைகளின்பலன் அல்லது பிரயோஜனம் முக்கியமாய் அவைகள் சரியாய் உச்சரிக்கப்படுவதைப் பொருத்திருக்கின்றது.

வேதங்களின் 2-வது பாகமான பிராமணங்கள் வைதிக கர்மங்களின் அநுஷ்டான விதிகளைக் கூறுகின்றன. அன்றியும் மேற்கூறிய மந்திரங்களுபயோகிக்கப்படும் கர்மங்களை நடத்தும் வழிகளை விவரித்து, இவ் விஷயங்களைப்பற்றிய பூர்வகாலத்துக் கதைகளையும் கூறுகின்றன.

உபநிஷத்துக்களடங்கிய பாகம், பிரம்மம், ஜீவாத்ம பரமாத்மாக்கள், பந்தம், முக்தி, மனிதன், பிரபஞ்சம், இவ்வகையான உயர்ந்த விஷயங்களைப்பற்றிய ஆழ்

ந்த தத்துவோபதேசங்களை விரிக்கின்றது. இவ்விபாகம் தான் ஸமஸ்த தத்துவராய்ச்சிக்கும் ஆதாரமான பிரமாணம். நீங்களும் வாலிபபருவம் நீங்கி தகுந்த வயதடையும்பொழுது இவற்றைப்படித்து ஆனந்தமடையலாம். நிரம்பவும் உயர்ந்த கல்வி யுடையார் மட்டுமே இதைப் படிக்கலாம். இதரர்களுக்கு அது மிகவும் கடினமானது.

இனிப் பூர்வகாலங்களில் உபவேதம், அல்லது தந்திரம் என்னும் பெயரையுடைய நான்காம்பாகம் ஒன்றும் வேதங்களிலிருந்தது. இது தந்திரம் அல்லது அனுபவத்தையொட்டிய விதிகள் அடங்கியது. இப்பொழுது உண்மையான அப்பூர்வகால தந்திரத்தில் சிறிது பாகங்கூட உலகத்தில் மிகுந்திருப்பதாய்ச்சொல்லக்கூடாது. ஏனெனில் ஜனங்களுக்கு வரவர ஆஸ்திக புத்தி குறைந்து வருவதைக்கண்டு ரிஷிகள் இத்தகையினர்க்கு அவைதகாதென்று அவையனைத்தையும் மறைத்துவிட்டார்கள். ஆயினும் சிலவிடங்களில் தந்திரபாகம் கர்மாக்களில் பிரசித்தமான வைதிக பிரகாரங்களோடு கூடவும், அல்லது அவற்றிற்குப்பதிலாகவும் உபயோகிக்கப்பட்டு வருகின்றது. தற்காலத்தில் 'தந்திரங்கள்' என்றழைக்கப்படுகிற கிரந்தங்கள் வேதங்களைச் சேர்ந்தனவாக கிரஹிக்கப்படுகிறதில்லை.

சுருதியிற் கூறப்படும் விஷயங்கள் பரமப்பிரமாணங்கள். சிரத்தையுள்ள ஸநாதனதர்ம மதஸ்தர் யாவரும் இவை முடிவான பிரமாணமென்று ஒப்புக்கொள்ளப்பின்னிடார். சமஸ்த உண்மதங்களும் அவற்றின் பிரிவுகளும் அவற்றைச்சேர்ந்த வேதாந்த அல்லது தத்வபாகங்களும் சுருதியையே சகல வியவஹாரங்களுக்கும்

முடிவான தக்க பிரமாணமென அங்கீகரித்து நிற்கின்றன.

ஸ்மிருதி அல்லது தர்மசாஸ்திரமென்பது சுருதிக்கடுத்த கீழ்ப்படியிலுள்ள பிரமாணமாகும். இது மகா ரிஷிகளால் எழுதப்பட்ட நான்கு பெருங் கிரந்தங்களடங்கியது. இக்கிரந்தங்கள் ஒருமனிதன், குடும்பம், ஜாதி முதலிய கோஷ்டிகள், தேசம் அல்லது வர்க்கம் (Race), இவைகள் ஒன்றிற்கொன்று நடந்துகொள்ள வேண்டிய ஒழுங்குகள் அல்லது முறைகளை விதிக்கின்றன. இவ்விதிகளின் மேற்றான் ஹிந்துகோஷ்டியானது பிரதிஷ்டைசெய்யப்பட்டிருக்கின்றது ; இவ்வொழுங்குகளாற்றான் நிலைபெற்று ரக்ஷிக்கப்படுகின்றது. அக்கிரந்தங்களாவன.

1. மனுஸ்மிருதி அல்லது மானவதர்மசாஸ்திரம். (மனுவால் இயற்றப்பட்ட சட்ட நிர்மாணங்கள்.)

2. யாக்ஞிய வல்க்கிய ஸ்மிருதி.

3. சங்கலிகிதஸ்மிருதி. சங்கர், லிகிதர் இவர்களின் ஸ்மிருதி.

4. பராசரஸ்மிருதி.

இதில் முதலாவது புஸ்தகமானது ஆரியமகாவர்க்கத்தாரின் சகல ஆசாரங்களுக்கும் முக்கியமான ஒரு சுருக்கமாம். இதையியற்றிய மனுவென்பவர் இவ்வாரிய வர்க்கத்திற்கு ஆதிசட்ட நிர்மாணகர்த்தர். ஹிந்துசாஸ்திரங்களில் ஜகத்ஸ்திதியின் காலம் 7 பெரும் விபாகங்களாக வகுக்கப்பட்டிருக்கிறது. இவ்வொவ்வொரு விபாகத்திற்கு ஆதியிலும் அந்தத்திலும் ஒவ்வொரு மனு யேற்படுவர். ஆகையால் இவ்விபாகங்களுக்கு 'இரண்டு மனு

க்களுக்கு இடையிலுள்ள காலம்' எனப் பொருள் தரும் 'மன்வந்திரங்கள்' என்ற நாமதேயமிடப்பட்டிருக்கின்றது. "ஸ்வயம்புவாகிய பிர்ம்மாவின் சந்ததியான இம்மஹாமனுவின் வம்சத்தில், இதுவரை மகானுபாவர்களும் மகா கீர்த்திமான்களுமான 6 மனுக்கள் தோன்றிப் பிரஜா சிருஷ்டிகளைச் செய்திருக்கிறார்கள் என்று கூறப்பட்டிருக்கிறது. ஆதலாலிப்பொழுது நிகழ்வது 4 ஆம் மன்வந்திரமென்று வெளியாகிறதல்லவா? தற்காலத்தில் அரசாக்ஷிபுரியும்மனு விவஸ்வதர்குமாரர் என்று மேற்கூறியதற்கு அடுத்த சுலோகத்திற் கூறப்பட்டிருக்கின்றது. இவர் ஏற்படுத்திய விதிகளிற்சில இம்மனுஸ்மிருதி மூலமாய் உலகிற்கு வெளியிடப் பட்டிருக்கின்றது.

யாக்ஞியவல்க்கிய ஸ்மிருதியும் இதே விஷயங்களைக் கூறும் கிரந்தமே. இது மனுஸ்மிருதிக் கடுத்த மதிப்பையுடையது. அடுத்த விரண்டு கிரந்தங்களும் தென்னிந்தியாவின் சில பாகங்களில் தவிர வேறு இடங்களில் தற்காலத்தில் அதிகமாக வழக்கத்தில் கொள்ளப்படுதல் இல்லை.

சுருதியும் ஸ்மிருதியும் ஸநாதனதர்மமாகும் கட்டடத்திற்கு அஸ்திவாரமும் சுவர்களுமாய் விளங்குகின்றனவென முன்னமே கூறினோம். இனியச் சுவர்களுக்கு அவசியமான 'துணை' களாய் விளங்கும் இருவகைப் புஸ்தகங்களுமுண்டு. அவையாவன:—புராணங்களும், இதிகாசங்களும் (சரிதங்கள்) ஆம்.

புராணங்களாவன, சுருதிகளைப் படித்து அறிந்து கொள்ளச்சக்தியற்ற மந்தாதிகாரிகளானஜனங்களுக்கு

ஏற்ற கதைகள், சரிதங்கள், உவமைக் கட்டுகள் ஆகிய இவைகளடங்கியவை. அவையாவும் படிப்பதற்கு இனி மையுடையனவாய்க் கவனிப்போர்க்கு எண்ணிறந்த பலவகையான விஷயங்களை ஊட்டுகின்றன. இவற்றி லுள்ள உவமைக்கட்டுகளிற் சில அறிந்துகொள்வதற்கு வெகு கடினமானவைகளாயும், விளக்குவதற்கு உண் மை தெரிந்த குருவினுடைய சகாயத்தை யபேக்ஷிப் பவைகளாயு மிருக்கின்றன.

இதிகாசங்கள் என்பவை இரண்டு பெரும் காவி யங்களடங்கினவை:—அவற்றில்,

1. ராமாயணம். இது தசரதமகாராஜரின் மைந்த ரான ஸ்ரீ ராமச்சந்திரர், அவர் மனைவி, அவர் சகோத ரர் ஆகிய இவர்களின் சரிதமாகும். இது வெகு விநோத மும் ஆனந்தமும் விளைவிக்கும் ஒரு கதையென்பது உங்களுக்குத் தெரியும்.

1. மகாபாரதம். இது வட விந்தியாவில் அரசா ண்டுவந்த ஒரு ராஜவம்சத்தின் சரிதத்தைக் கூறுகின் றது. இவ்வம்சம் கௌரவர்கள், பாண்டவர்கள் என் றிருகட்சியாய்ப்பிரிந்தது. இவ்விருதிறத்தார்க்கும் ஒரு பெரிய யுத்தம் உண்டாயிற்று. இக்கிரந்தத்தில் ரமணீ யமான பலகதைகள், உயர்ந்ததர்மோபதேசங்கள்,இன் னுமநேகவித விசேஷமான பிரயோஜனமுள்ள படிப் பினைகள் அடங்கியிருக்கின்றன.

ராமாயணம், மகாபாரதமாகிய இவ்விரு புத்தகங் களாலும் பூர்வீக இந்தியாவின் ஸ்திதி, அதில் வசித்த ஜனங்கள், அவர்களுடைய நடையுடை பாவனைகள், ஜீவனமார்க்கங்கள், கலை, கைத்தொழில்கள், ஆகிய

இவற்றைப்பற்றிய விவரங்களை, நாம் நன்றாய்த்தெரிந்து கொள்ளுகிறோம். இவ்விஷயங்களை நீங்கள்செவ்வையா யறிந்து கொள்ளுவீர்களாகில் இந்தியா ஒரு காலத்தில் எவ்வளவு மேன்மையடைந்திருந்ததென்பது உங்களுக் குப் புலப்படும். அன்றியும் இவ்விந்தியாவை மறுபடி யும் அவ்வித ஸ்திதிக்குக் கொண்டு வருவதற்கு நீங்கள் ஒவ்வொருவரும் நடந்துகொள்ளவேண்டிய விதமும் உங்களுக்குத் தென்படும்.

## ஸநாதன தர்மத்தின் சாஸ்திரங்களும் தத்துவ விசாரமும்.

இம்மதத்திற்கு ஆதாரமாய் மேற்கூறிய சுருதிஸ்மி ருதிகளும், புராணேதிகாசங்களும் மூலாதாரமாய் ஏற்ப ட்டிருப்பதுடன் பின்னர் இம்மதத்தினின்றுமே விஸ் தரிக்கப்பட்டிருக்கிற சாஸ்திர தத்துவ வாராய்ச்சிகள் மிக விசேஷமான விஸ்தாரத்துடன் கூடிய பெருந்திர ட்டு ஆயிருக்கின்றன.

இதில்சாஸ்திரம் 6-அங்கங்கள் (அவயவங்கள்) ஆய் வகுக்கப்பட்டிருக்கின்றது. இந்த ஆறு அங்கங்களாகிய விபாகங்களே இப்பொழுது லௌகிகம் என்று கூறத் தகும் சகல வித்தைகளையு மடக்கிக்கொண்டிருந்தன. பூர்வகாலங்களில் இவ்விதலௌகிகவித்தையும் அலௌ கிகமாகிய மதவாராய்ச்சியும் இக்காலத்தைப்போல் பிரி ந்ததாக விருக்கவில்லை. மேற்கூறிய 6 அங்கங்களில் வியாகரணம், நிருத்தம், ஜோதிடம், காவியம், இன்னும் மற்ற 64-கலைத்தொழிலாராய்ச்சிகளும், இச்சகல வித் தைகளை யப்பியசிக்கும் விதமும், ஆகிய யிவையனைத்து

மடங்கியிருந்தன. ஆகையாலிந்த ஆறு அங்கங்களிலும் தேர்ச்சியடைந்த ஒருவன் பலவித்தைகளிலு மாழ்ந்த வாராச்சியுடையவனுயினுன். இவ்விதமே தத்துவவிசாரமும் 6-உட்பிரிவுகளுடையதாயிருந்தது. இவற்றிற்குத் தர்சனங்கள், அதாவது அலோசனைகள், அல்லது வழிகள் என்று பெயர். இவையனைத்திற்கும் கருத்து ஒன்றே. அக்கருத்தாவது பின்ன ரூபமான ஜீவாத்மாக்களை மறுபடியும் பரமாத்மாவுடன் சேர்ப்பிப்பதற்கு வழிகாட்டி இவர்களுடைய துக்கமனைத்தையும் போக்குவதேயாம். இத்துக்கநிவர்த்திக்கு ஒரே ஒரு உபாயந்தான் இவையனைத்தும் கூறுகின்றன. அதாவது ஞானப்ராப்தியே. இதற்கு ஏற்பட்ட வழிகள் பலவகையான மனோபாவங்களையுடைய ஜனங்களுக்கு ஒவ்வுமாறுஒன்றுக்கொன்று வித்தியாசப் படுபவைகளாயிருப்பினும் அவையனைத்தும் ஒரே நகரத்துக்குட் சேர்ப்பிக்கும் நாற்றிசையிலுமுள்ள பல மார்க்கங்களைப்போல அன்றி வேறன்று. இத்தர்சனங்கள் எவ்விஷயங்களைப்பற்றிக் கூறுகின்றனவென்பதைச் சிறுவர்களாகிய உங்களுக்குத் தெரியவேண்டியமட்டில் அடியில் வருமாறு கூறலாம்.

உலகிலுள்ள பதார்த்தங்களனைத்தையும் குறிப்பிட்ட சில வகுப்புகளாக நியாயவைசேஷிக மதங்கள் பிரிக்கின்றன. பிறகு இச்சகல பதார்த்தங்களையும் மனிதனறிவது இந்திரியங்கள் மூலம் அல்லது பிரத்தியக்ஷப்பிரமாணத்தாலும், அனுமானம் அல்லது உவமையாலும், அறிஞர் அதாவது ஞானிகள் அனுபவத்தாலுமே கூடுமென்றும் கூறுகின்றன. இன்னுமிவை கடவுள்

இந்த ஸ்தூலவுலங்களை, அணுக்களாலும் அவற்றிற் கூட்டங்களாலும், எவ்விதம் கிருஷ்டித்தாரென்பதை யும், எவ்வித்தையிலு முயர்ந்த வித்தையாவது, சகல ஜீவர்களுள்ளும் வசித்துறையு மந்தராத்மாவாகிய கடவுளை யறிதலே யென்றும் அவரை யறிவதற்குள்ள பல வழிகளையும் எடுத்துரைக்கின்றன.

"சாங்கியம்" இப்புருஷன் அல்லது ஆத்மாபிரகிருதியல்லது "மாயை," இவற்றைப்பற்றிப்பின்னும் விசேஷவிவரங்களுடன் விரித்து, அவ்விரண்டு அம்சங்களுடைய சம்பந்தங்களையுங் கூறுகின்றது.

இனி யோகமென்பது மனிதர்களிடத்தில் பிரசித்தமாய்த்தெரிந்த ஞானேந்திரிய கர்மேந்திரியங்களைத் தவிர யின்னு மனேக சூட்சும சக்திகளு மிந்திரியங்களுமடங்கி நிற்கின்றனவெனக் கூறுகின்றது. அந்த ராத்மாவாகிய கடவுளை யறிந்துகொள்ள முயற்சிசெய்வோர்க்கு அவற்றை பக்குவப்படுத்திக்கொள்ளும் வழிகளையும் விவரிக்கின்றது.

மீமாம்சமென்பது கிரியாரூபமான லௌகிகா லௌகிக பேதங்களையுடைய கருமம் யாதென்பதையும் அதன் பலன்கள், காரணங்கள், முடிவுகள் ஆகிய இவைகளையும், இவ்வுலகத்திலும் வேறு உலகத்திலும் அது எவ்விதம் மனிதனைப் பந்தப்படுத்துகின்றது என்பதைவும் விளக்குகின்றது.

இனிச்சகல தர்சனங்களுக்கும் சிரோபூஷணமான வேதாந்தமானது கடவுள் அல்லது ஆத்மாவின் வாஸ்தவமான லக்ஷணங்களைவிளக்கி, மனிதனுடைய ஜீவனும் அவனிடம் விளங்கும் அந்தராத்மாவாகிய கடவு

ளும் பரமார்த்தத்தில் ஒரே வஸ்துவெனக் காட்டுகின்றது. இன்னும் பந்தத்தை விளைவிக்காதபடி அவசியமான சகல கர்மங்களையும், குறைவறச்செய்துகொண்டு மனிதன் எவ்விதம் வாழ்ந்திருக்கலா மென்பதையும், முடிவில் சகல வுலகமும் கடவுளிடம் தோன்றி மறைவதற்குக் காரணமாகிய அவரது மாயாசக்தி இன்னதெனத்தெரிந்து, யோகத்தால் அவரையடைந்து, அவரோடுகலந்து ஜனனமரணாதி சம்சாரத்திலிருந்தும்விடுபடுதலாகிய மோக்ஷத்தை மனிதன் அடைவதற்கேற்ற வழிகளையும், கூறுகின்றது.



ஓம்.

# ஸநாதன தர்மம்.



## அதிகாரம் 1.

### ஏகவஸ்து.

அநந்தமாயும், சாசுவதமாயும், நிர்விகாரமாயும், சமஸ்தமாயுமுள்ள ஒரு ஸ்திதியுண்டு.

அதினின்றுமே எல்லாம் வருகின்றது. அவனிடமே எல்லாம் மீளவு மடங்குகின்றது.

"ஒன்றேயொன்று இரண்டற்றது" என்றசாந்தோக்கியவுபநிஷத் வாக்கியமே இதற்குப் பிரமாணம்.

அதனுள்ளேயே முக்காலத்திலும், நிகழ்கின்றன நிகழ்ந்தன, நிகழ்வனவாகிய சகலமும் அடங்குகின்றன. பெரும் சமுத்திரத்தினுள் ஓர் அலை கிளம்புவதுபோல் ஒரு பிரபஞ்சமு மிவ்வகிலத்துள் உதிக்கின்றது. அப்படியே இவ்வலை சமுத்திரத்தில் தங்குவதுபோல் ஒருபிரபஞ்சமுமிவ் வகிலத்துள் லயமடைகின்றது. சமுத்திரம் ஜலமல்லது வேறல்லாததுபோலும், அதனுட்தோன்றும் அலையும் அஜ்ஜலத்தின் ரூபமல்லது உருவங்களில் ஒன்றேயாதல்போலும், எங்கு நிறைந்த திவ்வேகமாகிய ஸ்திதியே; அதன் ரூபங்களில் ஒன்றே யொவ்வொரு பிரபஞ்சமும். "இஃதெல்லாம் பிரம்மமே" என்னும் வேதவாக்கியம் இதற்குப் பிரமாணமாம்.

இதுவே (சர்வமதத்தினுடையவும்) மதத்தின் முத லுண்மையாம். இவ்வகிலமுமாகிய ஏகவஸ்துவை மானிடர் பலபெயர்களிட் டழைக்கின்றூர்கள். ஸநாதனதர்மத்தில் இதற்கிட்டிருக்கும் பெயர் பிரம்மம். இங்கிலீஷ் பாஷைபேசுகிறவர்கள் கடவுள் என்றபெயரையுபயோகிக்கிறூர்கள். சிலவேளைகளில் இதன் பொருளைத்தெளிவாக்கிக்கொள்ளும்பொருட்டுத்தனது "பரமார்த்தஸ்திதியிலுள்ள" என்னும் விசேஷணத்தைச்சேர்த்து அப்பதத்தை யுபயோகிக்கிறூர்கள். சில சமயங்களில் ஹிந்து இப்பூர்ணவஸ்துவை 'நிர்க்குணப்பிர்ம்மம்' 'குணங்குறிகளற்ற பிரம்மம்' அல்லது 'எவ்விதபந்தங்களுமற்ற பிரமம்' என்றமொழிகளால் வியவஹரிக்கிறுன். ஆவிர்ப்பாவம் அல்லது பிரகாசத்தை யடைந்தவஸ்து அதாவது சமஸ்த குணங்களோடும் கூடியவரும், பிரபஞ்ச சகிதருமான, பரமேசுவரனுகிய ஸகுண பிரம்மத்தினின்றும், அப்பால் குணுதீதமாய் வியவஹாரங்கடந்து நிற்கும் பரப்பிரம்மம் அல்லது நிற்குணப்பிரம்மத்தைப் பிரித்துக்காட்டும்பொருட்டே மேற்கூறிய பலவகைவிசேஷணங்களுபயோகிப்படுகின்றன. இவை பிரம்மத்தின் இருவகை ஸ்திதிகளென பிருகதாரணியகோபநிஷத்தில்கூறப்பட்டிருக்கின்றது. இவ்விஷயம்மிகக் கடினமானதாதலால் இவ்விடத்திலதைப்பற்றி அதிகமாய் விசாரிக்கப்புகுவதற்கு நியாயமில்லை. ஆனுலிங்கு ஒருசிறுவன்தெரிந்துகொள்ளவேண்டியது யாதெனில், சகுண பிரம்மமென்பதுபரப்பிரம்மத்திற் கன்னியமான விரண்டாம் பதார்த்தமன்று; பின்னையப்பரப்பிரம்மத்தின்பிரகாசம்அல்லது ஆவிர்ப்பாவமே. பரப்பிரம்மமேசச்சிதானந்த ஸ்வரூபியான ஏகனுகிய ஜகந்நாதனுய் விளங்குகி

ன்றது என்பதே. இச்சச்சிதானந்த ரூபியாகியஈசுவரன் சர்வபிராணிகளுக்கும் மூலமும்மாதாரமானவன். பரம சுவாதீனமுடைய ஏகன். இவரைச்சிலசமயங்களில் புருஷோத்தமனென்றும் பரமாத்மாவென்றும் ஆத்மாவென்றும் கூறுவதுமுண்டு. தான் புருஷனாகிப் பிரப்பிரம்மத்தின் மற்றோர் அம்சமாகிய மூலப்பிரகிருதியையும் தானே விரிக்கிறார். இம்மூலப் பிரகிருதியே மாயை அல்லது பிரகிருதியின் மூலம். பிரகிருதியாவது ரூபத்திற்காதாரமானவஸ்து. இதுவே பலவகைச் சரீரங்கள், உருவங்கள் வித்தியாசங்களிவற்றைத் தருகின்றது. நாம் ஸ்பரிசிக்கக்கூடியது, முகரக்கூடிது, ருசிபார்க்கக்கூடியது, தரிசிக்கக்கூடியது, கேட்கக்கூடியது ஆகிய இவையாவுமின்னும் நமது பஞ்சேந்திரியங்களுக் கதீதமாய்க்கிடப்பன ஆகிய எண்ணிறந்தனவும் இப்பிரகிருதியே. இரஸாயன வியவஹாரிகளின் கட்டிகள், திரவங்கள், ஆவிகள் ஆகிய இவைகளுமிப்பிரகிருதியே. நமக்கு நாற்புரத்திலுங் காணப்படும் பதார்த்தங்களான கல், மண், மிருகம், மனிதராகியவிவைகளும்பிரகிருதியா லாக்கப்பட்டவைகளே. ஆனாலிவையாவும் முழுவதும் பிரகிருதியன்று. இவை ஒவ்வொன்றிலும் அதிருசியமாயும் காது, மூக்கு, ஸ்பரிசேந்திரியமாகிய இவற்றிற்குஅகோசரமாயும் புருஷன் வசிக்கிறான். அதாவது இவை ஒவ்வொன்றிலும் இவ்வீசுவரனது அம்சம் உண்டு. பிரகிருதியை விபாகம் அல்லது சரீரம், கோசல் அல்லது உறை, உபாதி அல்லது வாகனம், என நாம் வியவஹரிக்கிறோம். அதாவது புருஷனைத்தாக்குவது வஹிப்பது அல்லது மூடுவது என்பதே. ஆதலால் ஈசுவரன் எப்பதார்த்தத்திலும் உள்ள ; அவனே சமஸ்த பதார்த்

தங்கட்கும் உயிர் அல்லது ஜீவனையளிக்கிறான். இவனே சகல பதார்த்தங்களுள்ளும் வசிக்கும் அழிவற்ற சேதனம் அல்லது ஆன்மா; சகலத்தையும் தரேரிக்கும் அந்தர்யாமியாதலால் இவனையன்றி அதாவது இவனைவிட்டகன்றதாய் ஒருபொருளும் இருக்கமுடியாது. பிரகிருதியின் விகாரமாகிய சரீரத்தில் பிரகாசிக்குமிவனது ஓர் அம்சத்திற்கே ஜீவன் அல்லது, ஜீவாத்மா, அல்லது பின்னரூபமாகிய சேதனம் என்றும் பெயரிடப்பட்டிருக்கின்றது.

புருஷன் அல்லது சேதனத்திற்கும் பிரகிருதிக்கும் மேற்கூறியவஃற்றைத் தவிற இன்னும் சில முக்கியமான வித்தியாஸங்களுமுண்டு. அவையாவன: சேதனமெக்காலத்திலும் அரூபம். பிரகிருதியோ ஸ்ரூபமே தவிர வேறன்று. நமதிந்திரியங்கள் பூர்ணமாய்ப்பக்குவமடைந்தால் பிரகிருதியின் சமஸ்த ஸ்திதிகளையும்பார்க்கக்கூடியவைகளாகின்றன. ஆனால் புருஷனை யவ்விதமிந்திரியங்களால் பார்ப்பது முடியாது. புருஷன் சேதனமல்லது உயிர்; ஒவ்வொருவரிடமும் நினைப்பதுவுமுணர்வதும், யோசிப்பதுவுமாகிய 'நான்' என்னுமம்சமாம். எல்லோரிடத்தும், எப்பொருளிலும் விளக்குமிப் புருஷன் ஏகனேதவிர அனேகரன்று. ஆனால் பிரகிருதியோ நினைப்பதும், உணருவதும், யோசிப்பதுவுமன்று; பிரக்ஞையற்ற ஜடபதார்த்தம். அது அனேகரூபங்களாகவும், ஒன்றிலிருந்து பலவாகும் பிரிவு அல்லது பேதத்தின் தன்மையை யுடையது. ஆதலால் இப்புருஷனும் பிரகிருதியும் ஒன்றிற்கொன்று எதிரிடையான பதார்த்தங்கள்; ஒன்றிற்கு மற்றொன்று அவசியமானது. புருஷன் பிரஜ்ஞையோடுங்கூடிய அறி

பவன் அல்லது 'ஞாதா' வென்றும் பிரகிருதி பிரக் ஞைக்கு விஷயம் அல்லது 'ஞேயம்' என்று மழைக் கப்படுகின்றன.

இதைப்படிக்கும் சிறுவர் இவ் வித்தியாசங்களைத் தம்முடைய கருத்தில் நிறுத்திக்கொள்ளல்வேண்டும். சேதனத்தையும், பிரகிருதியையு மொன்றோடொன்று குழப்புதல் கூடாது. இவைதாம் ஓர் பிரபஞ்ச நிர்மாணத்திற்கு ஆதாரமான 'ஆதியிரட்டைகள்' அல்லது 'பிரதமத்தொந்தங்கள்' ஆம்.

புருஷனிடம் சத்து, சித்து, ஆனந்தம், ஆகிய முக்குணங்கள் விளங்குவதுபோல், பிரகிருதியினிடத்திலும் சத்துவ, ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களுண்டு. இவற்றுள் தமஸ் அசைவின்மை, ரஜஸ் அசைவு, சத்துவம் சாமியம் ஆகின்றன. தமோகுணமாகும் அசைவின்மையானது பதார்த்தங்கட்கு ஸ்திரமல்லது நிலைபெறுதலைத் தருகின்றது. ரஜோகுணமவற்றிற்கு சஞ்சாரமல்லது சுறுசுறுப்பையளிக்கின்றது. சத்துவமாகும் சாமிய குணமானது அசைவு அல்லது வியவஹாரத்தையொன்றுக்கொன்று விரோதமின்றி ஒவ்வினதாய் ஏற்படுத்தி, ஒற்றுமையல்லது சமரஸத்தை விளைவிக்கின்றது. ஆயினும் முக்குணங்களு மொவ்வொரு பொருளிலு நிரம்பியிருப்பதுண்மையானால் ஒருகல் நகருவதை எவரும் பார்ப்பதில்லையே யென்று நீங்கள் கேட்கலாம். இங்குண்மையாதெனில், இக்கல்லினுள்ளு மசைவுண்டு. மேற்றிசைப் பிரத்தியக்ஷ விசாரம் (Science) கூறுவது யாதெனில் இக்கல்லினுள் ஒவ்வொரு அணுவும் விரைவுடன் அங்குமிங்கும் ஒழுங்குடன் சலித்துக்கொண்டேயிருக்கின்றது, இவ்வணுக்க ளதி நுட்பங்களாகையால்

அவற்றை நாம் பார்க்கமுடிகிறதில்லை யென்பதேயாம்.

பிரகிருதியை ரூபீகரிக்கும்படிச் செய்விக்கும் ஈச்சுவரனது சக்திக்கு 'மாயாசக்தி' யென்றும் 'தைவீப் பிரகிருதி' என்றும் பெயர். தைவீப் பிரகிருதி என்பது ஈச்சுவரனது குணமல்லது இயற்கையென்று அர்த்தமாகும். இதையே ஸ்ரீ கிருஷ்ணன் கீதாப்பிரபந்தத்தில் "எனது தைவீப் பிரகிருதியிதுவே" என்றும், "இதற்கு (அபரப்பிரகிருதிக்கும்) அப்பாலுள்ளதும், பிரபஞ்சத்தைத் தாரணம் பண்ணுவதுமாகிய மற்றோர் பிரகிருதி," என்றும் வருணிக்கின்றார்.

மாணுக்கன் இம்மஹத்துவந்துவங்களாகிய ஈச்சுவரன், மூலப்பிரகிருதி இவை ஒன்றிற்கொன்று எதிர்முகமாய் நிற்பதாகவும், அச்சமயத்தில் ஈசுவரனது திவ்விய சத்தியானது மூலப்பிரகிருதியை நோக்கித் திவ்விய தேஜோமயமாய் பிரகாசித்து அதனிடம் குணங்களை யுற்பத்தி பண்ணுகிறதாகவும், மனத்திற் பாவித்துக்கொள்ளல் வேண்டும். இக்குணங்கள் ஒன்றோடொன்று சம்பந்திப்பதால் ரூபங்கள் வெளிப்பட வாரம்பிக்கின்றன. இம்மஹா சக்தியே மாயை; ஆதலாற்றான் ஈச்சுவரனுக்கு 'மாயாபதி' என்ற நாமதேயம் கிடைக்கின்றது.

மிகச்சிறு பிள்ளைகளுங்கூட இப்பெயர்களையும், அவற்றின் பொருள்களையும் அறிந்து ஞாபகத்தில் நிறுத்திக்கொள்ள முயலவேண்டும். அல்லாவிடின் ஒவ்வொரு ஹிந்துவும் தெரிந்துகொள்ளவேண்டியதான பகவத்கீதையின் விஷயங்களை யவர்கள் அறிந்துகொள்ளச் சாத்தியப்படாது. மூலப்பிரகிருதியை 'மூல' என்னும் முதல்பாகத்தை நீக்கிப் பிரகிருதியென்னும் பதத்தாலேயே கூறும் பழக்கமுமுண்டு.

# பிரமாண சுலோகங்கள்.



## பகவத்கீதை அத்தியாயம் 7 (12–17).

1. ஜ்ஞேயம் யத்தத் ப்ரவக்ஷ்யாமி, யஜ்ஜ்ஞாத்வாம்ருதமஶ்நுதே ।
அநாதிமத் பரம் ப்ரஹ்ம ந ஸத் தந் நாஸதுச்யதே ॥

எதை யறிந்தால் ஜனனமரணமற்ற அமிர்த பதவி கிடைக்குமோ அந்த ஞேயபதார்த்தத்தை விளக்குகிறேன்—அதுவே ஆதியற்ற பரப்பிரமம். அது சத்துமல்ல, அசத்துமல்ல.

2. ஸர்வத: பாணிபாதம் தத் ஸர்வதோக்ஷிஶிரோமுகம் ।
ஸர்வத: ஶ்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்டதி ॥ 13.

அந்தப் பிரம்மமானது எவ்விடத்திலும் கைகளையும் கால்களையும், தலைகளையும், முகங்களையும், காதுகளையுமுடையது. உலகத்தில் சகலத்தையும் வியாபித்துக்கொண்டிருக்கிறது.

𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍁𑌣𑌾𑌭𑌾𑌸𑌂
𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍍 ।
𑌅𑌸𑌕𑍍𑌤𑌂𑌸𑌰𑍍𑌵𑌭𑍃𑌚𑍍𑌚𑍈𑌵
𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌂𑌗𑍁𑌣𑌭𑍋𑌕𑍍𑌤𑍃𑌚 ॥ 14.

சகல இந்திரிய குணங்களின் பிரகாசத்தையுமுடையது ; ஆனால் சகல இந்திரியங்களுமற்றது ; ஒன்றிலு மொட்டாதது ; ஆயினும் சகலத்தையும் தாங்குவது ; நிர்க்குணமானது ; ஆனால் சகலகுணங்களையு மனுபவிப்பது.

𑌬𑌹𑌿𑌰𑌨𑍍𑌤𑌶𑍍𑌚𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮
𑌚𑌰𑌂 𑌚𑌰𑌮𑍇𑌵 𑌚 ।
𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌤𑌦𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌦𑍂𑌰
𑌸𑍍𑌥𑌂𑌚𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑍇𑌚𑌤𑌤𑍍 ॥ 15.

சராசர வஸ்துக்களுக்கு உள்ளும் வெளியிலு நிரம்பியது ; சகல ஸ்தாவர ஜங்கம பதார்த்தங்களு மதுவே ; ரூப முதலியன அற்றதால் அறியக்கூடாததாயும் ஞானிகளுக்குச் சமீபத்திலும் அஞ்ஞானிகளுக்குத் தூரத்திலுமுள்ளது.

𑌅𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌂𑌚𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌵𑌿𑌭
𑌕𑍍𑌤𑌮𑌿𑌵𑌚𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 ।
𑌭𑍂𑌤𑌭𑌰𑍍𑌤𑍃𑌚𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌗𑍍𑌰
𑌸𑌿𑌷𑍍𑌣𑍁𑌪𑍍𑌰𑌭𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌚 ॥ 16.

பூதங்களிலே பிரிவற்றதானாலும் பிரிந்துநிற்பதுபோல் தோன்றுகிறது; பூதங்களை ரக்ஷிக்கிறது, சகலத்தையும் விழுங்குகிறது, அப்படியே யனைத்தையு முண்டுபண்ணுகிறது.

𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌾𑌮𑌪𑌿𑌤𑌜𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃
𑌤𑌮𑌸𑌃𑌪𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।

𑌜𑍍𑌞𑌾𑌨𑌂𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌗𑌮𑍍𑌯𑌂
𑌹𑍃𑌦𑌿𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑌵𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌮𑍍 ॥ 17.

சகல பிரகாசங்களுக்கும் ஆதி பிரகாசமாயும், சகல அந்தகாரத்திற்கும் புறம்பானதாயும், ஞானஸ்வரூபமாயும், சகல ஞானத்திற்கும் விஷயமாயும், சகல பிராணிகளுடைய ஹிருதயத்திலு மிருப்பதாயு மிருக்கிறது.

---

## மனுஸ்மிருதி.

𑌆𑌸𑍀𑌦𑌿𑌦𑌂𑌤𑌮𑍋𑌭𑍂𑌤𑌮𑌪𑍍𑌰
𑌜𑍍𑌞𑌾𑌤𑌮𑌲𑌕𑍍𑌷𑌣𑌮𑍍 ।

𑌅𑌪𑍍𑌰𑌤𑌰𑍍𑌕𑍍𑌯𑌮𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌪𑍍𑌰
𑌸𑍁𑌪𑍍𑌤𑌮𑌿𑌵𑌸𑌰𑍍𑌵𑌤𑌃 ॥

(ஆதியில் அது) தமோரூபமாயும், எவ்வித லக்ஷணங்களுமற்றதாயும் முற்றிலு மறியப்படாததாயு மிருந்தது.

எவ்விதத்திலும் யுக்தியால் கிரஹிக்க முடியாமலும், பூர்ணமான சுஷுப்தியில் இருப்பதுபோல் தோன்றுவதும், அறியமுடியாததாயுமிருக்கிறது.

𑌤𑌤𑌸𑍍𑌸𑍍𑌵𑌯𑌂𑌭𑍂𑌰𑍍𑌭𑌗𑌵𑌾𑌨
𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍋 𑌵𑍍𑌯𑌞𑍍𑌜𑌯𑌨𑍍𑌨𑌿𑌦𑌮𑍍 ।
𑌮𑌹𑌾𑌭𑍂𑌤𑌾𑌦𑌿 𑌵𑍃𑌤𑍍𑌤𑍌𑌜𑌾𑌃
𑌪𑍍𑌰𑌾𑌦𑍁𑌰𑌾𑌸𑍀𑌤𑍍𑌤𑌮𑍋𑌨𑍁𑌦𑌃 ॥

பிறகு அவ்யக்தமூர்த்தியான பகவான் மகாசத்தியோடும் கூடினவராய், மகாபூதங்கள் முதலியவை யணைத்தையும் உற்பத்தி பண்ணிக்கொண்டுசகல அந்தகாரத்தையும் போக்கடிப் பவராய்த் தானே தோன்றினார்.

𑌯𑍋𑌽𑌸𑌾𑌵𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌃
𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑍋𑌽𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌃 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌮𑌯𑍋𑌽𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌃
𑌸 𑌏𑌵 𑌸𑍍𑌵𑌯𑌮𑍁𑌦𑍍𑌬𑌭𑍌 ॥

இந்திரியங்களுக்கு மதீதமானவற்றால்கிரஹிக்கக் கூடியவரும், மிக சூக்ஷ்மமானவரும், அவ்யக்தரும், சாசுவதரும் சகல பூதங்களையும் தன்னுள்ளடக்கிக்கொண்டிருப்பவரும், சிந்தனைக் கெட்டாதவருமான அவர் தானே உற்பவித்தார்.

𑌅𑌹𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌗𑍁𑌡𑌾𑌕𑍇𑌶 𑌸
𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌶𑌯𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ।
𑌅𑌹𑌮𑌾𑌦𑌿𑌶𑍍𑌚 𑌮𑌧𑍍𑌯𑌂 𑌚 𑌭𑍂𑌤𑌾
𑌨𑌾𑌮𑌨𑍍𑌤 𑌏𑌵 𑌚 ॥ 20.

ஓ! அர்ஜ்ஜுனா! சகலப் பிராணிகளுடைய ஹிருதயத்தில் ஏவுகிறவனுயிருக்கிற பரமாத்மா நானே, நானே பூதங்களுக்கு ஆதிமத்தியாந்தமா யிருக்கிறேன்.

𑌦𑍍𑌵𑌾𑌵𑌿𑌮𑍌 𑌪𑍁𑌰𑍁𑌷𑍌 𑌲𑍋𑌕𑍇
𑌕𑍍𑌷𑌰𑌶𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑌰 𑌏𑌵 𑌚 ।
𑌕𑍍𑌷𑌰𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌕𑍂
𑌟𑌸𑍍𑌥𑍋𑌽𑌕𑍍𑌷𑌰 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ 16.

உலகத்தில் க்ஷரன், அக்ஷரன் என இருவகைப் புருஷர்களுண்டு. க்ஷரமே சகல பதார்த்தங்களும், அக்ஷரமென்பது அழிவற்ற சேதனமாகும்.

𑌉𑌤𑍍𑌤𑌮𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑍍𑌯𑌃 𑌪𑌰
𑌮𑌾𑌤𑍍𑌮𑍇𑌤𑍍𑌯𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌃 ।
𑌯𑍋 𑌲𑍋𑌕𑌤𑍍𑌰𑌯𑌮𑌾𑌵𑌿𑌶𑍍𑌯
𑌬𑌿𑌭𑌰𑍍𑌤𑍍𑌯𑌵𑍍𑌯𑌯 𑌈𑌶𑍍𑌵𑌰𑌃 ॥ 17.

இவ்விரண்டு புருஷர்களுக்கும் அன்னியமான உத்தமபுருஷன் ஒருவருண்டு. அவரே இம்மூன்று லோகங்களிலும் நிரம்பி சகலத்தையும் தாக்கும் அழிவற்ற ஈச்சுவரன் என்று கூறப்பட்டிருக்கிறது.

𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌕𑍍𑌷𑌰𑌮𑌤𑍀𑌤𑍋𑌽𑌹𑌮𑌕𑍍
𑌷𑌰𑌾𑌦𑌪𑌿 𑌚𑍋𑌤𑍍𑌤𑌮𑌃 ।
𑌅𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌲𑍋𑌕𑍇 𑌵𑍇𑌦𑍇 𑌚
𑌪𑍍𑌰𑌥𑌿𑌤𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌃 ।

நான் அசேதனத்தை யதிக்கிரமித்தவனாயும் சேதனத்தைக் காட்டிலு முத்தமனாயுமிருக்கிறேனாதலால் உலகத்திலும் வேதத்திலும் புருஷோத்தமனென்று எனக்குப் பிரசித்தி யேற்பட்டிருக்கிறது.

𑌮𑌮𑍈𑌵𑌾𑌂𑌶𑍋 𑌜𑍀𑌵𑌲𑍋𑌕𑍇
𑌜𑍀𑌵𑌭𑍂𑌤𑌃 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 ।
𑌮𑌨𑌃𑌷𑌷𑍍𑌠𑌾𑌨𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌪𑍍𑌰
𑌕𑍃𑌤𑌿𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌷𑌤𑌿 ।

எனது அச்சமே ஜீவலோகத்தில் அழிவற்றதாகிய ஜீவனாகிப் பிரகிருதியின் மத்தியிலுள்ள மனது முதலிய ஆறு இந்திரியங்களையும் ஆகருஷிக்கிறது.

𑌸𑌮𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁
𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑌂 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ।
𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑍍𑌸𑍍𑌵𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌂 𑌯𑌃 𑌪
𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ॥

அதிகாரம். 13-28.

ஸ்தாவர ஜங்கமமான சகல பூதங்களிலும் சமமாய்ப் பரமேசுவரன் விளங்குகிறானென்றும் அவைகள் நாசமடையும் போதும், அவன் நாசமடையாதவனென்றும், அறிபவனே பரமேசுவரனை யறிகிறான்.

𑌯𑌦𑌾 𑌭𑍂𑌤𑌪𑍃𑌥𑌗𑍍𑌭𑌾𑌵𑌮𑍇𑌕𑌸𑍍𑌥
𑌮𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ।
𑌤𑌤 𑌏𑌵 𑌚 𑌵𑌿𑌸𑍍𑌤𑌾𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮
𑌸𑌂𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌤𑌦𑌾 ॥ 30.

எப்பொழுது சகல பூதங்களின் பேதங்களும் ஒன்றினுடையவே யென்றும் (அந்தவொன்றிலிருந்தே அவையனைத்தும் கிளம்புகின்றன வென்றும்) ஒருவன் அறிவானேல் அப்பொழுதுதான் அவன்விசாலமான பிர்மத்தை யடைவான்.

𑌯𑌥𑌾 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌯𑌤𑍍𑌯𑍇𑌕𑌃 𑌕𑍃𑌤𑍍
𑌸𑍍𑌨𑌂 𑌲𑍋𑌕𑌮𑌿𑌮𑌂 𑌰𑌵𑌿𑌃 ।
𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍀 𑌤𑌥𑌾 𑌕𑍃𑌤𑍍
𑌸𑍍𑌨𑌂 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌯𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ॥ 31.

இவ்வுலக முழுமையையும் ஒரே சூரியன் பிரகாசிப்பிக்கிறதுபோல க்ஷேத்திரமான பிரபஞ்சத்திற்கு நாதனான பரமேசுவரன்யாவற்றையும் பிரகாசிப்பிக்கிறான்.

𑌭𑍂𑌮𑌿𑌰𑌾𑌪𑍋𑌽𑌨𑌲𑍋 𑌵𑌾𑌯𑍁𑌃
𑌖𑌂 𑌮𑌨𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍇𑌵 𑌚 ।
𑌅𑌹𑌂𑌕𑌾𑌰 𑌇𑌤𑍀𑌯𑌂 𑌮𑍇 𑌭𑌿𑌨𑍍𑌨𑌾
𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌰𑌷𑍍𑌟𑌧𑌾 ।

அத். 7. (4).

பூமி, ஜலம், அக்கினி, காற்று, ஆகாசம், மனது, புத்தி, அகங்காரம் இப்படி எட்டுவிதமாய் எனது பிரகிருதியே பிரிந்திருக்கிறது.

அபரேயமிதஸ்த்வந்யாம் ப்ர
க்ருதிம் வித்தி மே பராம் ।
ஜீவபூதாம் மஹாபாஹோ
யயேதம் தார்யதே ஜகத் ॥

அத். 7. (5).

ஓ! அர்ஜ்ஜுனா! மேற்குறித்த பிரகிருதி தாழ்ந்தது. இதைப் பார்க்கிலும் வேறானதும், இந்தப் பிரபஞ்சத்தைத் தரிப்பதும், ஜீவஸ்வரூபமானதுமான எனது பிரகிருதி இன்னமொன்றுண்டென்றறி.

ஸத்த்வம் ரஜஸ்தம இதி குணா꞉
ப்ரக்ருதிஸம்பவா꞉ ।
நிபத்நந்தி மஹாபாஹோ தே
ஹே தேஹிநமவ்யயம் ॥

அத். 14. (5.)

பிரகிருதியில் உற்பத்தியாகின்றவைகளான சத்துவ, ரஜஸ், தமோ குணங்கள், நாசரகிதனான ஆத்மாவைச் சரீரத்தில் பந்தப்படுத்துகின்றன.

# ஸநாதன தர்மம்.



## அதிகாரம் 2.

### ஏகம் அநேகமானது.

பிரபஞ்ச சிருஷ்டி சமயத்தில் ஈசுவரன் பிரகிருதியை நோக்கித் தன் வீக்ஷணத்தைச் செலுத்திய பிரகிருதியைப் பலவுருவங்களைத் தரிக்கும்படிச் செய்தார். இவைகளில் முதன்முத லுருவங்கள் ஈசுவரனது திரிமூர்த்தி ஸ்வரூபங்களே. இவைதாம் பிரம்மாவின் ஓர் அண்டமெனப்பொருள்தரும். இவை ஒருபிரம்மாண்டத்தைச் சிருஷ்டிக்கின்றன. ஒருபிரம்மாண்டமாவது உலகங்களின் ஒழுங்குபெற்ற தொகுதியல்லது மண்டலமாகும். இம்மூர்த்திகளுள்ளும் ஈச்சுவரனே நின்று பிரபஞ்ச சிருஷ்டியாதிகளைச் செய்கிறான். இவற்றில் உலகங்களைச் சிருஷ்டிபண்ணும் அம்சத்திற்குப் பிர்ம்மா வென்று பெயர். பிரம்மாவே சிருஷ்டிகர்த்தா. அப்படியே யுலகங்களைப் பரிபாலனம்பண்ணி ரக்ஷிக்கும் அம்சத்திற்கு 'விஷ்ணு' வென்றுபெயர். ஆதலால் 'விஷ்ணு'வே ஸ்திதியல்லது பரிபாலன கர்த்தா. இவ்விதமே உலகங்களெல்லாம் காலக்கிரமத்தில் க்ஷீணித்து ஜீர்ணமாகும் பொழுது அவற்றை லயப்படுத்தும் அம்சத்திற்கு 'மஹாதேவன்' அல்லது 'சிவன்' என்று பெயர். சிவனே உலகங்களின் லயகர்த்தா. இவைகள்தான் ஈசுவரனது பிரதம ஆவிர்ப்பாவங்கள். மஹாரூபங்கள், மூன்று மூர்த்திகள் அல்லது திருமுகங்கள். எனலாகும். ஆதலின் இவ்விதம்

ஏகமாகிய சகுணப்பிரமம் அல்லது பரமேசுவரன்மூவுருவமாகிறான்.

சிருஷ்டி கர்த்தாவாகிய பிர்ம்மாவானவர் பிரகிருதியை ஏழு தத்துவங்களாய்ப் பிரித்தார். இவைகட்குப் 'பூதங்கள்' என்ற பெயரிடப்பட்டிருக்கின்றன. இவற்றுள் முதலிரண்டுக்கும் பலபெயர்கள் இடப்படுகின்றன. மகத்புத்தி,' 'நிருவிகற்ப அறிவு,' பிரகிருதியைக் கணக்கற்ற அணுக்களாய் மாறும்படி செய்யும் தன்மை பொருந்தியதான, அகங்காரம்,' ஆகிய இப்பெயர்களை நாம் உபயோகிக்கலாம். பின்னைந்து தத்துவங்களுமடியில் வருமாறு. ஆகாசம் (Ether), வாயு, அக்கினி, அப்பு, பிரிதிவி ஆகிய இவைகளே. இது பூதாதி சிருஷ்டியென்று கூறப்படுகிறது. இப்பூதங்களாற்றான் சகல பதார்த்தங்களும் சிறிது பாகம் சிருஷ்டிக்கப்படுகின்றன. இப்பூதாம்சங்களில் சத்துவ ரஜோகுணங்களைக் காட்டிலும் தமோகுணமே மேலிட்டிருக்கின்றதாதலால் இவைகளிலதிகமாக அமைந்துள்ள பதார்த்தங்கள் யாவும் பந்தமும், ஜடத்தன்மையும் பொருந்தியவைகளாய் விளங்குகின்றன. இவற்றுள் பிரகாசிக்கும் ஜீவனும் தனது சக்திகளை வெளிப்படுத்த முடிகிறதில்லை. ஏனெனில் பிரகிருதியாலாகிய மூடமாகும் உபாதியானது ஜீவனைப் பூரணமாய்ப் பிரகாசிக்க வொட்டாதபடி யவ்வளவு ஸ்தூலமாயும் பளுவாயுமிருக்கின்றது.

இப்பூத சிருஷ்டிக்குப்பின் தசேந்திரியங்களும் சிருஷ்டிக்கப்படுகின்றன. இவை முதலில் பிர்ம்மாவின் மனதில் சங்கற்பரூபங்களாயிருந்து பின்னர் பூதங்களாலாகிய வுடலையடைந்தன. இவையாவன: (1) ஞானேந்திரியங்கள் ஐந்து, அவையாவன :—கந்தம், ரசம், ரூபம்,

ஸ்பரிசம், சத்தம் என்பனவாம். அவைகளின் ஸ்தானங்களாவன: மூக்கு, நாவு, கண்கள், த்வக் (சரீரமுழுவதும் மூடியிருக்கும் தோல்), காதுகள் ஆம். (2) கர்மேந்திரியங்கள் ஐந்து; இவைகளின் ஸ்தானங்களாவன: கரங்கள் வாக்கு, பாதம் பாயுருகுறி இவ்விந்திரியங்களில் தமோகுண சத்துவ குணங்களைக்காட்டிலும் ரஜோகுணமேயதிகமாய் விளங்குவதால் இவை விசேஷ சுறுசுறுப்பையுடையவைகளாகின்றன. இவற்றின்கண் அடங்கி நிற்கும் ஜீவனும் தன் சக்திகளில் முன்னிலு மதிகபாகத்தை வெளிப்படுத்திக்கொள்ளச் சக்தனாகிறான்.

இனி யிவ்விந்திரியங்களுக்குப் பின்னர் அவற்றோடும் சம்பந்தமுடைய தேவர்களையும் மனதையும் தன் மனதில் சிருஷ்டி பண்ணினார். இம்மனதை முதலுள்ள பஞ்சேந்திரியங்களைப் பேசும்பொழுது ஆறாமிந்திரியமென்றும், தசேந்திரியங்களையும் கிரஹிக்கும்பொழுது பதினோரு மிந்திரியமென்றும் கூறுவதுண்டு. ஏனெனில் பாஹிய வுலகத்தினின்று மிந்திரியங்களால் கிரஹிக்கப்பட்ட சகல வுணர்ச்சிகளையு மொன்றோடொன்று இணைத்து 'ஒப்பிட்டுப் பார்த்துப்' பின்னரவற்றைத் தனதாக்கிக்கொள்ளு மியற்கையை யுடையதாதலால், இம்மனதும் ஓரிந்திரியமென வியவகரிக்கப்படுகின்றது. இத்தேவர்கள், மனது, ஆகிய இவற்றில் ரஜோகுண தமோகுணங்களைக் காட்டிலும் சத்துவ குணமே மேலிட்டு விளங்குகின்றது.

இங்குபிள்ளைகள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டியதாவது இம்முக்குணங்களும் எக்காலத்திலும் ஒன்றைவிட்டொன்று பிரிந்து தனியே யுள்ளனவல்ல. பின்னை ஒவ்வொரு ஜந்துக்களில் ஒரு குணம்

மற்றவைகளைக் காட்டிலு மதிகப்பட்டுநிற்குமென்பதே. இவ்விதம் தமோகுணம் மேலிட்டிருக்கும்பொழுது அந்த ஜந்துவை தாமஸ ஜந்துவென்றும், அப்படியே ரஜோகுண மதிகப்பட்டிருக்கும்பொழுது ராஜஸ ஜந்துவென்றும், அவ்விதம் ஸத்வம் மேலிட்டிருக்கும்பொழுது, ஸாத்துவீக ஜீவனென்றும், சொல்லுவது வழக்கம். ஆதலி னிம்மாதிரி சகல வஸ்துக்களையும் ஸாத்துவீக, ராஜஸ தாமஸங்களாகிய முப்பிரிவுகளாய்ப் பிரிக்கலாம்.

பிற்பாடு பிர்ம்மாவானவர் ஈச்சுவரனது ஆக்ஞைகளை நிறைவேற்றுகிறவர்களும் சிருஷ்டி ஸ்திதி, லயமாகிய பிரபஞ்ச காரியமனைத்தையும் நிர்வஹிப்பவர்களுமான தேவகணங்களைத் தன் மனதில் உண்டு பண்ணினார். ஈச்சுவரனே அரசன், ஏகச்சக்கிரவர்த்தியாம்; இவ்வுலகில் அரசனுக்கு மந்திரிகளைப்போலவே அவ்வீச்சுவரனுக்குத் தேவர்களும் மந்திரிகளாம். பிரம்மம், பரமேசுவரன், இத்தேவர்கள், யாவும் ஒன்றெனவெண்ணிப் பிள்ளைகள் குழப்பத்தையடைதல் கூடாது. இவ்வுலகில் மானிடராகிய நாமனைவரும் ஈச்சுவரனுக்கு எப்படிக் காரியஸ்தர்களோ அப்படியே பிர்ம்மாண்டத்திற்கும் தேவர்கள் ஈச்சுவரனது காரியஸ்தர்களாகிறார்கள்.

இத்தேவர்களுக்கு 'சுரர்' என்னுமொரு நாமதேயமுமுண்டு. இவர்கள் இவ்வுலகில் ஒவ்வொரு மனிதனும் தன் கருமத்தால் அடையவேண்டிய அனுபவங்களையடையும்படிச் செய்விக்கிறார்கள். அவர்களே உலக வியவஹாரங்களில் அவரவர் பாக்கியா பாக்கியத்திற்குத் தக்கபடி ஜயாபஜயங்களைத் தருகிறார்கள். தங்கட்குப் பிரீதியுண்டாக்கும் மனிதர்க்கு அநேகவிதமாய் உதவி

களையும் செய்கிறார்கள். இவ்வுலகில் தேசங்கட்குப் பொதுவாய் ஏற்படுங் கெடுதியாகிய காலவியற்கை, வியாதிகள், பஞ்சம் முதலிய உபத்திரவங்களில் பொரும்பாலும், மனிதர் தேவர்கட்குச் செய்யவேண்டிய கடமைகளைச் செய்யாது அசட்டை செய்து வருவதாற்றான் சம்பவிக்கின்றன. தேவர்கள் எண்ணிருந்த ஒரு பெருங்கூட்டத்தார். இவர்கள்: இந்திரன், வாயு, அக்கினி, வருணன், குபோன் ஆகிய இவ்வைந்து அதிபர்களுக்கும் கீழ்ப்பல வகுப்புக்களாய்ப் பிரிக்கப்பட்டிருக்கிறார்கள். இவருள் இந்திரன் ஆகாசத்திற்கும், வாயு, காற்றிற்கும், அக்கினி நெருப்பிற்கும், வருணன் அப்புவுக்கும், குபேரன் பிருதிவிக்கும் சம்பந்தமுடையவர்கள். இவ்வதிபர்கட்குக் கீழ்ப்பட்ட தேவர்களின் ஒவ்வோர் வகுப்பிற்கும் புராணேதிகாசங்களில் கூறியிருக்கிறபடி வெவ்வேறு நாமதேயங்கள் உண்டு. உதாரணம்:—குபேரனுடைய கிங்கரர்களான 'யக்ஷர்' களோடு பீமன் யுத்தம் பண்ணினனென்பது பிள்ளைகளுக்கு ஞாபகமிருக்கலாமன்றோ!

இத்தேவர்களிடத்தில் ரஜோகுணம் விசேஷித்திருக்கிறது. 'இவர்களது சுபாவம் ராஜஸமாகிய கிரியையே' என மனு கூறுகிறார்.

தேவர்களுக்குச் சத்துருக்களான அசுரர்கள் பிரகிருதியின் ஜாட்டியம் அல்லது பந்தரூபமான தாமோகுணம்சமயமானவர்கள். இவர்களிடம் தமோகுணமே மேலிட்டிருக்கின்றது.

இவை யெல்லாவற்றிற்கும் பிறகு, பிர்ம்மா உலோகங்கள், கந்தமூலங்கள், மிருகங்கள் மனிதர் சமுதாயம் ஆகிய இவைகளைத் தன் மனதாற் சிருஷ்டி பண்ணி

ளுர். ஜீவன் தன்னிடத்தில் மடங்கியிருக்கும் சக்திகளைப் பிரகாசப்படுத்திக்கொள்ளும் வழியாகிய ஜகத்பரிபாகம் நடக்கப்போகிற உகைங்களின் ஸ்திதிகளத்தனையையும் மேற்கூறியப் பிர்ம்மா தன் மனதில் சித்திரத்தைப்போல் சங்கற்பித்துக்கொண்டார். இந்த ஜகத்பரிபாக மார்க்கத்திற்குச் சமுஸ்கிருத பாஷையில், 'சம்சார' மென்று பெயர். அதைச் சதாகாலமும் சுழன்றுகொண்டிருக்கும் சக்கிரமென வர்ணித்திருக்கிறார்கள். இச்சக்கிரத்தில் சகல ஜீவர்களும் கட்டுண்டிருப்பதாய்க் கூறப்பட்டிருக்கிறது.

இவ்விதம் பிர்ம்மாவானவர் பிரபஞ்ச நிர்மாணத்தில் தன் வேலையைமுடித்தவுடன் இவரால் சிருஷ்டிக்கப்பட்ட சகல பதார்த்தங்களும் கேவலம் சங்கற்ப வுருவங்களாயிருந்தமையினால் ஸ்தூலப் பிரகிருதியில் ரூபங்களை யபேக்ஷித்தவைகளாயிருந்தன. இவ்வேலையை ஜகத்துமுழுவதிலும் வியாபித்துத் தரித்து ரக்ஷணம் பண்ணும் விஷ்ணுவானவர் செய்கிறார். இவர் இவ்த சங்கல்ப சிருஷ்டிக ளத்தனையிலும் தனது சைதன்யத்தைச்செலுத்துகிறார். இதற்கு நிதரிசனமாக ஓர் புராணத்திற் கூறப்பட்டிருப்பதாவது: என்னென்றால் "இவர் அநந்தவிதமான பிராணனுகி அவைகளுக்கெல்லாம் சேதனத்தையளித்தார்." என்பதேயாம். பிறகு தான் பிர்ம்மாண்டமுழுவதும் உயிர்த்துச் சேதனத்தையடைந்தது. பின்னர் மனிதன் தோன்றியபொழுது இதுவும் போதவில்லை. ஈச்சுவரனது இரண்டு மூர்த்திகளாகிய பிர்ம்மா, விஷ்ணுயிவ்விருவரும் தமது சேதனங்களை யளித்தபிறகு மூன்றும் அம்சமாத்திரம் பாக்கியிருந்தது. இவர்தான் உலகங்களில் சரீரங்களாகிய பந்தங்

களினின்றும் ஜீவர்களை விடுவித்து அவர்களை ஆதியாதாரமாகிய பரவஸ்துவுடன் ஐக்கியமடைந்து ஆனந்தமனுபவிக்கும்படிச் செய்விக்கின்ற மூர்த்தியான மகாதேவர். திரிமூர்த்தியாகிய ஈச்சுவரனது பூர்ணமான பிரதிபிம்பமாக ஜீவனுமாகவேண்டியதற்கு இம்மகாதேவரது அம்சமும் அவசியமன்றோ!. ஆதலால் இவரது அம்சமும் ஜீவனுக்களிக்கப்பட்டது. பிறகு சென்ற கற்பங்களில் கல் மண் புற்பூண்டு மிருகாதிகளின் நிலைமைகள் யாவையுந்தாண்டி வந்திருக்கும் ஜீவன் இப்பொழுது மானிட மகாவர்க்கத்துள் பிரவேசிக்கிறுன். ஜீவன் கந்தமூலாதி மிருகங்களின் வழியாய் மனிததசையடைந்து ஆத்துமா தன்னிடம் பிரகாசிக்கப் பெறுவதும், இம்மனிதனுகும்' மூர்த்தநிலைமையினின்றுமேயப்பால் ஜனனமரணமற்ற அமூர்த்த நிலைமையான மோக்ஷத்தை நாடுவதுமான இம்மானிட பரிபாக மஹாபதவியைப்பற்றிய வொரு அற்புதமான வருணனையை உங்களுக்குள் சிறிதுவயதான பிள்ளைகள் யதரேய ஆரணத்திற் காணலாம். இவ்விஷயத்தைப் பற்றி மேல்வாசகப்புஸ்தகத்தில் படிக்கலாம்.

இவ்விஷ்ணுவின் விசேஷ ஆவிர்ப்பாவங்களுக்கு அவதாரங்கள் என்று பெயர். இவற்றை யவசியம் ஞாபகத்தில் வைத்தல்வேண்டும். அவதாரம் என்னும் பதம் கீழே என்று பொருள் தரும்; 'அவ' என்னுமுபசருக்கத்தோடு சேர்ந்த, இறங்குதல் என்னும் கருத்தையுடைய 'த்ரு' தாதுவிலிருந்து வந்தது. உலகின்கண் சிலசமயங்களில் ஒவ்வோர் காரியங்களைச் செய்துமுடிக்கும்வண்ணம் ஈச்சுவரன் சரீரங்களை தரித்துக் காட்டிக் கொள்ளும் ஆவிர்ப்பாவங்களுக்கு இப்பெயரளிக்கப்

பட்டிருக்கிறது. உலகில் அதர்மம் மேலிட்டு வியவஹாரங்கள் முற்றிலும் கெட்டுவரும்பொழுது உலகமே யழிந்துவிடாவண்ணம் அதைச் சீர்திருத்தித் தர்ம மார்க்கத்தில் மீளவுஞ் செலுத்தும் நிமித்தம் உதவி புரிவதற்காக விஷ்ணுவானவர் ஏற்ற ரூபங்களைத் தாங்கி யவதரித்து தர்ம ஸம்ஸ்தாபனம் செய்கிறார்.

இவரது அவதாரங்களுள் பத்து அவதாரங்கள் மற்றவைகளைக் காட்டிலும் முக்கியமானவையெனக் கிரஹிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றிற்குத் தசாவதாரங்கள் என்று பெயர். அவையாவன:—

(1) மச்சம், அல்லது மீன் - வைவசுவதமனுவானவர் ஒரு காலத்தில் ஜலத்திற்குள் தத்தளித்துக்கொண்டிருக்கும் ஒரு சிறு மீனைக்கண்டார். அவர் உடனே யதையெடுத்து ஒரு கிண்ணத்திற் போடவே அதுவும் வளர்ந்து விர்த்தியடைந்தது. அதைப்பார்த்து அவர் இன்னுமொரு பெரிய பாத்திரத்தில் விட்டார். பிறகு இன்னுமொரு பெரிய பாத்திரத்திலும், பிறகு ஒரு குளத்திலும், பிறகு ஒரு தடாகத்திலும், அப்படி [illegible] ஒரு நதியிலும், கடைசியில் சமுத்திரத்திலும் கிரமமாய்ப் போட்டுவர, மச்சமானது பருத்து விர்த்தியடைந்து எதிற்போட்டாலு மதையெல்லாம் நிரப்பிவந்தது. இதைக்கண்ட மனுவும் இம்மச்சத்தைத் தான் செய்து முடிக்கவந்த மஹா காரியத்திற்கு அவசியமான ஓர் பதார்த்தமென்று அறிந்தார். பிறகு குறித்த காலம் வந்தவுடன் அவர் ஸமஸ்த ஜீவபீஜங்களையும் பிரளய காலப் பிரவாஹத்தினின்றும் ரக்ஷிக்கும்பொருட்டு அப்பீஜங்களுடன் தனக்குச் சகாயர்களான மஹாருஷிகளோடு ஒரு கப்பலி லேறிக்கொள்ளவே இம்மச்சம்

தோன்றிக் கப்பலேயிழுத்துச்சென்று மனுவின் காரியம் நிறைவேறவேண்டிய வுலகத்தில் சேர்ப்பித்தது. இம் மச்சாவதாரகாலத்தில் மிருகவர்க்கத்தின் பரிபாகம் ஆரம்பிக்கிறது.

(2) கூர்மம் - ஆமை. ஆமையாக விஷ்ணு அவதரித்துப் பிரகிருதியாகும் மகா சமுத்திரத்தில் சுழன்று வரும் பெரும்பர்வதத்தை முதுகினற் ருங்கினர். இக் கடல் கடைதல் உலகில் அவசியமான ரூபங்களைச் சிருஷ்டிப்பதற்காகச் சம்பவித்தது. (ஆதியில் திருப்பாற் கடல் கடைந்த சமயத்தில் சந்திரன், லக்ஷ்மி, உச்சைச் சிரவம், கௌஸ்துபம், முதலிய ரூபங்களுண்டாயின வென்று புராணத்தில் கேட்டிருக்கிறீர்க ளல்லவா). ஆமையானது ஜகத்பரிபாகத்தில் அடுத்த படியைச் சேர்ந்த ஜந்துவாகும்.

(3) வராகம் - பன்றி. உலகம் ஜலத்தின் கீழமிழ்ந்திரு பொழுது விஷ்ணுவானவர் இவ்வவதாரம் செய்து பூமியை மேற்றாக்கினர். அப்பொழுது ஜலம் வற்றின மேட்டுத்தரையில் வாழுமியற்கை யுடையதும், குட்டிக்குப் பால்கொடுக்கு மியல்புடையதுமான, மிருகவர்க்கத்தை முதல் முதல் உண்டுபண்ணினர்.

மேற்றிசைப் பிரத்தியக்ஷ விசாரத்தார் இம்மூன்று ஸ்திதிகளையும் ஜகத்பரிணமத்தின் அவஸ்தைகளல்லது படிகளென்று கண்டுபிடித்திருக்கிறார்கள். இவ்வவஸ்தைகளை ஹிந்துமதத்தில் ஒவ்வொரு அவதாரங்கள் குறிப்பிட்டுக்காட்டுகின்றன.

(4) நரசிம்மம்-நரனும் சிம்மமும். இது தைத்தியர்களின் கொடுமையினின்றும் உலகத்தை ரக்ஷிப்பதற்கு எழுந்த அவதாரம். இந்த தைத்தியவர்க்கத்திற் பிறந்த

'பிரஹ்லாதன்' என்னும் ஒரு குழந்தை இளமைப் பருவமுதற்கொண்டே விஷ்ணுவினிடம் பரமபக்திசெய்து வந்தது. இதைக்கண்டு அதனது தைத்திய பிதா அநேக விதமாய்ப் பயமுறுத்திக் கணக்கற்ற கொடுமைகளைப் புரிந்தும் குழந்தை தன் பக்தியை விடவில்லை. பின்னுமக்குழந்தையைக் கொன்றுவிடுவதற்குத் தந்தை அளவற்ற பிரயத்தனங்களைச்செய்தான். இவையனைத்தினின்றும் விஷ்ணுவே அக்குழந்தையைத் தப்புவித்துக்கடைசியில் ஓர் தூணிலிருந்து புருஷ சிம்மாகிருதியுடன் திடீரெனத்தோன்றி அந்தத் தைத்தியவரசனைக் கொன்றார்.

(5) வாமனம் - குள்ளம். பிறகு மானிட வர்க்கத்தின் பரிபாகத்தை நடாத்தும் நிமித்தம் மனிதனுயவதரித்தார். பலிச்சக்கரவர்த்தியினிட மிருந்து தன் மூன்றடிகளா லளக்கக்கூடிய அவ்வளவு நிலத்தைத் தனக்குத் தியாகமாகப் பெற்றுக்கொண்டார். ஓரடி பூலோக முழுவதும் பரவி மூடிற்று. இவ்விதம் மனுஷிய பரிபாகஸ்தானமாகிய திரிலோகம் ஏற்பட்டது.

(6) பரசுராமாவவதாரம் - பரசுராமன் - கோடரியாயுதமுடைய ராமன். இவ்வவதாரம், ஜனங்களுக்குக் கொடுமைபுரிந்துவந்த க்ஷத்திரியர்களைத் தண்டிக்கவும், அக்கிரமஸ்தர்களான அரசர்கட்கு லோகோபகாரத்திற் குபயோகப்படுத்தவேண்டிய சக்தி அல்லது அதிகாரத்தை ஜனங்களை ஹிம்சித்தற் குபயோகிப்பதால் வரும் பலனின்னதெனக் கற்பிப்பதற்கும் உண்டாயிற்று.

(7) ஸ்ரீராமாவவதாரம் - இதில் இவரை (விஷ்ணுவை) இராமசந்திரன் என்றழைப்பது வழக்கம். இவர் தசரதமகாராஜாவின் குமாரராய் மூன்று சகோதரர்களுடன் பிறந்து க்ஷத்திரிய தர்மத்தை விளக்கவந்தவர்.

இவர்தான் அரசனிருக்கவேண்டிய நிலைமைக்கு ஓர் பூரணமான உதாரணமாய் நின்றவர். அவ்விதமே பூரண பரிபாகமுடைய நரனாகவும் விளங்கினர். பிதாவிடத்தில் வினயமும் பக்தியுமுள்ள குமாரனாகியும், பத்தினியிடத்தில் மிக்க வன்புள்ள பர்த்தாவாகியும், பராக்கிரமமுள்ள போர்வீரனாயும், மிக நேசமுள்ள சகோதரனாயும், ஆழ்ந்த யோசனையுள்ள வரசனாயும், ஜனங்களை ரக்ஷிப்பதில் சதாஜாக்கிரதை யுடையவராயும் இவர் விளங்கினபடியால் நரரில் உத்தமரென்று சொல்லுவதற்கு ஆக்ஷேபனமுமுளதோ ? இவரது அற்புத சரித்திரம் வால்மீகராமாயணத்தில் விஸ்தாரமாய்க் கூறப்பட்டிருக்கின்றது. இவ்வவதாரவிஷயமாய்த் 'துளசிதாஸர்' இயற்றியிருக்கும் ரமணீயமான ராமாயண சரித்திரம் ஒன்றும் வடவிந்தியாவில் பிரதி கிருஹத்திலும் வழங்கி வருகின்றது.

(8) ஸ்ரீ கிருஷ்ணவவதாரம்—ஈசுவரனது கருணை, ஞானமாகிய இவ்விரண்டையும் விளக்கவந்த வவதாரமிதுது. எண்ணிறந்த கோடி ஜனங்கள் மிகுந்த பக்தியுடன் இவரை யுபாசிக்கிறார்கள். கோகுலம், பிருந்தாவனம் ஆகிய விப்பிரதேசங்களில் நடமாடிய அற்புதச் செல்வச் சிறுவராயும், அர்ச்சுனனுக்கு மித்திரராயும், பகவத்கீதையை மொழிந்த ஆசிரிய வள்ளலாயும், பாண்டவருக்குச் சஹாயராயும், பீஷ்மர்போற்றிய பெரியோராயும் விளங்கிய விவரது சரித்திரத்தை யறியாத ஹிந்து சிறுவனுமுண்டோ ? மஹாபாரதத்தில் நடுநாயகமாயுள்ளவரிவரே. இவருடைய சரிதம் அநேக புராணங்களில் காட்டப்பட்டிருக்கிறது.

9. ஸ்ரீ புத்தாவவதாரம் - இந்தப் புத்தர் இராஜ்ஜி

யம், சம்பத்து முழுமையும் தியாகம்பண்ணிச் சத்திய மல்லது தர்மத்தை யுபதேசிப்பவராய்ச் சந்யாஸியாகிச் சஞ்சாரம் செய்துவந்த அரசகுமாரனுவர். இவருக்குச் சாக்கியமுனிவரென்றும், கௌதமரென்றும், சித்தார்த் தரென்றும் பெயர்களுண்டு. இவர், தற்காலத்தில் கோடிக்கணக்கான மனிதர்களால் அனுஷ்டிக்கப்படும் ஒரு பெரும் மதத்தை ஸ்தாபித்தவர். இவ்வவதாரத்தில் ஆரியரல்லாத இதர ஜாதிகளில் அநேகருக்கு விஷ்ணுவானவர் உபதேசித்தருளினுர்

10. கல்கி. இது கலியுகத்தின் அந்தத்தில் உதிக்கப்போகிற அவதாரம். இவ்வவதாரம் வரும்பொழுது சத்தியயுகம் பழையபடி பூமியில் திரும்பிவரும்; அப்பொழுது ஒரு நூதன கல்பமும் ஆரம்பிக்கும்.

மனுஷியவர்க்கத்தின் பரிபாகத்தையும் முதிர்ச்சியையுமே இவ்வவதாரங்கள் குறிப்பிடுகின்றன.

## பிரமாண சுலோகங்கள்.

𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿𑌦𑍇𑌵𑌾𑌂𑌸𑍍𑌤𑌵𑌦𑍇
𑌵𑌦𑍇𑌹𑍇𑌸𑌰𑍍𑌵𑌾𑌂𑌸𑍍𑌤𑌥𑌾𑌭𑍂𑌤
𑌵𑌿𑌶𑍇𑌷𑌸𑌂𑌘𑌾𑌨𑍍 ।

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌮𑍀𑌶𑌂 𑌕𑌮𑌲𑌾𑌸𑌨
𑌸𑍍𑌥𑌮𑍃𑌷𑍀𑌂𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍁𑌰𑌗𑌾𑌂
𑌶𑍍𑌚 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑍍 ॥

𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌾𑌵𑌸𑌵𑍋 𑌯𑍇
𑌚𑌸𑌾𑌧𑍍𑌯𑌾𑌵𑌿𑌶𑍍𑌵𑍇𑌽𑌶𑍍𑌵𑌿𑌨𑍌𑌮𑌰𑍁
𑌤𑌶𑍍𑌚𑍋𑌷𑍍𑌮𑌪𑌾𑌶𑍍𑌚 ।
𑌗𑌂𑌧𑌰𑍍𑌵𑌯𑌕𑍍𑌷𑌾𑌸𑍁𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑌂
𑌘𑌾𑌵𑍀𑌕𑍍𑌷𑌂𑌤𑍇𑌤𑍍𑌵𑌾𑌂 𑌵𑌿𑌸𑍍𑌮𑌿𑌤𑌾𑌃
𑌶𑍍𑌚𑍈𑌵𑌸𑌰𑍍𑌵𑍇 ॥

“ஓ! தேவனே! உம்முடைய விசுவரூபமாகிய சரீரத்தில் இந்திராதி தேவதைகளையும் அப்படியே ஈசனையும், கமலாசனராகிய பிர்ம்மாவையும் சகலமான ருஷிகளையும், பலவித ஸ்தாவர ஜங்கமங்களாயுள்ள பூதக்கூட்டங்களையும், திவ்யங்களான சர்ப்பங்களையும் பார்க்கிறேன்.

பகவத்கீதை அத். 11. (15) (22).

"ருத்திரர்களும் ஆதித்தர்களும், வசுக்களுமஸாத்தியர்கள் என்ற தேவதைகளும், விஸ்வாசுவினி தேவதைகளும், மருத்துக்களும், பிதிர் தேவதைகளும், கந்தர்வ யக்ஷாசுர சித்தர்களின் கூட்டங்களும் சகலமானவர்களும் ஆச்சரியத்துடன் உம்மை யிடைவிடாமல் பார்க்கிறார்கள்.

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌮𑌿𑌤𑍍𑌰𑌂𑌵𑌰𑌣𑌮𑌗𑍍𑌨𑌿𑌮𑌾
𑌹𑍁𑌰𑌥𑍋 𑌦𑌿𑌵𑍍𑌯𑌸𑍍𑌸 𑌸𑍁𑌪
𑌰𑍍𑌣𑍋 𑌗𑌰𑍁𑌤𑍍𑌮𑌾𑌨𑍍 ।

𑌏𑌕𑌂𑌸𑌦𑍍𑌵𑌿𑌪𑍍𑌰𑌾𑌬𑌹𑍁𑌧𑌾𑌵𑌦-
𑌨𑍍𑌤𑍍𑌯𑌗𑍍𑌨𑌿𑌂𑌯𑌮𑌂 𑌮𑌾𑌤𑌰𑌿𑌶𑍍𑌵𑌾𑌨𑌮𑌾
𑌹𑍁𑌃 ॥

ருக்வேதம் (CLXIV. 46).

இந்திர னென்றும், மித்திரனென்றும் வருணன் அக்கினியென்றும், அவரையேயழைக்கின்றார்கள்; அவரே சுவர்ண பக்ஷங்களையுடைய கருடன். ஏகனாகிய விவனையே பெரியோர்கள் அநேக ரூபங்களாய் வருணிக்கிறார்கள். அவனையே அக்நி, வருணன், யமன் மாதரிசுவாவெனக் கூறுகின்றனர்.

𑌆𑌤𑍍𑌮𑍈𑌵𑌦𑍇𑌵𑌤𑌾𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌃
𑌸𑌰𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 ।

மனுஸ்மிருதி 12. (119.)

ஆத்மாவே சகல தேவதைகளும்; சகலமும் ஆன்மாவினிடமே வசிக்கின்றன.

𑌏𑌤𑌮𑍇𑌕𑍇 𑌵𑌦𑌨𑍍𑌤𑍍𑌯𑌗𑍍𑌨𑌿𑌂 𑌮𑌨𑍁
𑌮𑌨𑍍𑌯𑍇 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌂 ।

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑍇𑌕𑍇 𑌪𑌰𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣
𑌮𑌪𑌰𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌂 ॥

மனுஸ்மிருதி 12. (123.)

சிலர் இவனை அக்நியென்றும், சிலர் மனுவென்றும், சிலர் பிரஜாபதியென்றும், சிலர் இந்திரனென்றும் சிலர் பிராணனென்றும் சிலர் சாசுவதப்பொருளாகிய பிரமனென்றும் கூறுகிறார்கள்.

𑌯𑌥𑌾𑌸𑍁𑌦𑍀𑌪𑍍𑌤𑌾𑌤𑍍𑌪𑌾𑌵𑌕𑌾𑌤𑍍𑌵𑌿
𑌸𑍍𑌫𑍁𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌃 𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑌃 𑌪𑍍𑌰𑌭
𑌵𑌨𑍍𑌤𑍇 𑌸𑌰𑍂𑌪𑌾𑌃 ।

𑌤𑌥𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌾𑌃 𑌸𑍋𑌮𑍍𑌯
𑌭𑌾𑌵𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑌤𑍍𑌰
𑌚𑍈𑌵𑌾𑌪𑌿𑌯𑌨𑍍𑌤𑌿 ॥

ஜ்வலிக்கும் அக்நியினின்றும் ஒரே ரூபங்களான பொறிகள் ஆயிரங்கணக்காய்க் கிளம்புவது போலவே, அந்த அழிவற்ற ஏகவஸ்துவினின்றும் கணக்கற்ற பிராணிக்கூட்டங்கள் கிளம்புகின்றன. பின்னரதனிடமே யடங்குகின்றன.

ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராணோ மனஸ்ஸர்வேந்த்ரியாணி ச ।
கம் வாயுர்ஜ்யோதிராப: ப்ருதிவீ விச்வஸ்ய தாரிணீ ॥

இதனின்றுமே பிறந்தன பிராணனும், மனதும், சர்வேந்திரியங்களும்;
அப்படியே வாயுவு மக்கினியும், அப்பும் சர்வத்திற்கு மாதாரமாகிய பிரிதிவியும்.

தஸ்மாச்ச தேவா பஹுதா ஸம்ப்ரஸூதா: ।
ஸாத்யா மனுஷ்யா: பசவோ வயாம்ஸி ॥

அதனிட மிருந்தே அநேகவிதமாய்த் தேவர்களும் சாத்தியர்களும், மனிதர், மிருகம், பக்ஷிகளும் உண்டாயினர்.

ஸத்த்வாத்ஸஞ்ஜாயதே ஜ்ஞானம் ரஜஸோ லோப ஏவ ச ।
ப்ரமாதமோஹௌ தமஸோ பவதோऽஜ்ஞானமேவ ச ॥
ஊர்த்வம் கச்சந்தி ஸத்த்வஸ்தா மத்யே திஷ்டந்தி ராஜஸா: ।
ஜகன்யகுணவ்ருத்திஸ்தா அதோ கச்சந்தி தாமஸா: ॥

ஸத்துவத்தினின்றும் ஞானமுதிக்கின்றது. ரஜஸினின்றும் லோப முண்டாகின்றது;
மோஹம், அஜாக்கிரதை, அஞ்ஞான மிவை தமஸினிடம்ஜனிக்கின்றன.
சத்துவத்திலிருப்பவர்கள் மேலே கிளம்புகிறார்கள். ரஜஸிலுள்ளவர்கள் மத்தியில் நிற்கின்றார்கள். அதமகுண சுபாவமுடையவரான தாமஸர்கள்கீழ்ச்செல்லுகின்றார்கள்.

𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂𑌸𑍁𑌖𑍇𑌸𑌂𑌜𑌯𑌤𑌿𑌰𑌜𑌃
𑌕𑌰𑍍𑌮𑌣𑌿𑌭𑌾𑌰𑌤 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌵𑍃𑌤𑍍𑌯 𑌤𑍁𑌤𑌮𑌃 𑌪𑍍𑌰
𑌮𑌾𑌦𑍇𑌸𑌂𑌜𑌯𑌤𑍍𑌯𑍁𑌤 ॥

"ஓ! அர்ஜ்ஜுநா! சத்துவகுணமானது சுகத்திலும், ரஜோகுணமானதுகருமத்திலும், தமோகுண மானது ஞானத்தை மறைத்து அஜாக்கிரதை யி லும் சேர்ப்பிக்கின்றன.

𑌰𑌜𑌸𑍍𑌤𑌮𑌶𑍍𑌚𑌾𑌭𑌿𑌭𑍂𑌯𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌭
𑌵𑌤𑌿𑌭𑌾𑌰𑌤 ।
𑌰𑌜𑌃𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂𑌤𑌮𑌶𑍍𑌚𑍈𑌵 𑌤𑌮𑌃𑌸
𑌤𑍍𑌤𑍍𑌵𑌂𑌰𑌜𑌸𑍍𑌤𑌥𑌾 ॥

"சத்வகுணமானது ரஜஸ்தமோ குணங்களையும், ரஜோகுணம் சத்துவ தமோகுணங்களையும், அப்படியே தமோகுணமானது சத்துவரஜோ குணங்களையும் அடக்கிக் கிளம்புகின்றன.

𑌸𑌰𑍍𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌷𑍁𑌦𑍇𑌹𑍇
𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌉𑌪𑌜𑌾𑌯𑌤𑍇 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌂𑌯𑌦𑌾𑌤𑌦𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌦𑍍𑌵𑌿𑌵𑍃
𑌦𑍍𑌧𑌂𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌤 ॥

இத்தேகத்தில் சகல துவாரங்களிலும் ஞானசொரூபமான பிரகாசம் உண்டாகும் பொழுது சத்துவம் மேலிடுகிறதாய் அறியலாம்.

𑌲𑍋𑌭𑌃𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑌾𑌰𑌮𑍍𑌭𑌃
𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑌶𑌮𑌃𑌸𑍍𑌪𑍃𑌹𑌾 ।
𑌰𑌜𑌸𑍍𑌯𑍇𑌤𑌾𑌨𑌿𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇
𑌵𑌿𑌵𑍃𑌦𑍍𑌧𑍇𑌭𑌰𑌤𑌰𑍍𑌷𑌭 ॥

"ஓ! பரதசிரேஷ்டனே! இரஜோகுணமபிவிர்த்தியாகும் பொழுது, பொருளாசை, காரியங்களில் முயற்சி, கருமங்களைத் தொடங்குதல், சித்தத்தின் பரபரப்பு, இச்சை, யிவை தோன்றும்.

𑌅𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑍋𑌽𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌶𑍍𑌚
𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑍋𑌮𑍋𑌹𑌏𑌵𑌚 ।
𑌤𑌮𑌸𑍍𑌯𑍇𑌤𑌾𑌨𑌿𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 𑌵𑌿
𑌵𑍃𑌦𑍍𑌧𑍇𑌕𑍁𑌰𑍁𑌨𑌨𑍍𑌦𑌨 ॥

"ஓ! அர்ஜ்ஜுனா! தமோகுணம் மேலிடும் பொழுது அவிவேகம், முயற்சியின்மை, அஜாக்கிரதை, விபரீதமான ஞானமிவை யுண்டாகின்றன.

𑌯𑌦𑌾𑌯𑌦𑌾𑌹𑌿𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯𑌗𑍍𑌲𑌾𑌨𑌿
𑌰𑍍𑌭𑌵𑌤𑌿𑌭𑌾𑌰𑌤 ।
𑌅𑌭𑍍𑌯𑍁𑌤𑍍𑌥𑌾𑌨𑌮𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯𑌤𑌦𑌾
𑌤𑍍𑌮𑌾𑌨𑌂𑌸𑍃𑌜𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥

"ஓ! பாரத! தர்மம் அழிந்து அதர்மம் மேலோங்கும் பொழுதெல்லாம் என்னை நான் சிருஷ்டித்துக் கொள்ளுகிறேன்.

𑌪𑌰𑌿𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌸𑌾𑌧𑍂𑌨𑌾𑌂
𑌵𑌿𑌨𑌾𑌶𑌾𑌯𑌚𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌾𑌮𑍍 ।
𑌧𑌰𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌪𑌨𑌾𑌰𑍍𑌥𑌾𑌯
𑌸𑌂𑌭𑌵𑌾𑌮𑌿𑌯𑍁𑌗𑍇𑌯𑍁𑌗𑍇 ॥

சாதுக்களை ரக்ஷிக்கவும் துஷ்டர்களை யழிக்கவும் தர்மத்தையுலகில் ஸ்தாபிக்கும்பொருட்டும் யுகந்தோறும் நானே அவதரிக்கிறேன்.

# ஸநாதன தர்மம்.



## அதிகாரம் 3.

### புனர்ஜன்மம்.

மேலதிகாரத்திற் கூறிய பரிபாகத்தினிமித்தம் ஜீவன் பல சரீரங்களை எடுக்கிறான். அவன் அபிவிர்த்தி யடைந்துவரும்பொழுது அவனிட மடங்கியிருக்கும் சக்திகள் பிரகாசிப்பதால் இச்சரீரங்களும் பக்குவப்பட்டுக்கொண்டேவருகின்றன. இதற்குத்தான் 'புனர்ஜனன' மல்லது 'புனராவிருத்தி' அல்லது திரும்பிவருதல் என்று பெயர். புனர்ஜனனம் என்னும் பதத்திற்கு பழையபடி ஜன்மத்தைப்பெற்று ஸ்தூல சரீரத்தை யடைதல் என்று பொருள்; போக்குவரவு அல்லது திரும்பிவருதல் என்றால், ஓரிடமிருந்து அதாவது ஒரு சரீரத்தைவிட்டு மற்றோரிடமல்லது சரீரத்துட் செல்லுதல் என்றருத்தம். ஆதலா லிவ்விருவார்த்தைகளு மொரே கருத்தை விளக்குகின்றன. இவற்றுள் எதையு மிக்கருத்தி லுபயோகிக்கலாம். இனி யிப்பதங்களாற் கூறப்படும் புனர்ஜன்மமென்ப தியாதென்பதை விசாரிப்போம்.

ஜீவன் பிரம்மத்தின் ஓர் அம்சமே என்பதை முன் விளக்கிக்கொண்டோம். "ஜீவனும் எனதோர் பாகமே" என்றார் ஸ்ரீகிருஷ்ணனும். பிரம்மத்தின் சகல

சக்திகளும் இந்த ஜீவனிட மடங்கிக்கிடக்கின்றன; "ஜீவன்பிர்ம்மமே" "நீயதுவே" எனச் சுருதியுங் கூறு கின்றது. ஆயினும் விதைக்கும் விருக்ஷத்திற்கும் தேச காலாதிகளால் வித்தியாஸமிருப்பதுபோல் ஜீவனுக்கும் பிரம்மத்திற்கும் வித்தியாஸ மிருக்கவேயிருக்கின்றது. விருக்ஷம் விதையை யுண்டாக்கி யதற்குத் தன்னியற்கை முழுமையு மளிக்கின்றது. பின்னரவ் விரையை மண் ணிற் சேரும்படி நழுவவிடுகின்றது. இப்பால் விதை யும் மெள்ள வளர்ந்து தன் சக்திகளைப் பிரகாசப்படுத் திக்கொண்டேவந்து முடிவில் தனது உற்பத்திஸ்தான மாகிய விருக்ஷத்தைப்போலாகின்றது. அது இவ்விரு க்ஷத்தைத்தவிர வேறென்றாதல் முடியாது. ஏனெ னில் அதனியற்கை யிவ்விருக்ஷத்தினுடையதைத் தவிர வேறன்று. இவ்விதமே ஜீவனும் ஒரு விதையைப் போலவே. இவனும் ஈச்சுவரனால் பிரகிருதியின்கண் போடப்பட்டு சிறிதுசிறிதாய்த் தன்னிடமடங்கியிருக்கும் சக்திகளை வெளிப்படுத்திக்கொண்டு முடிவி லீச்சுவர னாகிறான். இவனும் அவ்வீச்சுவரனன்றி வேறொன்றாத லமையாது; ஏனெனில் இவனதியற்கை பிதாவாகிய ஈச்சுவரனதியற்கையேயன்றி வேறன்று.

ஈச்சுவரன் ஸர்வக்ஞன், ஸர்வசக்தன்; ஜீவன் கிஞ் சிக்ஞன், அசக்தன். ஆனால் காலக்கிரமத்தில் விர்த்தி யடைந்து ஜீவன் ஞானத்தையும் சக்தியையும் பெறு கிறான். இவ்வபிவிருத்திக்குத்தான் பரிபாகமென்று பெயர்.

இந்த ஸ்தூலவுலகத்தில் ஜீவன் உலோகவர்க்கத் தில் பரிபாகத்தை யாரம்பிக்கிறான். இந்நிலையில் அவ னுக்குப் பாஹியவுலகத்தினறிவு கிடையாது. வெளியி

லிருந்து வந்தடையும் கடினமான தாக்குதல்களால் பாஹியவுலகத்தின் ஞாபகம் அவனுக்கு ஊட்டப்படுகின்றது. பூகம்பங்கள், எரிமலைகள், பெரும் பூமிபாகங்கள் நகருதல், குரூரமான பேரலைகளின் தாவுதல் இவை முதலிய வுக்கிரமான அபாயங்களால் ஜீவனுக்கு உணர்வுண்டாகி, ஜடபாவம் சிறிது நீங்கி பாஹியவுலக ஞாபகம் ஏற்படுகின்றது. இவ்வுலகத்தின் ஆதிகாலத்திய சரித்திரங்களைச் சிறுவர்கள் ஆராய்வார்களாயின் அச்சமயங்களில் எண்ணிறந்த பெரும் உத்பாதங்கள் சம்பவித்தனவெனக்கேட் டாச்சரியமுறுவார்கள். இப்பெரும் ப்ரமாதங்கள் ஜீவர்கட் கறிவூட்டுதற்கு வேண்டியிருந்தன. பின்னர் வெகு நீடித்தகாலத்திற்கப்பால் ஜீவர்கள் சிறிதுபக்குவப்பட்டு சற்று மிருதுவான சரீரங்களைத் தரிக்கத்தக்கவர்களாய் ஏற்பட்டபொழுது அவர்கள் கந்தமூலவர்க்கத்துள் பிரவேசித்தனர். இவர்கள் விட்டு நீங்கிய விவ்வுலோகவர்க்கத்திலும் ஈச்சுவரனிடமிருந்து பின்னுமுண்டாகிய ஜீவர்கள் நுழைந்தனர்.

கந்தமூலவர்க்கத்தில் ஜீவர்கள் முன்னிலு மதிகமாய் வெளியுலகத்தை யுணருகின்றனர். சூரியனது வெப்பம், இளந்தென்றல், சரீரங்களைப்போஷிக்கும் மழை, யிவற்றைச் செவ்வையா யறிந்துகொள்ளுகின்றனர். காலக்கிரமத்தி லிவை யபிவிருத்தியடைந்து, வர வரத் தீவிரமான வுணர்ச்சியை யடைந்து இவ்வர்க்கத்தில் புற்பூடுகளின் நிலைமைகள் நீங்கி நீடித்தகாலந் தங்கும் செடி கொடி விருக்ஷங்களாகின்றன. இங்கு இவற்றின் சக்திகளு மதிகமாகி முடிவில் மேற்பட்ட மி[illegible] வர்க்கத்துட் பிரவேசிக்கின்றன. இப்பொழுது இ[illegible] கந்தமூலவர்க்கத்துள் முற்கூறிய பின் வந்த ஜீவர்[illegible]

ளும், அவ்வுலோகவர்க்கத்துள் இன்னும் பிறகு கிளம்பும் ஜீவர்களும் வந்தடைகின்றனர்.

இனி மிருகவர்க்கத்தில் இவை விசேஷ தீவிரத்துடன் பக்குவப்பட்டுவந்தன. ஆஹாரத்தின்பொருட்டு வேட்டையாடியும், ஒன்றோடொன்று கடும்போர் விளைத்தும், ஒன்றையொன்று சாமர்த்தியத்தால் மிஞ்சியும் இம்மிருகங்கள் வருவனவாதலால், இவைகளிடத்து இந்திரிய வுணர்ச்சிகளும் ஆரம்ப மனோபாவங்களும் தெளிவாகிப் பலப்படுகின்றன. பின்னர் முடிவில் இந்த ஜீவர்களுக்கு இம்மிருகசரீரங்களும் பொருந்தாதவைகளாகி, மேலைப்பரிபாகமும் தடைபடாது நடந்தேறுவதற்கு, மானிட சரீரங்களை யபேக்ஷித்து நிற்கின்றன.

இங்கு சிறுவர்கள் ஒரு கேள்வி கேட்கலாம்: அஃதாவது இச்சரீரங்கள் ஜீவர்களுக் குதவும்படிப் பரிபாகப்படுத்திவருபவர் யாவர் என்பதேயாம்? இதற்குத்தரம்: ஜீவனது முயற்சிகளே யவ்விதம் பக்குவப்படுத்துகின்றன. முதலில் தன்னைச் சூழ்ந்திருக்கும் பிரகிருதியாலாகிய சரீரத்தினூடே யப்பாலுள்ள வெளியுலக பதார்த்தங்களைத் தரிசிக்க ஜீவன் விரும்புகிறான். இவ்விதம் முயற்சி செய்வதால் அவனது இச்சாசக்தி பகிர்முகப்பட்டு சரீரத்தின் சுவரில் தாக்குகின்றது. பிறகு காலக்கிரமத்தில் மெள்ளமெள்ள ஒரு நேத்திரம் உண்டாகின்றது. இவ்விதமே சகல விந்திரியங்களும் அவைகளின் ஸாதனங்களாகிய அங்கங்களு முண்டாகின்றன. இந்திரியங்கள் சரீரத்தின் உள்ளிருந்து வெளியே சொருகப்படுகின்றன என்று கேள்விப்பட் டிருக்கிறோம். ஜீவன் வெளியுலகத்தில் தான் வியவஹரிப்பதற் குதவும்படி யவற்றை யுருவாக்கிக்கொள்ளுகிறான். அவ்

வவ் விந்திரியத்துக்கேற்ற பதார்த்தங்களைத் தேவர்கள் இந்த ஜீவனுக்குக் கொடுத் துதவுகிறார்கள். ஜீவன் திருஷ்டியை யுண்டுபண்ணிக்கொள்ள முயலும்பொழுது வெளியுலகத்தில் பிரகாசத்தைக் கிரஹிக்கத்தக்க தேஜோரூப பதார்த்தத்தை அக்நிதேவ னிவனுக்களிக்கிறான். அப்படியே ரஸநேந்திரியம் வேண்டும்பொழுது அதற்குதவும்படி வருணன் தனது அப்புரூப பதார்த்த மளிக்கிறான். இதனாற்றான் எவற்றையும் ருசிபார்ப்பதற்கு ஜீவன் சக்தனாகிறான். இவ்விதமே மற்றுமுள்ள சகல விந்திரியங்களும் உண்டாகின்றன. இம்மாதிரித் தன் சரீரங்களை ஜீவன் உருவாக்கிக்கொள்ளுகின்றனன். ஒரு சரீரத்தைப் பூரணமாய் உருவாக்கிக்கொண்டபின் அச்சரீரமும் பிரயோசனமற்றுப்போனபொழுது பின் அதை விட்டு மற்றோர் சரீரத்தை ஏற்படுத்திக்கொள்ளுகிறான். காலம் செல்லச்செல்ல அவன் அதி விரைவுடன் பக்குமடைகிறான்; ஏனெனில் அவனுடைய சக்திகள் வரவர அதிகபாகமாய் வெளிப்பட்டுச் சுவாதீனத்துடன் வியவஹரிக்கும்படி யேற்படுவதால் ஆரம்ப தசைகளிற்போலல்லாமல் விசேஷ தீவரத்துடன் அவனுக்குக் காரியங்களை முடித்துக்கொள்ள வேதுவுண்டாகின்றது.

இதுவே பரிபாக மார்க்கத்தின் ஸ்பாவமான வழி. இதை யொருவிதம் பொதுவாய்ச் சிறுவர் கிரஹித்துக்கொள்ளும்படி இதன் விலக்குகள், உள் விவரங்கள் முதலியவற்றைக்காட்டாமல் ஒரு ஒழுங்கில் இதுவரை கூறப்பட்டிருக்கிறது. ஆனால் இயற்கையில் இவ்விதம் ஒரே ஒழுங்குடன் அதன் தசைகள் செல்லுவனவல்ல, பின்னை மத்தியில் மத்தியில் அநே

கம் சுழி சுற்றுக்களும், வழியை மாற்றிவிடும் குருக்குப் பாதைகளும் உண்டு. ஜகத்தில் ஜீவசமூகத்தில் பெரும்பான்மையான பாகம் மேற்கூறிய நேர்மார்க்கத்தில் ஒழுங்குடன் மேனோக்கிச் சென்றுகொண்டிருந்தாலும், அங்குமிங்கும் ஒவ்வொரு ஜீவன் அப்பாற் செல்லாது சிலசமயங்களில் சிலகாலம்வரை தான் முடித்துவிட்ட நிலைமையிலேயே தங்கிக்கிடக்கிறான். ஏதோ சிறிது அனுபோகம் இவன் முற்றினு மடையவில்லை; சில சக்திகளை இன்னும் வெளிப்படுத்திக்கொள்ளவில்லை. அதனால், பாடசாலையில் ஒரு சிறுவன் சோம்பலாற் சரியாய்க் கல்வி பயிலாதிருந்தால் கீழ்வகுப்பிற்கு அனுப்பப்படுவதுபோல், இவனும் தாழ்ந்த ஸ்திதியில் வந்து சேரும்படி நேருகின்றது. ஆதலின் மானிடப்பதவியையடைந்த ஜீவனும் ஒருசமயம் ஒருமிருகமல்லது கந்தமூலத்துடன், அல்லது மிகவும் தாமஸ குணமுடையவனாயின், ஒரு கல்லுடனும், முன்னிருந்த மானிடச்சரீரங்களைச் செம்மையா யுபயோகிக்கக் கற்றுக்கொள்ளும்வரை சேர்த்திணைக்கப்பட்டுக் கிடக்கும்படி நேரிடலாம். பிறகுச் சிறையில் அகப்பட்ட மனிதனைப்போல, இந்த ஜீவன் மனிதவர்க்கத்துக்குப் புறம்பாய்ச் சுதந்திரமின்மையால் தன்னுடைய சுயசக்திகளின்படி ப்ரவர்த்திக்க அசக்தனாகின்றான்.

ஆனால் ஜீவன் இவ்வித ஜனனமரணமாகும் சம்சார சக்கரத்தில் எந்நாளும் கட்டுப்பட்டுக் கிடப்பவன் அல்ல. இச்சக்கரத்துடன் இவனைக் கட்டுப்படுத்தும் பந்தங்கள் இவனது ஆசைகளேதவிர வேறன்று. இவ்வுலக பதார்த்தங்களில் அவனாசைப்படும்வரை அவற்றையடைந் தனுபவிக்கும்படி அவனிங்குவந்து சேர

வேண்டியிருக்கின்றது. இவைகளிலாசையை யொழிப் பாஞகில் இவனைப் பந்தப்படுத்தும் கட்டுகள் உடனே அறுந்து இவனும் விடுபடுகிருன். மறுபடி யிவன் ஜனனமடையவேண்டியதுமில்லை. இவன் மோக்ஷத்தை யடைகிருன்; இவனுக்கே முக்தன் என்று பெயர். இவனே சுவாதீனமுடைய ஜீவன்.

அநேகமாய் இம்முக்தர்கள் இவ்வுலகம் கடைத் தேறும்வண்ணம் அதற்குதவிபுரிவதற்காக இங்கேயே தங்கி இதர ஜீவர்களும் அதிவிரைவில் சம்சார பந்தத்தினின்றும் விடுதலையடையும்படி செய்கின்றனர். இப்பெரியோர்களி னுதவியின்றி இவ்விதம் தீவிரமாய் ஜீவர்கள் பந்தத்தை நீக்கிக்கொள்ளுதலமையாது. இவ்வகைப் பெரியோர்களின் சரித்திரங்களை வேதபுராணேதிகாசங்களில் நாம் காண்கிறோம். இவர்கள் சில சமயங்களில் மகரிஷிகளாகவும், மகாராஜாக்களாகவும், சில வேளைகளில் சாமானிய மனிதராயும் தோன்றுவார்கள். வெளித்தோற்றத்தில் எவ்விதம் தென்படினும் சரி, இவர்கள் உண்மையில் மஹா பரிசுத்தமடைந்தவர்களாயும், சுயநலம் பாராட்டாதவர்களாகவும் பரம சாந்தியுற்றவர்களாயும், பரோபகாரத்திற்காகவேஜீவிப்பவர்களாயும் இருப்பார்கள். லோக க்ஷேமத்தினிமித்தம் உழைப்பதில் திருப்தியடைந்தவர்களாயும் ஈசுவரனேடு தாம் ஐக்கியமடைந்திருப்பதையும் அறிந்தவர்களாவார்கள்.

---

# பிரமாண சுலோகங்கள்.

𑌦𑍇𑌹𑌿𑌨𑍋𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌯𑌥𑌾 𑌦𑍇𑌹𑍇
𑌕𑍌𑌮𑌾𑌰𑌂 𑌯𑍌𑌵𑌨𑌂 𑌜𑌰𑌾 ।
𑌤𑌥𑌾 𑌦𑍇𑌹𑌾𑌨𑍍𑌤𑌰𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿
𑌰𑍍𑌧𑍀𑌰𑌸𑍍𑌤𑌤𑍍𑌰 𑌨 𑌮𑍁𑌹𑍍𑌯𑌤𑌿 ॥

ஜீவனுக்கு இந்த (ஒரே) தேகத்தில் வாலிபமும், யௌவநமும், கிழத்தனமும், எப்படி ஒன்றின்பின்னொன்றாய்ச்சம்பவிக்கின்றனவோ, அப்படியேயொரு தேகம் போவதும் மற்றோர் தேகம் வருவதும் ஏற்படுகின்றது. இதை யறியும் ஞானி இவ்விஷயத்தில் மோகத்தை யடைகிறதில்லை.

𑌅𑌨𑍍𑌤𑌵𑌨𑍍𑌤 𑌇𑌮𑍇 𑌦𑍇𑌹𑌾 𑌨𑌿
𑌤𑍍𑌯𑌸𑍍𑌯𑍋𑌕𑍍𑌤𑌾𑌃 𑌶𑌰𑍀𑌰𑌿𑌣𑌃 ।
𑌅𑌨𑌾𑌶𑌿𑌨𑍋𑌽𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌸𑍍𑌯 𑌤
𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑍁𑌧𑍍𑌯𑌸𑍍𑌵 𑌭𑌾𑌰𑌤 ॥

நித்தியனும், நாசமற்றவனும், அறியப்படாதவனுமாகிய தேகியின் தேகங்கள் முடிவை உடையவைகள் எனக் கூறப்படுகின்றன; ஆகையினாலே ஓ! பரதவம்சத்திற்பிறந்த அர்ஜ்ஜுனா! யுத்தஞ்செய்.

𑌯 𑌏𑌨𑌂 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌹𑌨𑍍𑌤𑌾𑌰𑌂 𑌯
𑌶𑍍𑌚𑍈𑌨𑌂 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 𑌹𑌤𑌂 ।
𑌉𑌭𑍌 𑌤𑍌 𑌨 𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌤𑍋 𑌨𑌾
𑌯𑌂 𑌹𑌨𑍍𑌤𑌿 𑌨 𑌹𑌨𑍍𑌯𑌤𑍇 ॥

எவன் இவனைக்கொல்லுகிறவனாக நினைக்கிறானோ அவனும், எவன் இவனைக் கொல்லப்பட்டவனாக நினைக்கிறானோ அவனும், இவ்விருவர்களும் உண்மை யறிந்தவர்களல்ல. இவன் கொல்லுகிறதுமில்லை. கொல்லப்படுகிறதுமில்லை.

𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌮𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌵𑌾 𑌕𑌦𑌾
𑌚𑌿𑌨𑍍 𑌨𑌾𑌯𑌂 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌭𑌵𑌿𑌤𑌾 𑌵𑌾
𑌨 𑌭𑍂𑌯𑌃 ।
𑌅𑌜𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍋𑌽𑌯𑌂
𑌪𑍁𑌰𑌾𑌣𑍋 𑌨 𑌹𑌨𑍍𑌯𑌤𑍇 𑌹𑌨𑍍
𑌯𑌮𑌾𑌨𑍇 𑌶𑌰𑍀𑌰𑍇 ॥

ஆத்மா பிறக்கிறதுமில்லை, இறக்கிறதுமில்லை. உண்டானபின் இறக்கப்போகிறதுமில்லை. அவன் பிறப்பற்றவன், நாசமற்றவன், சாசுவதன், புராதனன், ஆகையால் தேகமானது கொல்லப்பட்டபோதிலும் ஆத்மா ஒருபோதுங் கொல்லப்படுவதில்லை.

வேதாவிநாஶிநம் நித்யம் ய ஏநமஜமவ்யயம் ।
கதம் ஸ புருஷ: பார்த்த கம் காதயதி ஹந்தி கம் ॥

வாஸாம்ஸி ஜீர்ணாநி யதா விஹாய நவாநி க்ருஹ்ணாதி நரோऽபராணி ।
ததா ஶரீராணி விஹாய ஜீர்ணாந்யந்யாநி ஸம்யாதி நவாநி தேஹீ ॥

தேஹீ நித்யமவத்யோऽயம் தேஹே ஸர்வஸ்ய பாரத ।

தஸ்மாத் ஸர்வாணி பூதாநி ந த்வம் ஶோசிதுமர்ஹஸி ॥

பகவத்கீதை அத். 2. (18-22) க. 30.

ஓ! அர்ஜ்ஜுநா! ஆத்மாவை அழிவற்றவன், பிறப்பற்றவன், குறைதலற்றவன் என்று எவன் அறிகிருனே அவன் எப்படி பிறனைக் கொல்லவாவது கொல்லுவிக்கவாவது கூடும்?

மனிதன் எப்படி நைந்த வஸ்திரங்களை விட்டுவிட்டு வேறு புதியவைகளைக் கிரஹிக்கிருனே அப்படியே ஆத்மாவும் ஜீர்ணமான தேகங்களை விட்டு விட்டுப் புதிய சரீரங்களைத் தரிக்கிருன்.

எல்லாச் சரீரங்களிலுமுள்ள தேகியானவன் எக்காலத்திலுமழிவற்றவன். ஆகையால் ஓ! பாரத! நீ எப்பிராணிகளைக் குறித்தும் விசனப்படுதல் தகுதியன்று.

𑌤𑌦𑍍𑌯𑌥𑌾𑌪𑍇𑌶𑌸𑍍𑌕𑌾𑌰𑍀𑌪𑍇𑌶𑌸𑍋𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌮𑌪𑌾𑌦𑌾𑌯𑌾𑌨𑍍𑌯𑌨𑍍𑌨𑌵𑌤𑌰𑌂 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌤𑌰𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌤𑌨𑍁𑌤𑌏𑌵𑌮𑍇𑌵𑌾𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑍇𑌦𑌂 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌨𑌿𑌹𑌤𑍍𑌯𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌂 𑌗𑌮𑌯𑌿𑌤𑍍𑌵𑌾𑌨𑍍𑌯𑌨𑍍𑌨𑌵𑌤𑌰𑌂 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌤𑌰𑌂𑌰𑍂𑌪𑌂 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 ।

பிருகதாரணியகோபநிஷத்.
IV. (4).

ஒரு பொன் வேலைக்காரன் கொஞ்சம் தங்கத்தை யெடுத்து முன்னிருந்த ரூபத்தை யழித்து அதிலு மதிக வழகுள்ள ஒரு நூதன ரூபத்தை யுண்டுபண்ணுவது போலவே, யிவ்வாத்மாவும் தன் சரீரத்தை விட்டுவிட்டு அவித்தையை நீக்கி ஒரு நூதனமான விசேஷ வழகுள்ள ரூபத்தை யுற்பத்தி பண்ணிக் கொள்ளுகிறது.

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑌾𑌧𑌾𑌯𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿
𑌸𑌂𑌗𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾𑌕𑌰𑍋𑌤𑌿𑌯𑌃 ।
𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇𑌨𑌸𑌪𑌾𑌪𑍇𑌨
𑌪𑌦𑍍𑌮𑌪𑌤𑍍𑌰𑌮𑌿𑌵𑌾𑌮𑍍𑌭𑌸𑌾 ॥

எவன் கருமங்களை பரமாத்மாவினிடத்தில் ஒப்புவித்துப் பலாபேக்ஷையை விட்டுச் செய்கிறானோ, அவன் தாமரையிலை யெப்படி ஜலத்தோ டொட்டுகிறதில்லையோ அப்படி பாவ புண்ணியங்களால் தீண்டப்படுகிறதில்லை.

𑌕𑌾𑌯𑍇𑌨 𑌮𑌨𑌸𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾
𑌕𑍇𑌵𑌲𑍈𑌰𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍈𑌰𑌪𑌿 ।
𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 𑌸𑌂
𑌗𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌶𑍁𑌦𑍍𑌧𑌯𑍇 ॥

பகவத்கீதை அத். 5. (10-12).

தேகம், மனசு, புத்தி யிவைகளினா லெல்லாம் யோகிகள் மனச்சுத்திக்காகக்கருமங்களைச் செய்கிறார்கள்.

𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌶𑌾𑌂
𑌤𑌿𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨𑍈𑌷𑍍𑌠𑌿𑌕𑍀𑌮𑍍 ।
𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑍇𑌣 𑌫
𑌲𑍇 𑌸𑌕𑍍𑌤𑍋 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 ॥

யோகத்தை யடைந்தவன் கருமத்தின் பலத்தைத் தியாகம் செய்து அசைவற்ற சாந்தியடைகிறான்; யோகமடையாதவன் காமத்தால் (கருமத்தின்) பலத்தில் ஆசைவைத்துப்பந்தத்தை யடைகிறான்.

𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌨𑌯𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑍇 𑌬𑍍𑌰𑌾
𑌹𑍍𑌮𑌣𑍇 𑌗𑌵𑌿 𑌹𑌸𑍍𑌤𑌿𑌨𑌿 ।
𑌶𑍁𑌨𑌿 𑌚𑍈𑌵 𑌶𑍍𑌵𑌪𑌾𑌕𑍇 𑌚
𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌃 𑌸𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 ॥

கல்வியும் வணக்கமுமுள்ள பிராமணனிடத்திலும், பசுவினிடத்திலும், நாயினிடத்திலும், நாய் மாமிசம் புசிப்பவனிடத்திலும் ஞானிகள் சமதிருஷ்டியுள்ளவர்கள்.

𑌇𑌹𑍈𑌵 𑌤𑍈𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 𑌸𑌰𑍍𑌗𑍋 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌸𑌾𑌮𑍍𑌯𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌮𑌨𑌃 ।
𑌨𑌿𑌰𑍍𑌦𑍋𑌷𑌂 𑌹𑌿 𑌸𑌮𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌤𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 ॥

எவர்கள் மனது சமபாவனையில் நிற்கின்றதோ அவர்கள் இவ்விடத்திலேயே ஸ்வர்க்கத்தை ஜயித்தவர்களாவர் ; குற்றங்குறைவற்ற சமபாவனையே பிர்ம்மம்; ஆதலால் அவர்கள் பிரம்மத்தில் நிலைபெற்றவர்கள்.

𑌨 𑌪𑍍𑌰𑌹𑍃𑌷𑍍𑌯𑍇𑌤𑍍𑌪𑍍𑌰𑌿𑌯𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌨𑍋𑌦𑍍𑌵𑌿𑌜𑍇𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌚𑌾𑌪𑍍𑌰𑌿𑌯𑌂 ।
𑌸𑍍𑌥𑌿𑌰𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌸𑌂𑌮𑍂𑌢𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ॥

பிரியமானதை யடைந்தால் சந்தோஷித்தலும், அப்பிரியம்வந்தால் துக்கித்தலும் கூடாது. பிரம்மவித்தானவன் ஸ்திரமான புத்தியுடன் கலக்கமற்றுப் பிரம்மத்தில் நிலைபெற்றிருப்பன்.

𑌬𑌾𑌹𑍍𑌯𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑍇𑌷𑍍𑌵𑌸𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌯𑌤𑍍𑌸𑍁𑌖𑌂 ।
𑌸 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑍁𑌖𑌮𑌕𑍍𑌷𑌯𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 ॥

உலக விஷயங்களில் பற்றற்றவன் தன்னாத்மாவினிடத்தில் சுகத்தை யடைகிறான். அவன் யோகத்தால் பிரம்மத்தி லைக்கியமடைந்து அழிவற்றவானந்தத்தைப் பெறுகிறான்.

யோ௨ந்த꞉ஸுகோ௨ந்தராராம-
ஸ்ததா²ந்தர்ஜ்யோதிரேவ ய꞉ ।

ஸ யோகீ³ ப்³ரஹ்மநிர்வாணம்
ப்³ரஹ்மபூ⁴தோ௨தி⁴க³ச்ச²தி ॥

லப⁴ந்தே ப்³ரஹ்மநிர்வாணம்ருஷய꞉ க்ஷீணகல்மஷா꞉ ।

சி²ந்நத்³வைதா⁴ யதாத்மாந꞉
ஸர்வபூ⁴தஹிதே ரதா꞉ ॥

காமக்ரோத⁴வியுக்தாநாம்
யதீநாம் யதசேதஸாம் ।

அபி⁴தோ ப்³ரஹ்மநிர்வாணம்
வர்ததே விதி³தாத்மநாம் ॥

பகவத்கீதை அத். 5. 18-21; 24-26.

தன்னுத்மாவினிடத்திலேயே சுகத்தையும், அனுபவத்தையும், பிரகாசத்தையு மடைந்த யோகியானவன் பிரம்மஸ்வரூபமாகிப் பிரம்மத்தில் லயிக்கிறுன்.

ரிஷிகள் பாபம் சம்சயங்களற்றுச் சாந்தர்களாகி ஸகல பூதங்களின் க்ஷேமத்தையே கோரினவர்களுமாகிப் பிரம்ம நிர்வாணத்தை யடைகிறுர்கள்.

ஆசை கோபங்களை விட்டும், மனதை யடக்கியும், ஆத்மதத்துவத்தை யறிந்தும், சகல கருமங்களும் விட்டுப்போயுமிருக்கிறபிரம்மநிஷ்டர்களான யதிகளுக்குப் பிரம்மாநந்தமானது சமீபத்திலேயே யிருக்கின்றது.

---

# அதிகாரம் 4.

## கர்மம்.

கருமம் என்பது சமஸ்கிருதபாஷையைச் சேர்ந்த வார்த்தை. அதற்குத் தொழில், அல்லது கிரியை என்பதுபொருளாகும். ஆயினும் ஜனங்கள் வழக்கத்தில் இப்பதத்தைத் தற்காலத்தில் நிகழும் கிரியைகட்கும் அவற்றின் வருங்காலத்திய பலன்களுக்குமுள்ள சம்பந்தத்தைக்குறிக்கும்படி பிரயோகிக்கிறார்கள். உலகில்சகல சம்பவங்களும் தற்செயலாகவாவது நிஷ்காரணமாகவாவது அல்லது முன்பின் சம்பந்தமில்லாமல் ஒழுங்கீனமாயாவது நிகழ்வனவல்ல. பின்னை பூர்வோத்தர சம்பந்தங்களுடன் ஒன்றன்பின்னொன்றாய் ஒழுங்காகவே சம்பவிக்கின்றனவென்பதிற் சந்தேகமில்லை.

ஒரு விதையைப்பூமியில் விதைத்தால் அதினின்றுமொரு சிறு முளை அல்லது மடல் கிளம்பி பின் இம்முளையின்மேல் இலைகளுற்பத்தியாகின்றன. பிறகு புஷ்பங்கள், பின் காய்கள் தோன்றுகின்றன. கடைசியில் இக்காய் கனிகளிலும் பழையபடி விரைதோன்றுகின்றது. ஒரேவிதமான விதைகள் ஒரேவிதமான செடிகளையேயுண்டாக்குகின்றன. நெல்விதைநெற்பயிரையே விளைவிக்கும், அப்படியே வாற்கோதுமை வாற்கோதுமையை யுண்டாக்குகின்றது. இவ்விதமே முள்ளி முதலியன அவ்வவ்வினங்களையே வருவிக்குமே தவிர வேறன்று. முட்செடி விதைகள் முட்செடிகளையே தரும். முட்செடி விதைகளை விதைத்த வொருவன் ருசியுள்ள திராக்ஷப்பழங்களை யெதிர்ப்பார்த்திருத்தல் கூடுமோ ? சப்பாத்துக்கள்ளி விதைத்தவன் சாரமு

ள்ள சீர்மை இலந்தைப்பழங்களைக் காண ஆசைகொள்ளல் தருமோ? இவ்விதமாய்க் காரணங்களுக்குத் தக்கபடியே காரியங்களல்லது பலன்களும் நேருமென்பதுவே கர்மமாம். இதையறிந்துமனிதன் தனக்கு வேண்டிய பலனுக்கேற்ற விதைகளைவிதைத்துக்கொள்ளுகிருன். முதலில் இவ்விஷயத்தை ஞாபகத்தில் இருத்திக்கொள்ளல் வேண்டும்.

இனி ஒவ்வொரு கிரியையு மிவ்விதம் முன்பின் சம்பந்தமின்றிச் சம்பவித்த லமையாதென்பது வாஸ்தவமா என்று நீங்கள் யோசிக்கலாம். பார்வையில் முன் சம்பந்தம் யாதுமின்றி சம்பவிக்கும் சாதாரணமான கிரியைகள் கோடிக்கணக்காய் அகப்படும் என்று நீங்கள் நினைப்பீர்கள். அஃதுண்மையன்று; எக்கிரியையும் அவ்வளவு முற்சம்பந்தமற்ற லகுவான விஷயமென நீங்கள் நினைப்பது கூடாது. உதாரணமாய் ஒருமனிதனை "நீர் ஏன் நகரமார்க்கநோக்கிச் செல்லுகின்றீர்" என நான் கேட்கிறேன்; அதற்கவன் "எனக்கு ஒரு ஜதை பாதரக்ஷை தேவை, அவையிந்நகரத்துள் கிடைக்குமென்று எண்ணினேன்" என்று பதிலளிக்கலாம். அல்லது "எனக்கு ஒரு சிநேகிதனைக் காணவேண்டியிருக்கிறது, அவனிந்நகரத்தி லிருப்பதாக எனது எண்ணம்," என்றிம்மாதிரியாக அநேகவிதமாய் விடையளிப்பான்; ஆனால் எப்பொழுதும் "என்னிச்சையிது, இவ்விதமெண்ணிச்செய்தேன்" என்றவிதமாய்ச் சொல்லாமல் தீராது. இம்மூன்று அம்சங்களும் எப்பொழுதும் சேர்ந்தே காணப்படுகின்றன.

இச்சையாவது விருப்பம், ஏதேனும் ஒன்றையடைய ஆசைப்படுதல்; இதுவேமுதற்படி; பிறகு அதை

யடையும்வித மல்லது வழியை யாலோசிக்கிறோம். இது விரண்டாம்படி. பின் அவ்விதம் செய்கிறோம். இது மூன்றாம்படி. இதுதான் கிரமமல்லது ஒழுங்கு ; ஒவ்வொரு கிரியையும் நினைவு அல்லது எண்ணத்திற்குப் பின்னுண்டாவது ; ஒவ்வொரு எண்ணமும் ஒவ்வொரு இச்சையினடியாகப் பிறப்பது.

கிரியை, ஞானமல்லது யோசனை, இச்சை ஆகிய விம்மூன்றுமே கர்மமாகிய திரண்டவொரு கயிற்றின் மூன்றுபுரிகள். அதாவது இம்மூன்றுமே கர்மமாகின்றது. நமது கிரியைகள் அல்லது செயல்கள் நம்மைச் சூழ்ந்திருக்கும் ஜனங்களுக்குச் சுகத்தையோ துக்கத்தையோ விளைவிக்கின்றன. அந்நியருக்குச் சந்தோஷத்தைக்கொடுக்கும் செயல்களைச் செய்வோமாயின் வருங்காலத்தில் நமக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கும் விதைகளை நாம் விதைத்துக் கொண்டவர்களாவோம். அப்படியே சந்தோஷமாகிய பலனும் நாளடைவில் நமக்குக் கிட்டுகின்றது. அல்லாமல் பிறருக்குத் துக்கத்தை விளைவிப்போமாயின் நமக்கே துக்கத்தைக் கொடுக்கும் விதைகளை விதைத்தவர்களாகிறோம். துக்கமும் நம்மை வந்தடைகிறது. இவ்விதமே பிறருக்குக் கொடுமை புரிவோமாயின் கொடுமையாகும் விதைகளையே நாம் விதைப்பவர்களாகிப்பிற்காலத்தில் கொடுமையாகிய பலன்களையனுபவிக்கிறோம். இப்படியே நன்மையல்லது பிரீதியை விதைப்போமாயின் அவை காலாந்தரத்தில் பிரீதியாகும் பலன்களை நமக்குத் தருவனவாகின்றன. ஆதலால் நமதுசெயல்களால் எவ்வித விதைகளைவிதைக்கிறோமோ அவற்றிற்கேற்றசுபாசுபப்பலன்கள் நமக்குக்கிடைக்கின்றன. இதுதான் கருமமென்பது.

ஆனால் கிரியைகள் யாவும் நினைவு அல்லது எண்ணத்திலிருந் துண்டாகின்றவெனக்காட்டினோமல்லவா? இனியிவ்வெண்ணந்தான் நமது சீலம் அல்லது சுபாவித்தை யுண்டாக்குவது; அதாவது நம்முடைய மனதின் இயற்கையல்லது நியதமான குணத்தை ஏற்படுத்திவிடுகின்றது. நாம் ஒரு விஷயத்தை விசேஷமாய்க்கூர்ந்து நினைப்போமாயின் நமதுமனதும் அவ்விஷயத்தைப் போலவாகின்றது. நமக்குப் பக்ஷமாய்நினைவுகள்ஏற்படுமாயின் நாமும் பக்ஷமுள்ளவர்களாகிறோம். நாம் குரூரமான நினைவுகளை நினைத்துவருவோமாயின் நாமும் குரூரமுள்ளவர்களாகிறோம். கபட சிந்தனைகளைச் சிந்திப்போமாயின்நாமும் கபடமுள்ளவர்களாகிறோம். சத்தியத்தையே நினைப்போமாயின்நாமும் சத்தியமுள்ளவர்களாய்விடுகிறோம். இவ்விதமாய் நமதுஸ்வபாவம் அல்லது சீலம் நாளுக்குநாள் நமது சிந்தனைகளா லாக்கப்படுகின்றது. இதற்கடுத்த ஜனனத்தில் நாமிப்பொழுது உண்டுபண்ணிக்கொண்டுவரும் நினைவுகளாலேற்படும் சுபாவத்துடன் பிறக்கப்போகிறோம். நாமொவ்வொருவரும் அவரவர் சுபாவத்தின்படியே நடக்கிறோம். ஒரு அன்புள்ளமனிதன் அன்பாகவே விவகரிக்கிறான். குரூரகுணமுள்ளவனும் குரூரமாகவே சகலரிடத்திலும் நடந்துகொள்ளுகிறான். ஆதலின் இனிவரும் ஜன்மத்தில் நமது செயல்கள் எவ்விதமேற்படுமென்பது இந்தஜன்மத்தில் நமது நினைவுகள் செல்லும் வழியைப் பொருத்திருக்கிறதென்பது பசுமரத்தாணிபோல் நிலைபெறுமன்றோ! இதுவே கருமம்.

இனி நினைவுகளும் ஆசையல்லது இச்சைகளிலிருந்துண்டாகின்றனவல்லவா ? இச்சையும் நாம் கோரும்

விஷயங்களை நமக்குச் சம்பாதித்துக் கொடுக்கின்றது. காந்தமானது லகுவான இரும்பைக்கவர்வதுபோல் இச்சையும் ஏற்ற விஷயங்களை ஆகருஷிக்கின்றது. நாம் பணத்தை விரும்புவோமாயின் இனியொரு ஜன்மத்தில் நாம் அவ்விதமாய்ப் பணத்தை யடையத்தக்கவர்களாய் விடுகிறோம். அவ்விதமே கல்வியிலிச்சை வைப்போமாயின் இனி யொரு ஜன்மத்தில் இக்கல்வியையு மடையத்தக்கவர்களாவோம். அப்படியே அன்பையடைய இச்சைகொண்டால் வருங்காலத்தில் நாம் நேசிக்கப் படக் கூடியவர்களாவோம். இவ்விதமே அதிகாரத்தை விரும்புவோமாயின் விசேஷ அதிகாரத்தை யடையத் தக்கவர்களாவோம். இதுவே கருமம்.

இவ்விஷயத்தைச் சிறுவர் பூர்ணமாய் மனதிலழுந்தும்வரை விடாது அடிக்கடி நினைத்துப் பார்த்து வரல்வேண்டும். இந்த அடிப்படையான விஷயத்தைத் தெளிவாய் தெரிந்துகொண்டால்தான் இக்கர்மவிஷய விசாரத்தில் நுண்ணிய விவரங்களை யறிந்து கொள்ளச் சக்தர்களாவர். இக்கருமமாவது சுருக்கிச் சொல்லில் அவரவர் விதைத்த விதைக்குத் தக்கபடி பலனை யனுபவிக்கவேண்டிய தவசியம் என்பதே.

ஆயின் அடியில் வருமாறு மாணுக்கன்கேள்விகள் கேட்கலாம். இவ்விதம் எனதுசெயல்கள் யாவும் என்னுடைய சென்ற காலத்திய நினைவுகளாலும், அந்நினைவுகளும் அக்காலத்திய இச்சைகளாலும் ஏற்படவேண்டியதாகுமாயின் எனக்கு எவ்விதமும் தற்காலத்தில் சுவாதீனமே இல்லாமல் போய்விடுகிறதல்லவா? அன்றியும் நான் நினைத்துவந்திருக்கிறபடிதான் நான் இப்பொழுது நடக்கவேண்டும். நான் முன் இச்சித்தபடிஇப்பொழுது

இச்சைகொள்ளலும் வேண்டும்" எனின் இஃது ஒரு வாறுண்மையே; ஆயினும் நாம் நூதன நூதனமான அனுபவங்களை யடையுந்தோறும் நாமும் அவ்விதமே மாறிக்கொண்டு வருகிறோமல்லவா? ஜீவன் வரவர விசேஷஞானமடைந்துவருவதால் இந்த ஞானத்தால் தனது இச்சைகளையும் மாற்றிக்கொள்ளுகின்றனன். அதாவது சென்ற காலத்தில் ஓர்விதமாய் நமது இச்சை, நினைவு, செயல்கள், பிரவர்த்தித்தபொழுது அவ்வழியிற்போல் வேறு வழிகளிலும் அவை பிரவர்த்திக்கக் கூடியவைகளாயிருந்தன வென்பதற் காக்ஷேபமில்லை யாதலின், அவ்விதம் எப்பொழுதாவது ஒரு சமயம் அவைகளை மாற்றி வேறு இச்சை, நினைவு, செயல்களை யுத்பத்திபண்ணிக்கொள்ளல் சாத்தியமே. பூர்வத்தில் நமது வியவஹாரங்களின் பலன்கள் அனுபவத்திற்கு வந்தவுடன் அவை துக்கத்தை யல்லது துன்பத்தை நமக்குக்கொடுக்குமாயின், உடனே யவை கூடாதென மாற்றி, வெவ்வேறு இச்சை முதலியவற்றை யுண்டுபண்ணிக்கொள்ளுவதற்கு நமக்குச் சுவாதீனமுள தென்பதற் கையமேது?

உதாரணமாய் ஒருவன் சென்ற காலத்தில் கொடுமையான செயல்களைச் செய்திருக்கிறதாகத் தெரிந்துகொள்ளுகிறானென வைத்துக்கொள்ளுவோம். இச் செயல்கள் யாவும் இவனது பூர்வகாலத்திய கொடுமையான எண்ணங்களாலேயே யுண்டாயிருக்கின்றனவெனவும் இவ்வெண்ணங்களும் கொடுமைபாலன்றி வேறு விதமாய்ச் சம்பாதிக்க முடியாத பதார்த்தங்களிச்சை வைத்ததாலேயே எழுந்தவைகளெனவும், இவனறிந்து கொள்ளுகிறான். இவ்விதக் கொடுமையான செயல்கள்

பிறருக்குத் துன்பத்தையுந் துக்கத்தையு முண்டு பண்ணுகிறதையும், அப்பிறரும் தன்னை யதுபற்றிப் பகைத்து வெறுக்கிறதையும் இவன் பார்க்கிறான். இதனால் இவன் ஒன்றியாயும் சந்தோஷமற்றவனாயு மாகிறான். இவையெல்லா முணர்ந்து இவன் சிந்திப்பானாகில் தன்னை திருத்திக்கொள்ளத் தீர்மானிக்கிறான். ஆயினும் பூர்வகாலத்திய இச்சை நினைவுகளின் உறுதியால் விசேஷத் தடை ஏற்படுகின்றது; அதை மீறுவது மிகக்கடினமாகின்றது. பிறகு இச்சங்கடத்தை எவ்விதமேனும் நீக்கிக்கொள்ள முயன்று, அதன் மூலாதாரமாகிய கொடுமையாலன்றி யடைய முடியாத பதார்த்தங்களின் மீதுள்ள ஆசையை யகற்ற வெத்தனிக்கிறான். இவ்விச்சைமுதலியவற்றிற்கெல்லாம் அதீதனாகிய ஜீவன் இவை தனக்கடங்கியவைகளே யல்லது வேறன்றெனத் துணிந்து தன்னுள் தீர்மானித்துக் கொள்ளுகிறதாவது; "இனியிவ்விச்சைகளை மீறவிடேன், இப்பதார்த்தங்களில் எனக்காசையுண்டாகும் பொழுதெல்லாம் இவ்விச்சைகளால்முடிவில் துன்பமே விளையுமென்பதை நினைத்துக் கொள்ளுவேன்." என்றேயாம். இவ்விச்சைகள் தன்நினைவுகளைக் கட்டுப்படுத்திவருவதை யடக்கி இந்நினைவுகளாலிச்சைகளைக் கண்டிக்க வாரம்பிக்கிறான். பிறகுபழக்கப்படாத நாடோடிக்குதிரைகளைப்போல் இச்சைகளால் நினைவு அபகரிக்கப்பட்டுச் செல்லுவது ஒழிந்து இவன் இவ்விச்சைகளை யடக்குவதற்கு எண்ணமே கடிவாளமாய்க்கொண்டு நாளடைவில் அவற்றை யடக்கிவிடுகின்றனன். சௌக்கியமல்லது சுபத்தையே கொடுக்கும் பதார்த்தங்களை யடைதற்கு மட்டும் தனது இவ்விச்சைகள் பிரவர்த்திக்கும்படி இடங்கொடுக்கின்றான்.

நூதன ஜீவர்கள் தம்மிச்சைகளின் வசப்பட்டு மிகவும் துக்கத்தை அநுபவிக்கின்றார்கள். முதிர்ந்த ஜீவர்கள் விசேஷ ஞானமுள்ளவர்களாதலால் இச்சைகள் துன்பத்தை உண்டாக்கும் பதார்த்தங்களை நோக்கிச் செல்கையில், அவற்றால் பூர்வம் துன்பங்கள் நேர்ந்தனவென்பதை நினைந்து தமது நினைவாலவற்றை யடக்கிக்கொள்ளுகிறார்கள்.

ஆதலின் இதைப்படிக்கும் மாணுக்கனும் தனக்கும் பிறர்க்கும் சுபத்தைச்சம்பாதித்துக்கொள்ள விரும்பினால் தன்னிச்சைகளைச் செம்மையாய்க் கவனித்து வரல்வேண்டும். படிப்பாலும் பரிசோதனையாலும் உலகில் எப்பதார்த்தங்கள் காலக்கிரமத்தில் சுகத்தைக்கொடுக்கத்தக்கவை, எவை துக்கத்தைத் தருபவை, என ஆராய்ந்து பிறகு தன் பூர்ண உத்ஸாஹத்துடனும் தனது இச்சைகளை எப்பொழுதும் நல்விஷயங்களையே நோக்கிப் பிரவர்த்திப்பனவாக ஆக்கிக்கொள்ள முயல வேண்டும்.

ஜனனமரண ரூபமான சம்சார பந்தங்களினின்றும் முக்தியடைவதற்கு ஸ்தூல வியவஹாரம் அல்லது செயல்களை எவ்விதம் பரிபக்குவப் படுத்திக்கொண்டாலும் போதாதென்னும் கருத்தை மிகவும் திடமாய் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டியது. கீதாசிரியனாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் "என்னை (எங்கும் நிறைந்தவனாய்ப் பாவித்து) ஐக்கிய புத்தியுடன் பஜிக்கும் யோகியானவன் உலகில் எவ்வித பிரவர்த்தியிலிருந்தபோதிலும் என்னிடத்திலேயே வசிப்பவனாகிறான்". என்று கூறுகின்றார். க்ஷத்திரியனாகிய ஜனகராஜனும், வைசியனாகிய துலாதாரர் என்னும் வியாபாரியும் சமா

னமாகவே முக்தியடைந்தார்களெனக் கூறப்பட்டிருக்கிறது. இவர்கள் உலக பதார்த்தங்களில் ஆசையையொழித்ததால் சம்சாரத்தினின்றும் விடுபட்டார்களேயொழிய, கேவலம் நாடு நகரங்களை விட்டுக் காட்டுக்குப்போய்த் தப முதலிய வொழிவாகிய பிரவர்த்தியால் அப்பதவியை யடைந்ததாகச் சொல்லப்படவில்லை.

ஜனகன் மிதிலாபுரியில் விதேக நாட்டார்க்கு அரசனுயிருந்து சித்த விஸ்ராந்தியை யடைந்து "என தைசுவரியத்திற்கு அளவில்லை. ஆயினும் எனக்கு யாதொன்றுமில்லை. (எனின் இவற்றையொரு பொருளாய் நான் பாவித்து, அவற்றில் கருத்து வைத்திருக்கிறேனில்லை. என்றருத்தம்.) இம்மிதிலை நாடுமுழுவதும் அக்கினியால் நாசமடைந்தாலும் எனக்கதனுல் அற்ப நஷ்டமும் வராது" என்று இசைப்பாட்டினுற் சொல்லினுர்.

இவ்விதம் கூறி மாண்டவியருக்குப் பின்னுமவர் சொன்னதாவது:—ஒருவனுக்கு எவ்வளவு பொருட்குவை யிருப்பினும் அஃதத்தனையும் அவனுக்குத் துன்பத்துக்குக் காரணமாகுமேயன்றி வேறன்று எனவுமாம். இவ்வுலகிலும் சுவர்க்கத்திலும் எவ்வித ஆசைகளையும் திருப்திபண்ணிக்கொள்ளுவதாலு முண்டாகக் கூடிய சுகமத்தனையும் அவ்வாசை யொழிவாலுண்டாகுமானந்தத்திற்குக் கடுகத்தனையும் ஈடாகாது. ஒரு பசுங்கன்று விருத்தியடையும்பொழுது அதன் கொம்புகளும் கூடவே வளர்ந்துவருவதுபோலவே செல்வத்தில் ஆசை செல்வம் வளரக் கூடவே வளருமேயன்றி மத்தியில் அற்றுவிடாது. ஆதலின் செல்வத்தைப் பிறருக்குபகாரம் செய்வதற்காக உபயோகப்படுத்த வேண்டுமேயொழிய எவரும் தானேயனுபவிப்பதற்குப் பயன்

படுத்தலாகாது. ஆசையென்பது பெரும் துன்பத்திற்கு வித்தே ஆதலால் ஆசையை யொழித்துத் தன்னுயிரைப்போல் மன்னுயிரையும் பாவிப்பதால் சமஸ்தவித பந்தங்களினின்றும் ஒருவன் விடுபடுகிறான்.

யாக்ஞியவல்க்கிய மஹரிஷியின் உபதேசத்தால் ஜனக மகாராஜனும் முக்தியடைந்தனர். அவர் உபதேசத்தால் பரமபாவனமும், ஜனனமரண நீங்கினதுமாகிய நிலைமையான மோக்ஷத்தைப் பெற்றனர். இவ்வித வுபதேசத்தால் தெளிந்து தாமும் பிறகு பிறர்க்குபதேசிக்கத்தக்க வலிமையடைந்து ஆசாரியராயினர். இம்மகா ஜனகரிடம் வேதவியாஸரும் மோக்ஷவிசாரம் பண்ணும்படி தமது குமாரராகிய சுகரை யனுப்பினர்.

ஜாஜலி என்னு மொருவர் பெருந்தபசுபண்ணி அதனால் மிக கர்வமடைந்தார். ஒருநாள் தனக்குள் தானே "இப்பெரிய உலகிலும் பரந்த சமுத்திரத்திலும் எவர் எனக்குச் சமானமானவர்" என்று அவர் எண்ணினர். அப்பொழுதுடனே "இவ்வார்த்தைகளைச் சொல்லாதே. விற்றல், வாங்கலாகிய வுலகவியாபாரங்களில் தலையிட்டுக்கொண்டிருக்கும் துலாதாரர்கூட இவ்விதம் பேசுவது தகுதியன்று. அவருக்கு நீ சமானமானவனன்று" என ஒரு அசரீரி வாக்குப் பிறந்தது. இவ்வசரீரி வாக்கைக்கேட்ட ஜாஜலி பிரமிப்பையடைந்து பிராமணனும் சந்நியாசியுமாகிய தனக்கு மேலாக ஒரு கேவலமான வியாபாரி இருப்பதாகச் சொல்லப்படுவது எப்படியென ஆச்சரியங்கொண்டு அவரைக் கண்டுபிடித்து இச்சமுசயத்தைத் தீர்த்துக்கொள்ள வெண்ணினர். உடனே பிரயாணப்பட்டு பலவிடங்களு மலைந்து, வாரணாசிப்பட்டணம் வந்து சேர்ந்து, தன்

ணிடம் வருபவர்க்கெல்லாம் சகல பதார்த்தங்களையும் விற்பனைசெய்துகொண்டு வாசஞ்செய்துவரும் ஒரு சாமானிய வர்த்தகனாகிய துலாதாரரைக்கண்டார். இவரைக்கண்டவுடன் துலாதாரரும் பிராமணகுலத்துக்கு ஏற்றவிதமாய் அவரை எதிர்கொண்டழைத்து அவருக்கு நல்வரவு விசாரித்து அவருக்கு அவர் மஹா தபசு புரிந்ததையும் பிறகு கர்வங்கொண்டதையும் கூறி, முடிவில் "ஐயா பிராமணோத்தமரே, இவ்விதம் நீர் என்மேல் கோபங்கொண்டு இங்கு வந்ததுபோலும், என்றால் உமக்கு ஏதேனும் காரியமாகவேண்டியதுண்டோ" என வினவினர். ஜாஜலியு மிதைக்கேட்டுத் தன் பூர்வசரித்திரத்தைத் தனக்குக்கேவலம் வர்த்தகராகிய விவர் கூறியதைப்பற்றிப் பிரமித்து அவர் தன்னுடைய சரித்திரத்தைத் தெரிந்து சொன்ன விபரத்தைத் தனக்குத் தெரிவிக்கும்படி வேண்டினர். பிறகு துலாதாரரும் புராதனமாகிய தர்மத்தை விளக்குவாராகி இத்தருமம் யாவரும் அறிந்ததாயினும் வெகு சிலரால் மட்டுமே அனுஷ்டிக்கப்படுகின்றதென்றும் எவருக்கும் எவ்வித அபராதத்தையுஞ் செய்யாமலும், அபராதத்தை முற்றிலும் நீக்கிவிடச் சாத்தியப்படாதபொழுது எவ்வளவு அவசியமோ அவ்வளவிற் கதிகப்படாத அபராதத்தைமட்டும் வேறுவிதம் முடியாமையால் செய்துகொண்டும் வாழ்ந்துவருதலே பெருந் தருமமல்லது வாழ்வாகுமென்றும் "எவரிடத்திலும் நான் கடன் கேட்பதில்லை, எவரோடும் சச்சரவு செய்வதுமில்லை. விருப்பு வெறுப்பாகிய இவ்விரண்டையும் நான் வென்றேன். யாவரையும் சமமாய்ப் பார்ப்பதும், எவரையும் ஸ்துதி நிந்தை ஆகிய இவ்விரண்டிற் குட்படுத்

தாதிருத்தலும் என்னிடத்திலுள என்றும், ஒரு புருஷன் பயப்படுதலும் பயமுறுத்துதலும் நீங்கினவனுய், விரும்புதலும் வெறுத்தலுமகற்றி எவர்க்குந் தீமை புரியாதவனுகிவிடின் பிரம்மத்தை யடைகிறுன்'' என்றும் சொல்லினர். அன்றியும் கொடுமையால் மானிடர் ஜந்துக்களிடத்தும், இதர மானிடரிடத்தும் புரிந்துவரும் கொடுமைகளைப்பற்றியும், தியாகத்தின் லக்ஷணங்களைப்பற்றியும், பிரயோஜனமுள்ள ஸ்தலயாத்திரையைக்குறித்தும், அஹிம்சையால் மோக்ஷத்தை யடையும் உபாயத்தைப்பற்றியும் அத்துலாதாரர் பண்ணிய பிரசங்கமானது மிக வற்புதமானது.

---

## பிரமாண சுலோகங்கள்.

𑌕𑌾𑌮𑌮𑌯 𑌏𑌵𑌾𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷
𑌇𑌤𑌿 𑌸𑌯𑌥𑌾𑌕𑌾𑌮𑍋 𑌭𑌵𑌤𑌿
𑌤𑌤𑍍𑌕𑍍𑌰𑌤𑍁𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 𑌯𑌤𑍍𑌕𑍍𑌰𑌤𑍁𑌰𑍍-
𑌭𑌵𑌤𑌿 𑌤𑌤𑍍𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 𑌯
𑌤𑍍𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 𑌤𑌦𑌭𑌿𑌸𑌂𑌪
𑌦𑍍𑌯𑌤𑍇 ‖

பிருகதாரணியகோபநிஷத்.

மனிதன் இச்சாஸ்வரூபமே! அவனிச்சை யெப்படியோ யப்படியே யவனெண்ணங்கள்; அவனெண்ணங்களெப்படியோ அப்படியே அவன் செயல்கள், அவன் எவ்விதம் செய்கிறுனே அவ்விதமாகவே அவனுய்விடுகிறுன்.

𑌤𑌦𑍇𑌵 𑌸𑌕𑍍𑌤𑌃 𑌸𑌹 𑌕𑌰𑍍𑌮𑌣𑍈-
𑌤𑌿 𑌲𑌿𑌙𑍍𑌗𑌂 𑌮𑌨𑍋 𑌯𑌤𑍍𑌰 𑌨𑌿𑌷𑌕𑍍𑌤𑌮-
𑌸𑍍𑌯 ‖

பிருகதாரணியகம்.

விருப்ப முற்றவன் தன் மனமழுந்தி நிற்கும் வஸ்துவுக்கே தன் செய்கைகளால் செல்கிறுன்.

𑌅𑌥𑌖𑌲𑍁𑌕𑍍𑌰𑌤𑍁𑌮𑌯𑌃 𑌪𑍁
𑌰𑍁𑌷𑍋𑌯𑌥𑌾𑌕𑍍𑌰𑌤𑍁𑌰𑌸𑍍𑌮𑌿𑌂𑌲𑍍𑌲𑍋
𑌕𑍇𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌭𑌵𑌤𑌿 𑌤𑌥𑍇
𑌤𑌃𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯𑌭𑌵𑌤𑌿 ।

சாந்தோக்கியோபநிஷத்.

மனிதன் நினைவாலுண்டாகியவனே ; இவ்வுலகில் ஏற்படும் அவனது நினைவுகளின்படியே இவ்வுலகம்விட்டப்பாற் சென்றபொழுதும் ஆகிறான்.

𑌨𑌮𑌾𑌂𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌲𑌿𑌂𑌪𑌂𑌤𑌿
𑌨𑌮𑍇𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑍇𑌸𑍍𑌪𑍃𑌹𑌾 ।
𑌇𑌤𑌿𑌮𑌾𑌂𑌯𑍋𑌽𑌭𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌕
𑌰𑍍𑌮𑌭𑌿𑌰𑍍𑌨𑌸𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 ।

“என்னைக் கருமங்களொட்டுகிறதில்லை ; எனக்குக் கருமபலன்களி லாசையில்லை. இவ்விதமாய் என்னையறிந்துகொள்பவன் கருமங்களால் பந்தப்படுகிறதில்லை.

𑌏𑌵𑌂𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾𑌕𑍃𑌤𑌂𑌕𑌰𑍍𑌮
𑌪𑍂𑌰𑍍𑌵𑍈𑌰𑌪𑌿 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍁
𑌭𑌿𑌃 ।
𑌕𑍁𑌰𑍁𑌕𑌰𑍍𑌮𑍈𑌵𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌂
𑌪𑍂𑌰𑍍𑌵𑍈𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌤𑌰𑌂𑌕𑍃
𑌤𑌮𑍍 ॥

இதையறிந்தே முன்னோர்களில் முமுக்ஷுக்களும் கருமம் செய்துவந்தார்கள். ஆகையால் முன்காலத்தில் முன்னோர்களாலனுஷ்டிக்கப்பட்டதாகிய கருமத்தை நீயும் செய்.

𑌯𑌸𑍍𑌯𑌸𑌰𑍍𑌵𑍇𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌃
𑌕𑌾𑌮𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌾𑌃 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌗𑍍𑌨𑌿𑌦𑌗𑍍𑌧𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌂 𑌤𑌮𑌾
𑌹𑍁𑌃 𑌪𑌂𑌡𑌿𑌤𑌂 𑌬𑍁𑌧𑌾𑌃 ॥

"எவனுடைய சகல கருமங்களும் ஆசையுஞ் சங்கல்பமு மற்றவைகளா யிருக்கின்றனவோ, ஞானமாகிய அக்கினியா லெரிக்கப்பட்ட கருமத்தையுடையவனாகிய அவனை விவேகியென ஞானிகள் கூறுகின்றனர்.

𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌾𑌸𑌂𑌗𑌂
𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍃𑌪𑍍𑌤𑍋 𑌨𑌿𑌰𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 ।
𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌭𑌿𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍋𑌽𑌪𑌿
𑌨𑍈𑌵𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍𑌕𑌰𑍋𑌤𑌿𑌸𑌃 ॥

"கருமத்தி லபிமானமும் பலனிலாசையும் விட்டு எப்போதும் ஆத்மாநந்தத்தில் திருப்தி யடைந்தவனும், ஒன்றையு மாசிரியாதவனுயு மிருக்கிறவன் கருமத்தில் பிரவர்த்தித்தாலும் ஒன்றையுஞ் செய்யாதவனாகிறான்.

𑌨𑌿𑌰𑌾𑌶𑍀𑌰𑍍𑌯𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾
𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌸𑌰𑍍𑌵𑌪𑌰𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ।
𑌶𑌾𑌰𑍀𑌰𑌂𑌕𑍇𑌵𑌲𑌂𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍
𑌨𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑌂 ॥

"ஆசையற்றும் மனதையும்இந்திரியங்களையும் அடக்கியும், சகலவித சம்பாத்தியங்களையும் விட்டும், சரீரதாரண நிமித்தமான கருமங்களைமட்டும் செய்துவருகிறவன் பாசத்தை யடைகிறதில்லை.

𑌯𑌦𑍃𑌚𑍍𑌛𑌾𑌲𑌾𑌭𑌸𑌂𑌤𑍁𑌷𑍍𑌟𑍋
𑌦𑍍𑌵𑌂𑌦𑍍𑌵𑌾𑌤𑍀𑌤𑍋 𑌵𑌿𑌮𑌤𑍍𑌸𑌰𑌃 ।
𑌸𑌮𑌸𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌵𑌸𑌿𑌦𑍍𑌧𑍌 𑌚 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾
𑌪𑌿 𑌨 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 ।

“விரும்பாமல் கிடைக்கும் லாபத்தால் திருப்தி யுடையவனையும், சீதோஷ்ண சுக துக்காதிகளைத் தாண்டினவனையும், பொறாமை நீங்கினவனையும், ஜயாபஜயத்தில் பற்றற்றவனையும் இருக்கிற ஒருவன் கருமங்களைச் செய்துவரினும் பந்தமடையான்.

𑌗𑌤𑌸𑌂𑌗𑌸𑍍𑌯 𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾
𑌨𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌚𑍇𑌤𑌸𑌃 ।
𑌯𑌜𑍍𑌞𑌾𑌯𑌾𑌚𑌰𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌮𑌗𑍍𑌰𑌂
𑌪𑍍𑌰𑌵𑌿𑌲𑍀𑌯𑌤𑍇 ॥

அபிமானமற்றுக் காமக்குரோதமுதலியன இழந்து, ஞான நிஷ்டையில் மனதை யமைத்தவனாய் ஈசுவராராதனார்த்தமாகவே (சகல) கருமங்களையுஞ் செய்கிறவனுக்கு அக்கருமங்கள் பலன்களுடன் நசித்துப் போகின்றன.

ப்ரஹ்மார்பணம் ப்ரஹ்மஹ
விர் ப்ரஹ்மாக்நௌ ப்ரஹ்மணாஹு
தம் ।

ப்ரஹ்மைவ தேந கந்தவ்யம்
ப்ரஹ்மகர்மஸமாதிநா ॥

பகவத்கீதை அத். 4. (14-15) (19-24.)

பிரம்மமாகிய ஹவிஸ் (பலிபதார்த்தம்) பிரம்மமாகிய அக்நியில் பிர்ம்மத்தை யுத்தேசித்தே அர்ப்பணம் செய்யப்படுகிறது. இவ்வித சதாகாலம் பிரம்மார்ப்பண வுத்தேசத்துடன் செய்யப்படுகிற கர்மானுஷ்டானரூபமான சமாதியில் அவன் (முடிவில்) பிரம்மத்தையே யடைகிறான்.

யதா ஸர்வே ப்ரமுச்யந்தே
காமா யேऽஸ்ய ஹ்ருதி ஶ்ரிதா: ।

அத மர்த்யோऽம்ருதோ பவ
த்யத்ர ப்ரஹ்ம ஸமச்நுதே ॥

(கடோபநிஷத்.)

ஹிருதயத்தில் தங்கியிருக்கும் சகல ஆசைகளும் எப்பொழுது அழிகின்றனவோ அப்பொழுதுதான் மரணாதிகளையுடைய மானிடன் அம்மரண நிலைமை நீங்கி இவ்விடத்திலேயே பிர்ம்மானுபவத்தையடைகிறான்.

ஆத்மாநம் ரதிநம் வித்தி ஶரீ
ரம் ரதமேவ து ।

புத்திம் து ஸாரதிம் வித்தி
மந: ப்ரக்ரஹமேவ ச ॥

ஆத்மாவை ரதத்திற்குச் சொந்தக்காரன் என்றும் சரீரமே ரதம் என்றும் அறி; அறிவே சாரதியென்றும் மனமே கடிவாளமென்று மறிந்துகொள்.

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌹𑌯𑌾𑌨𑌾𑌹𑍁𑌃
𑌵𑌿𑌷𑌯𑌾𑌂𑌸𑍍𑌤𑍇𑌷𑍁𑌗𑍋𑌚𑌰𑌾𑌨𑍍 ।
𑌆𑌤𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑍋 𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌭𑍋𑌕𑍍𑌤𑍇𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌰𑍍𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃॥

இந்திரியங்களை அசுவங்களென்றும் விஷயங்களை யவைகளின் சஞ்சாரபூமியென்றும் சொல்வார்கள். இந்திரியம், மனதிவற்றோடும் சொந்த ஆத்மாவை போக்தா அல்லது எஜமானன் என்றும்மேலோர்கூறுவர்.

𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌾𑌨𑍍𑌭𑌵𑌤𑍍𑌯 𑌯𑍁
𑌕𑍍𑌤𑍇𑌨 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌦𑌾 ।
𑌤𑌸𑍍𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑍍𑌯𑌵𑌶𑍍𑌯𑌾
𑌨𑌿 𑌦𑍁𑌷𑍍𑌟𑌾𑌶𑍍𑌵𑌾 𑌇𑌵 𑌸𑌾𑌰𑌥𑍇𑌃॥

மனதை யடக்கிக் கொள்ளாத அவிவேகியின் இந்திரியங்கள் சாரதிக்கு வசப்படாத துஷ்டக் குதிரைகளைப்போலக் கட்டுப்படாதவைகளா யிருக்கின்றன.

𑌯𑌸𑍍𑌤𑍁𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌾𑌨𑍍𑌭𑌵𑌤𑌿 𑌯𑍁
𑌕𑍍𑌤𑍇𑌨 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌦𑌾 ।
𑌤𑌸𑍍𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿𑌵𑌶𑍍𑌯𑌾𑌨𑌿
𑌸𑌦𑌶𑍍𑌵𑌾 𑌇𑌵𑌸𑌾𑌰𑌥𑍇𑌃 ।

மனதை யடக்கிக் கொண்டிருக்கும் விவேகிக்கு இந்திரியங்கள் சாரதிக்கு வசப்பட்ட நல்ல சாதுவான குதிரைகளைப் போல் வசியங்களா யிருக்கின்றன.

யஸ்த்வவிஜ்ஞாநவாந்பவத்யமந
ஸ்கஸ்ஸதாஶுசி: ।
நஸதத்பதமாப்நோதி ஸம்
ஸாரஞ்சாதிகச்சதி ॥
கடோபநிஷத்.

மனதடங்காத அவிவேகி யொருபொழுதும் அவ்வுந்நதபதவியை யடையப்போகிறதில்லை. சம்சாரத்திற்கே திரும்பிவருகிறான்.

---

## அதிகாரம் 5.

### பரித்தியாகம் அல்லது பலிகொடுத்தல்.

பரித்தியாகம் அல்லது பலிகொடுத்தல் என்னும் விஷயம் இந்தியாவில் யாவருக்கும் விசேஷமாய்த் தெரிந்த சமாசாரமே. ஆயினும் மாணுக்கன் இவ்வித பலி கொடுத்தல் யாவற்றினுமுள்ள அடிப்படையான கருத்தின்னதெனக் கூர்ந்து விசாரம்பண்ணுவிடின், உண்மையில்முடிவாய், ஒவ்வொருவனும் பிறர்பொருட்டுத் தன்னையே பரித்தியாகம்பண்ணிக் கொள்ளும்படி பக்குவமடைவதற்குத் தான் ஆரம்ப தசைகளில் ஆடு மாடு முதலிய இதர பதார்த்தங்களைப் பலிகொடுத்தலாகிய பழக்கங்களும் விவகாரங்களும் ஏற்பட்டிருக்கின்றனவென்றும் அவற்றின் அந்தரங்கக் கருத்து இவ்வாத்மத்தியாகமே தவிர வேறன்றென்றும் அறிந்துகொள்ள இயலாது.

இங்கு முதன்முதல் நாம் அறிந்துகொள்ளவேண்டிய கருத்தாவது ; பிரபஞ்ச சிருஷ்டியே ஒரு மகாயாகம் அல்லது பெரும் ஆத்மதியாகமாகிய மகா பலி பிரதானமாம். ஈசுவரன் ஒரு பிரபஞ்சம் ஆவிர்ப்பாவ

மடையும்பொருட்டுத் தன்னை மாயையிலழுத்திக்கொள்ளுகிருன். அதாவது அகண்டமாகிய தன்னைப் பந்தப் படுத்திக்கொள்ளுகிருன். இவ்விஷயத்தைச் சுருதியும் ஸ்மிருதியும் கோஷிக்கின்றன ; ருக்வேதம் புருஷசூக்தத்திலும், ஸ்ரீ கிருஷ்ணனுல் பகவத்கீதை 8-ம் அத்தியாயம் 3-ம் சுலோகத்திலும் வெளிப்படையாகப் பூதங்களைச் சிருஷ்டிபண்ணும் விசர்க்கரூபமான யக்நம், எனவும் கூறப்பட்டிருக்கின்றது. ஆத்மார்த்த வியவஹாரங்களைப் பேசுமிடத்து மாயையின்கண் அழுந்துதல் என்னும் கருத்திற்கு 'இறத்தல்' என்பது பரிபாஷையாக உபயோகப்படுத்தப்படுகிறது. ஈசுவரன் இவ்விதம் பிரபஞ்சோற்பத்தியாகும் மகா யக்ஞத்தில் தனது அம்சங்களாகிய ஜீவர்களும் தனித்தனி பகிர்முகப்பட்டு முடிவில் தன்னநந்த சக்திகளையும் விவிதரூபங்களில் பிரகாசப்படுத்திகொள்ளக் கூடியவர்களாகும் பொருட்டுத் தன்னையே ஆதியில் பலிகொடுத்தான். இதுதான் ஆதியல்லது புராதன யக்ஞம். இதுதான் யக்ஞரூபவிதி யல்லது நியதிக்கு ஆரம்பமாம். இதன் கருத்தும், பரோபகாரார்த்தம் ஆத்ம தியாகம்செய்தல், அல்லது தன்னையே அர்ப்பணம் பண்ணுதல் என்பதை வெளிப்படுத்துகிறது.

இப்பலிகொடுத்தல் என்பது சமஸ்த ஜீவசமூக பரிபாகத்திற்கும் இயற்கையில் அவசியமான ஓர் விதியாம். ஆரம்பதசைகளில் ஜீவர்கள் தம்மறிவின்றியே நியதியால் இவ்விதம் ஒன்றுக்கொன்று பலிகொடுக்கப் படுகின்றன. ஆதலால் தம்மையறியாமலே பக்குவத்தையு மடைகின்றன. இவைகளின் சம்மதமு ஞானமுமில்லாமல் இவைகளின் சரீரங்கள் பலாத்காரமாகச்

சிதைக்கப்பட்டு இவைகள் வெவ்வேறு ரூபங்களல்லது சரீரங்களை யடையச் செய்விக்கப்படுகின்றன. இவ்விதம் மேற்பட்ட ரூபங்களையடைவதால் அவைகட்குப் பரிபாகம் விர்த்தியாகின்றது.

உலோக வர்க்கத்தின் ஜீவக்கூட்டங்கள் தமது சரீரங்கள் சிதைக்கப்பட்டுக் கந்தமூலங்களுக் கிரையாக்கப்படுவதாலேயே மேல்வருக்கச் சரீரங்களை யடைவிக்கப்படுகின்றன. அப்படியே கந்தமூலங்களும் மிருகாதிகளுக்கு ஆகாரமாக்கப் படுவதாலேயே இக்கந்தமூலவர்க்கத்தின் ஜீவர்களும் மேல் வருக்கத்துட்செல்ல நேருகின்றது. இவ்விதமே மிருக சரீரங்களும் இதர மிருகங்கள், காட்டுமிருண்டிகள், சில மானிட வகுப்புகளிவற்றிற்காகாரமாக்கப் படுவதால் அம்மிருகங்களும் மானிடவர்க்கத்துட் பிரவேசிக்கக் கூடியவைகளாகின்றன. கடைசியில் மானிடரும் மேற்பட்ட வருக்கங்களில் பிரவேசிக்க இடம் பெறுதல் எப்படியென்றால் இவர் சரீரங்களும் நரமாம்ச பக்ஷணிகள் மத்தியிலும், பெரிய யுத்த முதலிய சந்தர்ப்பங்களிலும் இதர மானிடர்க் குபயோகமாம்படி அழிக்கப்படுவதாற்றான் என அறிதல் வேண்டும்.

இவையாவற்றிலும் ஜீவர்களின் சம்மதமும் பிரக்ஞையுமின்றி இவர்களின் சரீரங்கள் இதர ஜீவர்களின் உபயோகத்துக்காக உதவப்படுகின்றன. வெகு கால பரிபாகத்தின் பின்னர் தான் ஜீவன் இப்பலிகொடுத்தலானது சர்வப்பிரபஞ்சத்திலும் இயற்கையிலேயே யமைந்த ஒழுங்கென்று அறிந்துகொள்ளக் கூடியவனுகித் தன்னுபாதிகளைப் பரோபகாரார்த்தம் கொடுக்க வேண்டுமென்று தெரிந்து புத்திபூர்வகமாய்த் தத்தம்

பண்ண இச்சை கொள்ளுகிறான். இதுவே ஆத்மதியாகம்; அல்லது ஈச்சுவரனது குணமென்று சொல்லப்படும். இதுதான் ஜீவன் ஈச்சுவரனுடைய அம்சமேயென்பதற்கு அறிகுறியாகின்றது.

இவ்வாத்மதியாகத்தைப் பற்றிய ஒரு அற்புதமான சரித்திரம் மகாபாரதத்திற் கூறப்படுகின்றது. அது வருமாறு:—'தேவர்கட் கதிபதியாகிய இந்திரன் ஒரு காலத்தில் ஒரு ரிஷியின் கோபத்திலுதித்தவனாகிய விருத்திராசுரன் என்னும் பகைவனையொரு அக்கிரமத்தால் மிக்க கோபமூட்டினதால் அவனால் மிக இடுக்கண்களை யடைந்தவனாயினான். விருத்திரன் தைத்தியர்களைத் திரட்டிக்கொண்டு இந்திரனையு மவன் சைனியங்களையும் யுத்தங்களில் முறியடித்து இந்திரன் ராஜதானியாகிய அமராவதியைவிட்டு அவனைத் துரத்திவிட்டு அவன் ராஜ்ஜியத்தையும் பிடித்துக்கொண்டான். ராஜ்ஜியமிழந்த இந்திரனும் தேவர் கூட்டங்களும் பல காலம் அலைந்து திரிந்து அநேகம் தடவைகளில் தம்மி ராஜ்யத்தைத் திரும்பியடைய முயன்றனராயினும் அபஜயமே யடைந்தனர். இந்திராதிகள் முடிவில் நியாயமாய்க் கோபங்கொண்ட ஒரு ரிஷியின் சாபத்தை வேறொரு ரிஷி தன் கிருபையால் தன்னையே தியாகம் பண்ணிக்கொண்டாலொழிய வேறெவ்விதத்தாலு மாற்றிக்கொள்ள முடியாதென்பதை யறிந்து ஒரு மஹாரிஷியாற் பிரீதிபூர்வமாய்க் கொடுக்கப்பட்ட அவர் சொந்த முதுகெலும்புகளைக் கொண்டு ஒரு வஜ்ராயுதம் செய்து கொண்டாலன்றி மற்றெவ்வித ஆயுதத்தாலு மவ்வசுரனை வெல்லமுடியாதெனத் தெளிந்தார்கள். பின் 'ததீசி' முனிவரிடம் தேவர்கள் சென்று

தம் பெருங்குறையைத் தெரிவித்தார்கள். அம்முனிவரும் மகா கிருபையடைந்து "எனது சரீரத்தைமிகப் பிரீதியுடன் உங்களுக்களித்தேன்; அதை நீங்கள் வேண்டியபடி யுபயோகஞ் செய்துகொள்ளுங்கள்," என விடை தந்தனர். பிறகு தேவ சில்பியாகிய விசுவகர்மாவும் தபஸ், பரிசுத்தியால் ஜ்யோதிர்மயமாய் விளங்கும் அப்புண்ணிய சரீரத்தை எவ்வித மழிப்பதென நடுங்கியபொழுது முனிவரும் புன்சிரிப்படைந்து "இச்சரீரத்தை உப்பால் மூடுங்கள். பிறகு மாட்டுக் கூட்டங்களைத் தருவித்து இதை நக்கும்படிவிட்டால் அவை சரீரத்தில் ரத்தமாமிசமவ்வளவையும் நக்கிவிடட்டும்; பின்னர் உங்களுக்குத் தேவையான எலும்புகளைமட்டும் நீங்கள் எடுத்துக்கொள்ளலாம்." இவ்விதம் செய்தால் இச்சரீரத்தில் ஒரு சிறிதும் வீணுகாமல் முழுவதும் உபயோகப்படுவதாகு"மெனச் சொல்லினர்.

அப்படியே நடத்தப்பட்டது. அம்மகோன்னதமான ஆத்மதியாகத்தால் ஜனித்தபலத்திற்கு முன்னிற்கமாட்டாமல் விருத்திரனும் அழிவடைந்தனன்.

இவ்வித மகாத்தியாகத்திற்கு ஜீவர்கள் ஆரம்பத்திலேயே அருகர்களாவதற்கு முடியாததலால் ரிஷிகள் படிப்படியாய் இவர்களுக்கு இவ்விஷயம் நிலைபெற்று வரும்பொருட்டு அநேக கிரமங்களைச் சாஸ்திரங்களில் உபதேசித்திருக்கிருர்கள். முதலில் பின்னுல் கிடைக்கக் கூடிய நன்மையை யுத்தேசித்துத் தன் பொருள்களில் சிலவற்றைத் தியாகம் செய்யும்படி சொல்லப்பட்டிருக்கிறது. இப்பொழுது பிறர்க்குதவி செய்வோமாயின் அது பலமடங்கு அதிகமாய் வருங்காலத்தில் நமக்குத் திரும்பிவருமென்று சாஸ்திரத்தில் கூறியிருக்கின்றது.

ஒருவனது பொருள்கள் யாவும் அவனுக் கவசியமான வைகளாயும் அவனுக்கு இன்றியமையாதனவாயும் அவனுல் எண்ணப்படுகின்றமையால் அவற்றையுந் தானுகவே அவன் பாவிக்கிருன். ஆதலால் இவைகளில் சிலவற்றைத் தியாகம் பண்ணும்பொழுது தனது பாஹியாம்சங்களில் சிலவற்றையே தியாகம்பண்ணுவதாய் அவனது கருத்து ஏற்படுவதும் சகஜமே. இவ்வித வஸ்துக்களைத் தற்காலத்தில் துறப்பதால் பிற்காலத்தில் அதிகமாக அவ்வித வஸ்துகளை யவனடையலாமென ரிஷிகள் உபதேசிக்கிருர்கள். அப்படியே இவ்வுலகத்தில் இவ்விதப் பதார்த்தங்கள், போகானுபவங்களை, தத்தம் பண்ணிஞல் மறுவுலகத்தில் விசேஷானுபவம் கிடைப்பதற்கு மார்க்கமாகின்றதெனவும் உபதேசிக்கிருர்கள். இம்மாதிரி வரவர இவ்வித தியாகம் ஜீவனுக்கு மிகவும் வழக்கப்பட்டதாகி, ஆரம்பத்திற்போல் பிற்காலத்திலோ அல்லது மறுவுலகத்திலோ விசேஷ பலனை யபேக்ஷித்துத் தான், தியாகங்கள் செய்து வருவதை விட்டுக் கேவலம் கைம்மாறு கருதாமல் பரோபகாரம் செய்து வருவது தனது கடைமை யெனவும், அதற்குப் பலன் அவ்வித பரோபகாரம் செய்தலிஞலுண்டாகும் ஆனந்தமே தவிர வேரென்றவசிய மல்லவெனவும் அறிந்து கொள்ளுகிருன்.

இப்படிப்பில் மற்ரோர் பாடமாவது ஜீவனுக்கும் இதரப்பிராணிகட்குமுள்ள சம்பந்தமியாதெனத் தெளிதலும், ஒரு ஜீவன் பிறருடன் சம்பந்தமற்ற தனிப்பதார்த்த மன்று எனலும், பின்னை சகல ஜீவன்களும், சகல சேதனமும் ஒன்ருேடொன்று சம்பந்தமுள்ள வஸ்துக்களென்றும், இவ்விதம் ஒன்றையொன்று

அபேக்ஷியாமல் எவ்விதமும் சாசுவதமான க்ஷேமத்தை யாவது அபிவிர்த்தியையாவது அடைவது யாவராலு முடியா தென்று மறிந்துகொள்ளவேண்டும். ஆதலின் தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் பிதிருக்களுக்கும் மா னிடர்களுக்கும் மிருகங்களுக்கும் மனிதன் சதாகால மும் யாகாதிகள் செய்துவரல்வேண்டுமென, ரிஷிகள் உபதேசிக்கின்றனர். ஏனெனில் இத்தேவர் ரிஷிகள் முதலினோர் மனிதன்வாழும் பொருட்டு அநேக உதவி களைச் செய்துவருகின்றனராதலின் அவர்கட்கு இவன் கடமைப்படுகின்றனன். அக்கடனை யிவன் தானதியா காதிகளால் தீர்க்கவேண்டியதும் முறையேயன்றி வே றன்று. பிறரால் இவன் ஜீவிக்கின்றனனாதலின் சாதா ரண ஒழுங்கிலும் இவன் பிறர் ஜீவிக்கும்படி வசிக்க வேண்டியது அவசியம் என்பது ஏற்படும். ஆதலால் தியாகமாவது ஓர் அவசியமான கடமையே. அது அவ சியம் நம்மால் தீர்க்கப்படவேண்டிய கடன்களில் ஒன் றும் நாம் அனுஷ்டித்தே தீரவேண்டிய முறையுமாம். இவ்விதம் நாள் செல்லச்செல்ல, முடிவில் பரிபாக முதி ர்ச்சியில் தனது ஜனனஸ்தானமாகிய ஈச்சுவரனோடு தன தபேதத்தை ஜீவனறிந்தபின், இவ்விதத்தியாகம் ஆனந் தமாகவே முடிந்து பிறர் பொருட்டுத் தன்னையே பலி கொடுத்தல், தன்னிடமடங்கி நிற்கும் திவ்வியசக்தி களைப்பிரகாசித்தலே யல்லது, வேறெவ்வித துக்கமல் லது சங்கடமுள்ள தொழிலல்லவெனப் பிரதிநிமிஷமு மனுபவ மேற்படுகின்றது. ஆதலால் இப்பொழுது ஜீவ னுக்கு ஆத்மத்தியாகம் சகஜமான நடத்தையாகின்றது. பிறரிடமிருந்து எம்மட்டில் அதிகமாய்த் தான் கிரஹிக் கலாமெனவும் அப்படி பிறர்க்கும் எவ்வளவு சொற்ப

மாய்க் கொடுக்கவேண்டியிருக்கிறதெனவும் ஆருய்வ தைவிட்டு, எவ்வளவு சொற்பம் தனக்கு வேண்டியிருக்குமென்றும், எம்மட்டில் அதிகமாய்த் தான் பிறர் பொருட்டு உதவலாமென்றும் கவனிப்பவனுகிருன். தான் தன்னுபாதிகளின் சம்ரக்ஷணத்தின் பொருட்டுக் கிரஹித்துக் கொள்ளும் பதார்த்தங்களை யுற்றுநோக்குவானுகி, தன்னுல் கூடியவரை தனது போஷணையின் உபயோகப்படுவதில் கந்தமூல முதலிய கீழ்வருக்கப் பதார்த்தங்களின் சரீரங்களல்லது ரூபங்களுக்குண்டாகும் துன்பத்தைக் குறைக்கப் பிரயாசைப்படுகிருன். உணர்ச்சி யல்லது சேதனத்தையுடைய பிராணிகட்கு ஹிம்சையுண்டாக்கும் ஆகாரங்கள், விநோதங்களிவற்றைப் பரிஹரித்து சர்வபூதங்களின் ஹிதத்தை நாடுவோனுகிருன். சிலமிருகங்கள் இதரமிருகங்களால் தின்னப்படுவதும், மனிதரும் மனிதரால் உண்ணப்படுவதும், மானிடரால் மிருகங்கள் ஆகாரார்த்தமோ அல்லது வேட்டை முதலிய விநோதத்தின் பொருட்டோ கொல்லப்படுவதும், அவைகளிடத்தில் சிலகுணங்களும் சுவபாவங்களும் பக்குவப்படுவதற்கு இன்றியமையாதனவா யிருந்தனவாயினும், மானிடர் அத்தசைகளிலும் பதவிகளிலும் எந்நாளும்இருக்க நினையாமல் மேற்செல்ல முயலவேண்டிய தவசியமாதலின் கருணை, அன்பு, இரக்கமுதலிய நற்குணங்களைச் சம்பாதித்து விர்த்திசெய்து வரல்வேண்டும். தம்மிலும் பலங்குறைந்த ஜந்துக்கள் தம்மாலுபகாரம் செய்யப்படவேண்டிய கனிஷ்டவாத்மாக்கள் என்றே பாவிக்கப்படவேண்டுமே யொழிய அவற்றைத் தமது ஹிம்சைகளுக்கேற்ற பலிகள் எனக்கொள்ளல் தகாது.

சகலஜந்துக்களும் தன்னைவிட்டுப் பின்னமாகாத ஆத்மாவேயென ஜீவன் பாவித்து வர, நாளடைவில் தன்னிலுமிக்கோரான மகான்கள், ஜகத்பிதாவாகிய ஈசுவரன், ஆகிய இவர்களோடும் அபேதம் இவனுக்குச் சிறிது சிறிதாய் அனுபவத்திற்குவரும். காலக்கிரமத்தில், ஈசுவரன், தான் பிறர் என்னும் பேதமற்றுச் சகல வுலகங்களும் பரிபாகமடையவேண்டியதற்காகவே பிரகாசிப்பதுபோல், ஜீவனும் பிறர் வாழ்வே தனது வாழ்வென்றும் அவ்வீசுவரனது திவ்விய சைதன்யதாரைகள் நாற்புறமும் பிரவேசிப்பதால் உலகமெங்கு முய்யும்பொருட்டு, அத்தாரைகள் பிரவேசிக்கத் தகும் கால்வாய்களில் தானும் ஒருவனுவதே தானடையக்கூடிய பெரும்பாக்கியமென்றும் தெளிந்து ஈசுவராக்ஞைக்கு ஓர்கருவியாகிறுன். பின்னர் இவனது சகல கிரியைகளும் ஈசுவரனுக்கு அர்ப்பணம் பண்ணப்பட்ட யாகமாகி விடுகின்றன. அவை யினிமேலிவனைப் பந்தப்படுத்த முடியாது. ஆகவே இந்தத் தியாக மகா விதியானது முடிவில் முக்திக்கனுகூலமான ஆசரணை யாகின்றது.

## பிரமாண சுலோகங்கள்.

𑌸𑌹𑌯𑌜𑍍𑌞𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾
𑌪𑍁𑌰𑍋𑌵𑌾𑌚 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌃 ।

𑌅𑌨𑍇𑌨 𑌪𑍍𑌰𑌸𑌵𑌿𑌷𑍍𑌯𑌧𑍍𑌵𑌮𑍍 𑌏𑌷
𑌵𑍋𑌽𑌸𑍍𑌤𑍍𑌵𑌿𑌷𑍍𑌟𑌕𑌾𑌮𑌧𑍁𑌕𑍍 ॥

பிர்ம்மாவானவர் ஆதிகாலத்தில் பிரஜைகளை யக்ஞத்தோடுகூடவே சிருஷ்டித்துச் சொன்னதாவது: "நீங்கள் இதனுல் விருத்தியடையக் கடவீர்கள். இஃது உங்களுக்கு இஷ்டமான பிரியங்களை யளிப்பதாகட்டும்."

𑌦𑍇𑌵𑌾𑌨𑍍𑌭𑌾𑌵𑌯𑌤𑌾𑌨𑍇𑌨 𑌤𑍇
𑌦𑍇𑌵𑌾𑌭𑌾𑌵𑌯𑌂𑌤𑍁 𑌵𑌃 ।
𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌂𑌭𑌾𑌵𑌯𑌂𑌤𑌃 𑌶𑍍𑌰𑍇
𑌯𑌃 𑌪𑌰𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌥 ।

“இஃதால் நீங்கள் தேவதைகளைப் போஷியுங்கள்; அவர்களு முங்களைப் போஷிக்கட்டும். இப்படி யொருவரை யொருவர் போஷித்து வருவதால் நீங்கள் இருதிறத்தாரும் உயர்ந்த நன்மையை யடைவீர்கள்.

𑌇𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌭𑍋𑌗𑌾𑌨𑍍𑌹𑌿 𑌵𑍋 𑌦𑍇𑌵𑌾
𑌦𑌾𑌸𑍍𑌯𑌂𑌤𑍇 𑌯𑌜𑍍𑌞𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌃 ।
𑌤𑍈𑌰𑍍𑌦𑌤𑍍𑌤𑌾𑌨𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑍈𑌭𑍍𑌯𑍋
𑌯𑍋 𑌭𑍁𑌂𑌕𑍍𑌤𑍇 𑌸𑍍𑌤𑍇𑌨 𑌏𑌵
𑌸𑌃 ॥

யக்ஞத்தாலாராதிக்கப்பட்ட தேவர்கள் உங்களுக்கு இஷ்டமான போகங்களைக் கொடுப்பார்கள். அப்படியவர்களால் கொடுக்கப்பட்ட பலங்களை அவர்கட்குப் பதில்செய்யாமல் தானே யனுபவிப்பவன் திருடனேயாவன்.

𑌯𑌜𑍍𑌞𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌶𑌿𑌨𑌃 𑌸𑌂𑌤𑍋
𑌮𑍁𑌚𑍍𑌯𑌂𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑍈𑌃 ।
𑌭𑍁𑌂𑌜𑌤𑍇 𑌤𑍇 𑌤𑍍𑌵𑌘𑌂 𑌪𑌾𑌪𑌾
𑌯𑍇 𑌪𑌚𑌂𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑌾𑌰𑌣𑌾𑌤𑍍 ॥

யக்ஞங்கள் செய்த பின் மீந்த அன்னபானாதிகளைப் புஜிப்பவர்கள் பாபங்களினின்றும் விடுபடுகிறார்கள். பின்னைத் தமக்கெனவே அன்னபானாதிகளைப் பாகம் பண்ணுவோர் பாபங்களைப் புஜிக்கிறார்கள்.

𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍍𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌪𑌰𑍍𑌜𑌨𑍍𑌯𑌾𑌦𑌨𑍍𑌨𑌸𑌂𑌭𑌵𑌃 ।

𑌯𑌜𑍍𑌞𑌾𑌦𑍍𑌭𑌵𑌤𑌿 𑌪𑌰𑍍𑌜𑌨𑍍𑌯𑍋 𑌯𑌜𑍍𑌞𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌃 ॥

அன்னத்தி னின்று ஜந்துக்கள் உண்டாகின்றன. அன்னோத்பத்தியோ மழையால் ஏற்படுகின்றது; மழை,யாகத்தாலும், யஜ்ஞம் கருமத்தாலு முண்டாகின்றது.

𑌕𑌰𑍍𑌮 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍋𑌦𑍍𑌭𑌵𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌕𑍍𑌷𑌰𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌮𑍍 ।

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌯𑌜𑍍𑌞𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌮𑍍 ॥

பகவத்கீதை அத். 3. (10-15).

கர்மம் பிர்ம்மத்தினிடமிருந்து உண்டாகின்றதென்றறி. பிர்ம்மமோ பரப்பிர்மம் அல்லது அக்ஷரத்தினின்றும் உத்பத்தியாகின்றது ; ஆதலால் எங்கு நிறைந்த பிர்ம்மம் யஜ்ஞத்தில் சதாகாலமும் விளங்குகின்றது.

𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑌂𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌯𑌜𑌂𑌤 𑌇𑌹 𑌦𑍇𑌵𑌤𑌾𑌃 ।

𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌂 𑌹𑌿 𑌮𑌾𑌨𑍁𑌷𑍇 𑌲𑍋𑌕𑍇 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌜𑌾 ॥

பகவத்கீதை அத். 4. (12).

இந்தலோகத்தில் கர்மங்களின் பலனை யபேக்ஷிக்கிறவர்கள் தேவதைகளை யுபாசிக்கிறார்கள். இம்மானுஷலோகத்தில் கருமத்தால் சித்தி சீக்கிரமுதிக்கிறது.

𑌆 𑌵𑌾𑌂 𑌰𑌾𑌜𑌾𑌨𑌾𑌵𑌧𑍍𑌵𑌰𑍇 𑌵𑌵𑍃𑌤𑍍𑌯𑌾𑌂 𑌹𑌵𑍍𑌯𑍇𑌭𑌿𑌰𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌵𑌰𑍁𑌣𑌾 𑌨𑌮𑍋𑌭𑌿𑌃

ஓ! ராஜர்களாகிய இந்திர வருணர்களே! எங்களுடைய இந்த யஜ்ஞத்திற்கு, எங்களுடைய வந்தன பலிகளால் நீங்கள் (திருப்தியடைந்து) சுமுகர்களாகவேண்டும்.

𑌅𑌸𑍍𑌮𑍇 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌵𑌰𑍁𑌣𑌾 𑌵𑌿𑌶𑍍𑌵𑌵𑌾𑌰𑌂 𑌰𑌯𑌿𑌂 𑌧𑌤𑍍𑌤𑌂 𑌵𑌸𑍁𑌮𑌨𑍍𑌤𑌂 𑌪𑍁𑌰𑍁𑌕𑍍𑌷𑍁𑌮𑍍 । 𑌇𑌯𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌵𑌰𑍁𑌣𑌮𑌷𑍍𑌟 𑌮𑍇 𑌗𑍀𑌃 𑌪𑍍𑌰𑌾𑌵𑌤𑍍𑌤𑍋𑌕𑍇 𑌤𑌨𑌯𑍇 𑌤𑍂𑌤𑍁𑌜𑌾𑌨𑌾 ॥

ஓ! இந்திர வருணர்களே! குறைவற்ற செல்வம், அன்னம், மங்களங்களை எங்களுக்களிப்பீராக.

ஓ! இந்திர வருணர்களே! எங்களுடைய இக்கானம் உங்களையடைந்து தன் வலிமையால் சந்தானவிர்த்தி எங்களுக்கு உண்டாக்கக்கடவது.

ருக்வேதம்.

[illegible]

(மேற்குறித்த)ஜ்வாலையுடைய அக்நிகளில் எவன் பலியாகுதிகளைக் கொட்டுகிறானோ அவனைக்காலம்வந்தவுடன் இச்சூரியரஸ்மிகள் தேவர்களின் ஏகாதிபதி வசிக்கும் ஸ்தானத்திற்குக் கொண்டு போகின்றன.

[illegible]

𑌏𑌹𑍍𑌯𑍇𑌹𑍀𑌤𑌿 𑌤𑌮𑌾𑌹𑍁𑌤𑌯𑌃
𑌸𑍁𑌵𑌰𑍍𑌚𑌸𑌃 𑌸𑍂𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌰𑌶𑍍𑌮𑌿𑌭𑌿𑌰𑍍
𑌯𑌜𑌮𑌾𑌨𑌂 𑌵𑌹𑌨𑍍𑌤𑌿 ।

𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌂 𑌵𑌾𑌚𑌮𑌭𑌿𑌵𑌦𑌨𑍍𑌤𑍍𑌯𑍋
𑌽𑌰𑍍𑌚𑌯𑌨𑍍𑌤𑍍𑌯 𑌏𑌷 𑌵𑌃 𑌪𑍁𑌣𑍍𑌯𑌃
𑌸𑍁𑌕𑍃𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌲𑍋𑌕𑌃 ॥

முண்டகோபநிஷத்.

இந்தப் பிரகாசம் பொருந்திய ஆகுதிகள் இந்த யாககர்த்தாவை வரவழைத்து, அவனுக்கு உபசாரமும் பண்ணி, பின்வரும் பிரியமான வசனங்களையும் சொல்லுகின்றன- (ஐயா) இது உமது சுகிருதத்தால் கிடைத்திருக்கிற பரிசுத்தமான பிர்ம்மலோகம்.

𑌯𑌜𑍍𑌞𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌮𑍃𑌤𑌭𑍁𑌜𑍋
𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍 ।

𑌨𑌾𑌯𑌂 𑌲𑍋𑌕𑍋𑌽𑌸𑍍𑌤𑍍𑌯𑌯𑌜𑍍𑌞𑌸𑍍𑌯
𑌕𑍁𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑌃 𑌕𑍁𑌰𑍁𑌸𑌤𑍍𑌤𑌮 ॥

பகவத்கீதை அத். 4. (31).

நித்தியநைமித்திகங்களான யஜ்ஞங்களைச் செய்தபின் மீந்த அமிருதமயமான அன்னத்தைப் புஜிப்பவர்கள் சாசுவதமான பிர்ம்மத்தை யடைகிறார்கள். ஓ! அர்ஜ்ஜுனா! யஜ்ஞஞ் செய்யாதவனுக்கு இவ்வுலகமேயில்லை ; அப்படியிருக்க வேறு உலகம் எப்படி கிட்டும்?

𑌗𑌤𑌸𑌙𑍍𑌗𑌸𑍍𑌯 𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌚𑍇𑌤𑌸𑌃 ।
𑌯𑌜𑍍𑌞𑌾𑌯𑌾𑌚𑌰𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌮𑌗𑍍𑌰𑌂 𑌪𑍍𑌰𑌵𑌿𑌲𑍀𑌯𑌤𑍇 ॥

பகவத்கீதை அத். 4. (23).

அபிமானமற்றுக் காமக்குரோதங்களை விட்டு ஞானத்தில் நிலைத்த மனதோடு யஜ்ஞார்த்தம் ஒருவன் செய்கிற கருமமத்தனையும் (பிற்படுத்தாமல்) லயமடைகிறது.

𑌯𑌤𑍍𑌕𑌰𑍋𑌷𑌿 𑌯𑌦𑌶𑍍𑌨𑌾𑌸𑌿 𑌯𑌜𑍍𑌜𑍁𑌹𑍋𑌷𑌿 𑌦𑌦𑌾𑌸𑌿 𑌯𑌤𑍍 ।
𑌯𑌤𑍍𑌤𑌪𑌸𑍍𑌯𑌸𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌤𑌤𑍍𑌕𑍁𑌰𑍁𑌷𑍍𑌵 𑌮𑌦𑌰𑍍𑌪𑌣𑌮𑍍 ॥
𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌫𑌲𑍈𑌰𑍇𑌵𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇 𑌕𑌰𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌨𑍈𑌃 ॥

பகவத்கீதை அத். 9. (27-29.)

"ஓ! குந்திபுத்திரா! எதைச் செய்தாலும், எதைப் புஜித்தாலும், எதை ஹோமித்தாலும், எதைத் தானம்பண்ணினாலும், எந்த தபசு பண்ணினாலும், எல்லாம் எனக்கு அர்ப்பணமாகச் செய்" "இவ்விதம் சுபாசுப பலன்களுக்குக், காரணங்களான கருமபந்தத்திலிருந்து நீ விடுபடுவாய்."

---

# அதிகாரம் 6.

## பிரத்தியக்ஷாப்பிரத்தியக்ஷ வுலகங்கள்.

நமக்கு நாற்புறமும் சூழ்ந்திருப்பதும், நமது மெய்-வாய்-கண்-மூக்கு-செவி முதலிய பஞ்சேந்திரியங்களுக்கும் விஷயமாவது மாகிய இந்த ஸ்தூல வுலகத்தை நாமெல்லோருமறிவோம். இவ்வுலகத்திலும் நமது திருஷ்டி முதலிய விந்திரியங்களுக்கு அகோசரமான அநேக பாகங்கள் உண்டென மேற்றிசைப் பிரத்தியக்ஷ விசாரத்தார் கூறுகின்றனர். இவைகளை யறிந்து கிரஹிப்பதற்கு ஏற்றபடி நமதிந்திரியங்கள் அவ்வளவு கூர்மையுள்ளனவல்ல. இவ்விபாகங்கள் நம்மிந்திரியங்களால் அறியக்கூடாதபடி அப்பிரத்தியக்ஷங்களாய் நிற்பினும் இவையாவும் இவ்வுலகத்தைச் சேர்ந்தவைகளாயும் மேற்கூறிய பிரத்தியக்ஷ விசாரத்தாரால் விசாரிக்கப்படுபவைகளாயும் உள்ள இந்த ஸ்தூலவுலகத்தின் பற்பல விபாகங்களேயாம். இந்த ஸ்தூலத்தின் பிரகிருதியும் கட்டிகள், திரவங்கள், ஆவிகள், ஆகாசங்கள் ஆகிய வகுப்புகளையுடையது. இவ்வகுப்புக்கள் யாவும் ஒரேவித ஸ்தூலபரமாணுவின் சேர்க்கைகளாம்.

மரணத்தால் இவ்வுலகத்தை விடும் ஜீவர்கள் பிரவேசிக்கும் அப்பிரத்தியக்ஷங்களான இதரவுலகங்களும் உண்டென்று நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். இவையிந்த ஸ்தூலவுலகத்தின் விபாகங்களல்ல. பூர், புவர், சுவர் ஆகிய திரிலோகங்களைப்பற்றி நாம் கிரந்தங்களில் படிக்கிறோம். இத்திரிலோகங்களைப்பற்றி ஒவ்வொருவரும் சிறிது அறிந்துகொள்ளல் அவசியம் ; ஏனெனில்

இங்குத்தான் ஜீவன் ஜனனமரண மாகிய மகா சக்கிரத்தில் கட்டுண்டுழல்கிறுன். அவனது பரிபாகமும் இத்திரிலோகத்திற்ருன் நிறைவேறுகிறது. இம் மூன்றுலோகங்களும் பிர்ம்மாவின் ஒரு பகல் எனக் கூறப்படும் ஓர் மகாகல்ப்பத்தின் ஆரம்பத்தில் சிருஷ்டிக்கப்பட்டு அதன் முடிவில் அழிவையடைகின்றன. இத்திரிலோகமும் தவிர இன்னும் நான்கு மகாலோகங்கள் உண்டு. அவை பிர்ம்மாவின் ஆயுள்காலமுழுவதும் நிலைபெற்று நிற்கின்றன. இவற்றைப்பற்றி இங்கு பேசவேண்டிய அவசரமில்லை. இம்மூன்று பெரிய லோகங்களுக்குள்ளும் சில விபாகங்களுக்கும் லோகங்கள் என்ற பெயரிடப்பட்டிருக்கிறது. அவையாவன ; புவர்லோகத்துள் பிரேதலோகமும்—பிதுர்லோகமும், சுவர்க்கத்தில் இந்திரலோகமும் சூரியலோகமுமாம்.

இனி நமக்குச் சம்பந்தப்பட்ட மூன்று மகாலோகங்களாவன : பூர்லோகமாவது இந்த ஸ்தூலவுலகம், அதாவது பூமியாம் ; புவர்லோகமாவது சுவர்க்கத்துக்கும் பூலோகத்துக்கும் மத்தியிலுள்ளது ; அதாவது சுவர்க்கத்திலிருந்து ஸ்தூலவுலகத்தை நோக்கிப் பகிர்முகமாகி வருவதற்கும் ஸ்தூலத்திலிருந்து சுவர்க்கத்தை நோக்கிச் செல்லுவதற்கும் பொருந்தியதாம். மூன்ருவதுசுவர்க்கலோகமாம். இவற்றுள் பூர்லோகம் சிறிது பாகம் நமக்குப்பிரத்தியக்ஷமானதும் மற்றப்பாகம் அகோசரமானதுமாயிருக்கின்றது. புவர்லோக சுவர்க்கலோகங்கள் முற்றிலும் அப்பிரத்தியக்ஷங்களாயுள்ளன. பூர்லோகத்தில் பிருதிவி தத்துவம் சகல ரூபங்கட்கு மாதாரமானது. அது கட்டி, திரவம், ஆவி, ஜோதி, ஆகாசம், பராகாசம், பரமாணுவாகிய எழுவித

ரூபங்களுடையது. கடைசியான நான்கும் ஆகாசங்கள் எனக்கூறப்படுகின்றன. புவர்லோகத்திலும் அம்மாதிரியான 7 உட்பிரிவுகள் உண்டு. ஆனுல் அவற்றிற்கு ஆதாரம் அப்புத்தத்துவமாகும். இவ்விதமே சுவர்க்கலோகத்திலும் எழுவித பேதங்கள் பிரகிருதியினிடம் விளங்குகின்றன. அங்கு அவற்றிற்கு அக்கினிதத்துவமாதாரமாகும்.

இம்மூன்று லோகங்களுக்கு ஒப்ப இந்த ஜீவனுக்கும் அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், என மூன்று கோசங்களுண்டு. அன்னமயகோசமானது நாமுட்கொள்ளுமாகாரத்தால் ஆக்கப்படுவதாகையால் இப்பெயர் அடைந்திருக்கிறது. இஃது ஸ்தூலத்தின் பிரத்தியக்ஷ விபாகங்களோடு சம்பந்தமுடையது. பிராணமயகோசம் அதாவது பிராணன் வஸிக்கும்கோசமாம். இது ஸ்தூலலோகத்தின் அப்பிரத்தியக்ஷ விபாகங்களோடு சம்பந்தமுடையதாய் அவற்றின் நான்குவித ஆகாச ஸ்திதிகளாலும் நிர்மாணம் பண்ணப்பட்டது. பிராணனென்பது ஜீவசக்தி. இது மேற்றிசையார் கூறும் காந்த சக்திகள் மின்சாரசக்திகள் முதலியவைகள் யாவுமடங்கியது. ஆனுல் உண்மையில் இன்னுமதிகபாகம் பிராண சக்தியில் அடங்கிக்கிடக்கின்றது. இந்த விரண்டு கோசங்களும் பூர்லோகத்தில் சம்பந்தப்பட்டவையாம்.

மனோமயகோசம் அல்லது மானதசரீரம் இரு விபாகங்களுடையது. காமாதிகள் வசிக்குமிடமாகிய இதனது ஸ்தூலவிபாகம் புவர்லோகத்தைச் சேர்ந்தது. மனோரதங்கள், சங்கல்பங்கள் தங்குமிடமாகிய இதனது சூட்சுமவிபாகம் சுவர்க்கலோகத்திலுள்ளது.

இக்கோசங்களுக்கு வேறு நாமதேயங்களு மிடப்பட்டிருக்கின்றன. அவை விபாகிக்கப்புகுவோரின் கருத்து அல்லது தாத்பரியத்திற்குத் தக்கபடி வேற்றுமைப்பட்டிருக்கின்றன. இத்தகைய பலவித நாமதேயங்களைக் கண்டு அவ்விஷயத்தை விசாரிக்க ஆரம்பிக்கும் சிறுவன் கலக்கமடையலாகாது. ஏனெனில் நாளடைவில் இவனது ஞானம் விருத்தியடையும்பொழுது இவ்வாறு அநேகம் நாமதேயங்களுக்கும் தக்கபடி பொருள்படுத்திக்கொள்ளும் திறமையு மிவனுக்கு ஏற்படும். இங்கு அவற்றுள் விசேஷமாக வழக்கத்தில் வந்திருக்கும் மூன்று பெயர்களைமட்டும் இப்பொழுது குறிப்பிடுவோம்.

ஸ்தூலசரீரம் அல்லது ஸ்தூலவுடம்பு; இது தான் கட்டி, திரவம், ஆவி யிவற்றாலாகிய அன்னமயகோசமாம்.

சூட்சுமசரீரம், அல்லது சூட்சுமவுடம்பு ; பிராணமய மனோமய கோசங்களடங்கியது. இவற்றோடு விஜ்ஞானமயகோசம் அல்லதுஞானவுடம்பும் இதனுள்ளடங்கியதே. இவ்விஞ்ஞானமயகோசமென்பதுதிரிலோகத்துக்குமப்பாலுள்ள மஹர்லோகத்தோடு ஜீவனையிணைக்கும் சரீரமாம். பிர்ம்மாவின் பகற்கால முடிவிலுண்டாகும் பிரளயத்தில் கீழ்ப்பட்ட திரிலோகங்களும் அழிந்துபோம்பொழுது இதுவரை ஜீவபரிபாக ஸ்தலமாகிய மஹர்லோகமானது அழிவடையாவிடினும் ஜீவன் வசிப்பதற்குத் தகாததாகின்றது. சூட்சுமசரீரத்தின் இவ்விபாகமாகிய ஞானவுடம் பென்னும் விஞ்ஞானமயகோசமானது மற்றைய தாழ்ந்தகோசங்களை நோக்க அழிவற்றதாய் ஜீவனது ஜனனமரண காலமுழுவதும் நிலைத்து நிற்கின்றது.

மேற்கூறிய இவ்விரு விபாகவேற்பாடுகளையும் அடியில் வரும் அட்டவணையில் விளக்குவாம்:—

| | சரீரம். | லோகம். | கோசம். |
|---|---|---|---|
| 1. | ஸ்தூலம் | பூர்லோகம் | அன்னமயம் |
| 2. | சூட்சுமம் | பூர்லோகம் | பிராணமயம் |
| 3. | சூட்சுமம் | புவர்லோகம் | மனோமயம் |
| 4. | சூட்சுமம் | சுவர்க்கலோகம் | மனோமயம் |

இவையாவும் மரணசமயத்தில் அல்லது பின்னர் அழிவடைந்து பிரதி ஜன்மத்திற்கும் நூதனமாய்ச் சிருஷ்டிக்கப்படுகின்றன.

| | | | |
|---|---|---|---|
| 5. | சூட்சுமம் | மஹார்லோகம் | விஞ்ஞானமயம். |

இஃது மரணகாலத்திலாவது அதன் பின்னராவது அழிவதில்லை. ஆதலால் பிரதிஜன்மத்திலும் நூதனமாய் இது சிருஷ்டிக்கப்படுகிறதில்லை.

சகல கிரியைகட்கு மாதாரமாகிய இந்திரியங்களான கைகள், கால்கள், வாக்கு, பிரஜோத்பத்தி மலஜல விசர்ச்சன மிவற்றி னிந்திரியங்கள், ஆகியஇவையாவும் ஸ்தூலசரீரத்தி லமைக்கப்பட்டிருக்கின்றன. இவற்றிற்கே சாதாரணமாய் கர்மேந்தியங்கள் என்ற பெயரிடப்பட்டிருக்கின்றது. ஆனால் உண்மையான கர்மேந்திரியங்கள் அதாவது மேற்கூறிய அவயவங்களை யடக்கி நடாத்தும் இந்திரியஸ்தானங்கள் சூட்சும சரீரத்தில்தான் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே சந்தோஷம் அல்லது துக்கம் என்று சொல்லும்படியான எவ்வித திடமான மனோரதமும் இவ்விந்திரிய வியவஹாரங்களைப் பாதிக்கின்றன. இதற்குத் திருஷ்டாந்தமாகக் கோபமுண்டாகும் வேளைகளில் கைகள் துடிப்பது, கால்கள் படபடப்பையடைவது, வாக்கு தடைபடுவது,

முதலியன சம்பவிக்கின்றன. ஞானேந்திரியங்களும் சூட்சும சரீரத்திலுள்ளவைகளே. இவைகளின் அவயவங்களான கண்கள், காதுகள், நாக்கு, மூக்கு, துவக்கு இவை ஸ்தூலசரீரத்திலுள்ளவைகள்.

இனி மரணகாலத்தில் என்ன சம்பவிக்கின்றதெனப்பார்ப்போம். முதலில் சூட்சுமசரீரம் ஜீவனால் பிராணமயகோசமூலமாய் ஆகர்ஷிக்கப்பட்டு ஸ்தூல சரீரத்தைவிட்டுப் பிரிக்கப்படுகிறது. இதனால் ஸ்தூல சரீரமானது ஜீவனற்ற மாமிசப் பிண்டமாகின்றது. அதன் அணுக்களை ஒன்றோடொன்று சேர்த்திணைத்து வந்த பிராணன் சென்றவுடன் இஃது கேவலம் பிணமாகின்றது. இச்சரீரத்தின் பாகங்களாகிய அறைகளில் இன்னும் வேண்டியமட்டில் பிராணன் தங்கி நிற்கின்றதாதலால் இவ்வறைகளாகிய சிறுவிபாகங்கள் உத்ஸாகத்துடன் ஒன்றைவிட் டொன்று பிரிந்துவிட எத்தனித்து விடுகின்றன. இவ்வநந்த பாகங்களையும் சேர்த்து அடக்கியாண்டு வந்த நாதனான ஜீவன் இப்பொழுது வெளியேறிவிட்டதன்றோ! இச்சமயத்தில் ஜீவன் சூட்சுமசரீரத்தில் தங்குகிறான். பின்னர், சீக்கிரத்தில் பிராணமயகோசத்தையும் விட்டு நீங்கி மனோமயகோசத்தில் ஸ்தூலபாகத்தையே தனது பாஹியபோர்வையாய்த் தரிக்கிறான். இப்பொழுது ஜீவன் பிரேதம் எனப்படுகிறான்; இவன் வசிக்கு முலகத்திற்கும் 'பிரேதலோகம்' என்று பெயர். இவன் பூலோகத்தில் வசிக்குங்காலத்தில் மிக நன்னடைத்தை யுள்ளவனாயிருந்திருப்பானாகில் இவ்வவஸ்தையில் மதுரமான ஸ்வப்நங்களை யனுபவித்து அப்பாற்செல்வான். தீய நடத்தையுள்ளவனாயிருந்திருந்தால் இப்பிரேதாவஸ்தை

யில் தானடையமுடியாத ஸ்தூலவின்பங்களை நினைந்து நினைந்துருகிச் சங்கடங்களை யனுபவிப்பான். இவ்விதம் இவனது ஆசைகளின் உறுதிக்கும் அவற்றை நீக்கிக் கொள்ளுவதற்குச்செல்லும் காலத்தின் அளவுக்கும்தக் கபடி சொல்பம் அல்லது நீடித்த காலத்தைக் கழித்த பின்னர், இவனது மனோமய கோசத்தில் ஸ்தூலதம மான பாகம் சிதறுண்டு போகின்றது. உடனே ஜீவன் ஓர்பிதுர்ரூபமாகிப் பிதுர்லோகத்தை யடைகிறான். இப் பிதுர்லோகத்திலும் மனோமயகோசத்திலுள்ள சுவர்க் கானுபவத்திற்கிசையாத அம்சங்களைப் பரிசுத்தப்படுத் திக்கொள்ளுவதற்கு வேண்டியகாலம் வசித்தபின் சுவர் க்கமடைந்து தான் இதுவரை யிந்த ஜன்மத்தில் உழை த்ததற்குப்பலனை அனுபவித் தானந்திக்கிறான்.

இச்சுவர்க்கானுபவகாலம் கழிந்தபின் மறுபடி யும் பூலோகத்தில் ஜனனமடைவதற்குக் காலம் சமீபிக் கின்றது. இப்பொழுது இப்பரிசுத்தமான மனோமய கோசமும் அழிந்து நீங்குவதால் ஜீவனும் விஞ்ஞான மயகோசத்திற் றங்குகிறான். ஜீவன் உடனே தனக்கு நூதனகோசங்களைச் சிருஷ்டித்துக் கொள்வதற்குத் தனது சக்தியைப் பகிர்முகப்படுத்திக் கீழுலகங்களில் இனி நிறைவேறவேண்டிய தன் வாழ்வுக்கு உசிதமாய் ஒரு புதிய மனோமயகோசத்தை யுண்டுபண்ணிக்கொள் ளுகின்றான். பின்னர் தேவர்கள் இவனுக்கு இவன் கர் மத்தை யனுசரித்துப் பிராணமய அன்னமயகோசங் களைச் சிருஷ்டிபண்ணிக்கொடுக்கிறார்கள். உடனே ஜீவ னும் பூலோகத்தில் ஜனிக்கிறான்.

இவைதான் ஜீவனது சம்சார மகா யாத்திரையில் திரும்பித் திரும்பி வரும் பதவிகள் அல்லது அவஸ்தை

களாம். பிரத்தியக்ஷமாகிய இந்தப் பூலோகத்தில் முதலில் பிறத்தல், பின் இறத்தல், பிறகு அப்பிரத்தியக்ஷமான மேலுலகங்களில் வசித்துப் பின்னர் பழையபடியே ஜனனமாதல் ஆகிய இவை காலத்திற்குக் காலம், சமயத்திற்குச் சமயம் விடாமற் சம்பவிக்கின்றன. முடிவில் இம்மூன்று லோகங்களின் அனுபவங்களிலும் ஜீவன் சலிப்படைந்து அப்பாலுள்ள மேலுலகங்களின் சூட்சுமதமமான அனுபவத்திற்கும் அவற்றின் பந்தரஹிதமான வாழ்வுக்கும் விருப்பங்கொண்டவனுகிச் சகலவித சம்சாரப் பிரபஞ்ச வியவஹாரங்களிலும் பற்றற்றுத் தியானம், பூஜை முதலியவற்றைச் செய்துவருவதிலும், கதியற்றவரை யாதரிப்பதிலும், அவர்க்கிரங்குவதிலும் ஆனந்திப்பவனுகிறுன். தனது உறுப்புகளைத் தன்னுடைய விஷயசுகத்துக்கு உபயோகிப்பதை நீக்கிப் பிறர்பொருட்டுழைப்பதிலேயே செலுத்துகிறுன். இவ்விதம் உலகத்தில் வியவஹாரம் புரிவதனுல் இவன் செய்கைகள் இவனைப் பந்தப்படுத்துவன வாகாதன்றே ! இவன் உண்மையில் மேலுலகங்களில் வசிப்பவனேயாகிக் கீழுலகங்களில் தங்கிக் கிடக்கும் தனது கருவிகளைத் தன்னுடைய சுத்த மனதின் கருவிகளாய் உபயோகித்து வரும் பழக்கமடைந்து காலக்கிரமத்தில் பூரணமாய்ப் பரிசுத்தப்படுத்தப்பட்டிருக்கும் தனது கருவி கரணங்களை லோகோபகாரமாய் உழைப்பதற்காக நிறுத்திக்கொண்டோ அல்லது அவற்றை யொழித்துப் பிரம்மத்தில் ஐக்கியமடைந்தோ சர்வப் பிரபஞ்சாதிபதியாகிய ஈசுவரனேடு சமமாகின்றுன்.

---

## சுலோகங்கள்.

𑌅𑌥 𑌤𑍍𑌰𑌯𑍋 𑌵𑌾𑌵 𑌲𑍋𑌕𑌾 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌲𑍋𑌕𑌃 𑌪𑌿𑌤𑍃𑌲𑍋𑌕𑍋 𑌦𑍇𑌵𑌲𑍋𑌕 𑌇𑌤𑌿 ।

பிருகதாரணியகோபநிஷத். i. V. 16.

உண்மையில் உலகங்கள் மூன்றேயாகும். மனுஷ்யலோகம், பித்ருலோகம், தேவலோகம் என.

𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌹𑌿 𑌧𑍍𑌰𑍁𑌵𑍋 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌧𑍍𑌰𑍁𑌵𑌂 𑌜𑌨𑍍𑌮 𑌮𑍃𑌤𑌸𑍍𑌯 𑌚 ।

𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑍍𑌯𑍇𑌽𑌰𑍍𑌥𑍇 𑌨 𑌤𑍍𑌵𑌂 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

பிறந்தவனுக்கு மரணம் நிச்சயம், இறந்தவனுக்குப் பிறப்பு நிச்சயமே. ஆதலால் யாவராலும் நீக்கப்படமுடியாத இவ்விஷயத்தில் நீ வியசனப் படுவதுசரியன்று.

𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌦𑍀𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑌿 𑌭𑌾𑌰𑌤 । 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌨𑌿𑌧𑌨𑌾𑌨𑍍𑌯𑍇𑌵 𑌤𑌤𑍍𑌰 𑌕𑌾 𑌪𑌰𑌿𑌦𑍇𑌵𑌨𑌾 ॥

பகவத்கீதை ii. 27. 28.

பூதங்கள் வியக்தத்திலிருந் துண்டாகின்றன. மத்தியிற் காணப்பட்டு(முடிவில்) அவ்வியக்தத்திலேயே லயமடைகின்றன. இந்தவிஷயத்தில் ஏன் விசனப்படவேண்டும்.

𑌸𑌹𑌸𑍍𑌰𑌯𑍁𑌗𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌮𑌹𑌰𑍍𑌯𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌵𑌿𑌦𑍁𑌃 ।

𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌂 𑌯𑍁𑌗𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌾𑌂 𑌤𑍇𑌽𑌹𑍋𑌰𑌾𑌤𑍍𑌰𑌵𑌿𑌦𑍋 𑌜𑌨𑌾𑌃 ॥

"பிர்ம்மாவுக்கு ஆயிரம்யுகங்கள் பகலென்றும், ஆயிரம் யுகங்கள் இரவென்றும் எவர்கள் அறிந்தவர்களோ அவர்களே இராப்பகலறிந்தவர்கள்."

𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌦𑍍𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 𑌪𑍍𑌰
𑌭𑌵𑌨𑍍𑌤𑍍𑌯𑌹𑌰𑌾𑌗𑌮𑍇 ।

𑌰𑌾𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌗𑌮𑍇 𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌨𑍍𑌤𑍇
𑌤𑌤𑍍𑌰𑍈𑌵𑌾𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌸𑌂𑌜𑍍𑌞𑌕𑍇 ॥

பகவத்கீதை Viii. 17. 18.

" (பிர்மாவினுடைய) பகற்காலாரம்பத்தில் அவ்வியக்தமாயிருக்கிற சூட்சுமப் பிரகிருதியினிடத்திலிருந்து காணப்படுகிற ஸ்தூலப் பிரபஞ்சங்களுண்டாகின்றன. இரவுவரும்போது அந்தப் பிரகிருதியிலேயே அடங்குகின்றன."

𑌤𑍍𑌰𑍈𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌮𑌾𑌂 𑌸𑍋𑌮𑌪𑌾𑌃
𑌪𑍂𑌤𑌪𑌾𑌪𑌾 𑌯𑌜𑍍𑌞𑍈𑌰𑌿𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵
𑌰𑍍𑌗𑌤𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌯𑌨𑍍𑌤𑍇 ।

𑌤𑍇 𑌪𑍁𑌣𑍍𑌯𑌮𑌾𑌸𑌾𑌦𑍍𑌯 𑌸𑍁
𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌲𑍋𑌕𑌮𑌶𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾
𑌨𑍍𑌦𑌿𑌵𑌿 𑌦𑍇𑌵𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 ॥

மூன்று வேதங்களையறிந்தவர்களும், சோமபானத்தைப் பண்ணுகிறவர்களும், யக்ஞங்களால் என்னைப்பூஜிக்கிறவர்களும் பாபமற்றவர்களுமானவர்கள். சுவர்க்கலோகத்தை யபேக்ஷிக்கிறார்கள். அவர்கள் புண்ணியபலனாகிய தேவேந்திர லோகத்தையடைந்து சுவர்க்கத்தில் தேவர்களுடைய உயர்ந்த ஆனந்தங்களையனுபவிக்கிறார்கள்.

𑌤𑍇 𑌤𑌂 𑌭𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌲𑍋𑌕𑌂 𑌵𑌿𑌶𑌾𑌲𑌂 𑌕𑍍𑌷𑍀𑌣𑍇 𑌪𑍁𑌣𑍍𑌯𑍇 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌲𑍋𑌕𑌂 𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 ।

𑌏𑌵𑌂 𑌤𑍍𑌰𑌯𑍀𑌧𑌰𑍍𑌮𑌮𑌨𑍁𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾 𑌗𑌤𑌾𑌗𑌤𑌂 𑌕𑌾𑌮𑌕𑌾𑌮𑌾 𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 ॥

பகவத்கீதை ix. 20. 21.

" அவர்கள் விஸ்தாரமான அந்த சுவர்க்க லோகத்தையனுபவித்து அவர்கள் புண்ணிய நசித்தபின் மனுஷியலோகத்தை யடைகிறார்கள். இந்தப்படி வேதோக்த தர்மத்தை யனுசரிக்கும் விஷயேச்சை யுள்ளவர்கள் போக்குவரவை யடைகிறார்கள்.

𑌬𑌹𑍂𑌨𑌾𑌂 𑌜𑌨𑍍𑌮𑌨𑌾𑌮𑌨𑍍𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌾𑌨𑍍𑌮𑌾𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 ।

𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌃 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 𑌸 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑍁𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌃 ॥

பகவத்கீதை vii. 19.

" வெகு ஜன்மங்களெடுத்தபின் சகலமும் வாசுதேவ ஸ்வரூபமென்று ஞானமடைந்துஎன்னைப்பஜிக்கிறான். அப்படிப்பட்ட மகாத்மா கிடைப்பது மிக அரிது.



# ஸநாதன தர்மம்.



## 2-ம் பாகம்.

### ஹிந்துமதத்தின் பொதுவான கர்மானுஷ்டானங்கள்.

---

### அதிகாரம் 1.

#### சம்ஸ்காரங்கள்.

ஒவ்வொரு மதத்திலும் அவ்வம்மதஸ்தர் அனுஷ்டிக்கவேண்டியதாய்ச் சில கருமங்கள் அல்லது அனுஷ்டானங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. பொதுவாய் இக்கருமானுஷ்டானங்களின் பிரயோஜனமாவது (1) ஜீவன் தனது கோசங்களை வசப்படுத்திக்கொண்டு அவற்றைப் பரிசுத்தம் பண்ணிக்கொள்வதற்கு உதவுவதும்,

(2) தேவர், ரிஷிகள் முதலிய பெரியோரின் சஹாயத்தை ஜீவனுக்குச் சம்பாதித்துக் கொடுப்பதும்,

(3) ஜீவன் மனதை யடக்கித் தியானம், நிஷ்டைகளைச் சுலபமாய்ச் சாதித்துக்கொள்ளும்படி அவனைச் சுற்றிலுமுள்ள ஆகாச ஸ்தலாதிகளைப் பரிசுத்தப்படுத்துவதுமேயாம்.

இவ்வுத்தேசத்துடன் சில சில ஸ்தூலதிரவியங்கள், தந்திரங்கள், ஆசனங்கள், த்வனிகள் ஆகிய இவை உத்

தேசித்த கருத்தைச் சாதிப்பதற்குமிக யோசனையோடு ஏற்படுத்தப்பட்டிருக்கும் ஒழுங்குடன் மேற்கூறிய கர்மாதிகளில் உபயோகிக்கப்படுகின்றன.

இவ்விதம் உபயோகிக்கப்படும் திரவியங்கள் அவ்வவற்றிலுள்ள சுத்த 'தேஜஸ்' சக்தியைப் பார்த்துத் தெரிந்தெடுக்கப் படுகின்றன. தேவதா பூஜைகளில் உபயோகிக்கப்படும் சிலவகைப் புஷ்பம் முதலிய திரவியங்கள் அவ்வந்த தேவதைக்குச் சொந்தமான தேஜசும் சக்தியும் சிறிது சிறிதுடையனவாதலால் தேவதைகளுக்கும் உபாஸகர்களுக்கும் மத்தியில் சம்பந்தத்தை ஏற்படுத்தக்கூடியவைகளாயிருத்தலை நோக்கி விதிக்கப்பட்டிருக்கின்றன.

உதாரணமாய்த் துளசிமணிகளானமைந்த வடம் அல்லது மாலை ஸ்ரீகிருஷ்ணனது ஆராதனத்திலும், ருத்திராக்ஷமாலை மஹாதேவர் ஆராதனத்திலும் உபயோகிக்கப்படுகின்றது.

தந்திரங்களும், ஆசனங்களும் அனேகமாய்ச் சரீர முழுது முலாவிவரும் பிராணவாயுவின் விபாகங்களைச் சுத்திபண்ணுகின்றன. இவற்றுள் சில (ஆசனதந்திரங்கள்) சரீரத்தின் தேஜஸ் வெளியேறி ஆகாயத்தில் கலந்து விடாமல் காப்பாற்றுவதற்கும், சரீரத்திற்குள்ளேயே இத்தேஜோதாரைகளைச் சித்தம் சாந்தியடைந்து தியானத்தில் செல்லுவதற் குபயோகமாம்படி சஞ்சரிக்கச் செய்வதற்கும் உதவுகின்றன.

த்வனிகள் மேற்கூறிய மூன்றுவித பிரயோஜனங்களுக்கு முதவுகின்றன. இவைகள் சூட்சுமமான அசைவுகளை யுண்டாக்குகின்றன. அசைவுகள் கிரமமாகவும் சமமாகவும் பிரவர்த்திக்குமாயின் மிகவும்

தாங்குதல் பொருந்தியதும் லகுவாய் பாதிக்கப்படுவது மான சூட்சும சரீரத்தின் சலனங்களைத் தாக்கி அவற்றையும் சமபாவமும், ஒழுங்குமுடையனவாக்கி விடுகின்றன. இவ்விதம் சூட்சுமசரீரத்தின் சலனங்கள் சீராக்கப்படின் அவை மனதுக்குச் சாந்தி சிரத்தை யிவற்றைக் கூட்டுவிக்கின்றன. சில உத்தமமான த்வனிகள் அவற்றை யுச்சரிக்கும் மனிதன் விஷயத்தில் ரிஷிகள் தேவர்களாகிய இவர்களுடைய கவனத்தை யாகருஷிக்கச்செய்கின்றன. உடனே அப்பெரியோர்களும் அவனுக்குபகாரம் செய்கிறார்கள். அன்றியும் தக்க உச்சரிப்புக்கள் துஷ்டபூதங்கள் முதலிய வசுத்தாம்சங்களை அணுகவொட்டாமல் விரட்டித் தம்மை யுச்சரிக்கும் மனிதனுக்குநாற்புறத்திலுமுள்ளஆகாயத்தைப் பரிசுத்தப்படுத்திவிடுகின்றன. இவ்வித முபயோகிக்கப்படும் துவனிகள் 'மந்திரங்கள்' என்னப்படும். மந்திரமாவது ஓர் குறிப்பிட்ட வரிசையில் உத்தேசிக்கப்பட்ட கருத்து அல்லது பலத்தோடு ஓர்விதத் தொடர்ச்சியில் உச்சரிக்கப்படும் த்வனிகளே. இந்த த்வனிகளின் வரிசை மாற்றப்பட்டால் அவற்றின் அசைவுகளும் மாறிவிடும், பலனும் மாறிவிடும் ; இதுவே மந்திரங்களை மொழிபெயர்க்கச் சாத்தியப்படா தென்பதற்குக் காரணம். மொழிபெயர்க்கப்பட்ட வொருமந்திரம் முன்பின்னாய் மாற்றப்பட்ட எழுத்துக்களையுடைய வார்த்தைகள் சேர்ந்த வொருவாக்கியம்போல நிரர்த்தகமாகும்.

மந்திரத்தைப்பற்றி இன்னும் ஒரு விஷயம் ஞாபகத்தில்வைத்தல் வேண்டும். அஃதாவது மந்திரத்தைப் பிரயோகிப்பவன் நன்னடக்கையைக் கடைப்பிடிக்கா

மல் காலங்கழித்து வருபவனாயின், மந்திரத்தாலுண்டா கும் உச்சரிப்புக்கள் அவனுக்கு நன்மையையின்றிக் கேட்டையே விளைவிக்கு மென்பதேயாம். ஏனெனில் இம் மந்திரங்கள் இவனது சூட்சுமசரீரத்தைச் சம்பந்திக் கும்பொழுது தமதுதிடமான சக்தியை அதனிடத்தில் தாக்கும்படி செய்கின்றன. அசுத்தமான இச்சா சங்கல் பங்களுக்கு நேர்விரோதியான இம்மந்திரங்களின்சக்தி மேற்கூறியவிதமாய்ச் சூட்சுமசரீரத்தில் தாக்குங்கால், இவனால் உற்பத்திபண்ணிக் கொள்ளப்படும் தீயவிச்சை முதலியவற்றால் நிறைந்த இவனது சூட்சுமசரீரம் ஒரு விதமும் மந்திரசக்திமற்றோர்விதமும்பிரவிர்த்திப்பதால் பெரும்போட்டியுண்டாகி மந்திரசக்தி பலப்படப்பலப் படச் சரீரம் சிதைவுண்டு சிலசமயம் காயப்பட்டுக் கிழிக்கப்பட்டாலும்படலாம்; இவனதிச்சாசங்கல்பங்கள் பரிசுத்தங்களாயின் இவை மந்திரசக்திக்கு அனுகூல மாகவே பிரவர்த்திக்குமாதலால் மேற்கூறியவிதம் போட்டி நேருவதற் காஸ்பதமில்லை. இவ்விதசுத்தமானஇச் சாசங்கல்பங்கள் எவ்வளவு பலஹீனங்களாயினும் சரி, அவை தம்மாற்கூடியவரை உதவிபுரியுமேயன்றி விரோதிப்பதற்கிடமில்லை.

மந்திரங்களை வெளிப்படையா யுச்சரிக்கவேண்டியது அவசியமன்று. வாஸ்தவத்தில் அவைகளின்ரஹஸ்யோச்சாரணமே மிக வெளிப்படையா யுச்சரித்தலைக்காட்டிலும் பன்மடங்கு விசேஷ சக்தியுள்ளதாம். இவ்வித ரஹஸ்யோச்சாரணங்கள் பிரகிருதியின் ஸ்தூல பாகங்களைக் காட்டிலுமதிகமாய்ச் சூட்சுமவிபாகங்களைப்பாதிக்கின்றன.

ஒரு ஹிந்துவின் ஆயுள்காலத்தில் அனுஷ்டிக்கப்ப

டும் கர்மங்களுக்குள் சிலமுக்கியமானவை அவனது பால்ய கௌமாராதி அவஸ்தைகளைக் குறிப்பிடும் அறி குறிகளாயிருக்கின்றன. பூர்வகாலங்களில் இவை எண் ணிறந்தனவாயிருந்தன. இவற்றுள் பத்து முக்கியமான வைகளாகக் கணிக்கப்பட்டுவந்தன. தற்காலத்தில் இப் பத்தினுள்ளும் சிலவே, அனுஷ்டிக்கப் படுகின்றன. இச்சமஸ்காரங்களில் ஏழு சிசு, பால்யபருவங்களைச்சே ர்ந்தன. இவ்வேழில் ஆறுவதுதான் 'அன்னப்பிராசன' மென்பது. இது குழந்தைக்குமுதல்முதல் கட்டியான ஆகாரமூட்டல் ஆகிய சடங்கு. இது சர்வத்திரானுஷ்ட முடையது. ஏழாவது தான் சூடாகரணம் அல்லது குடு மிவைத்தல். இதுவும் காதுகுத்தலும் அநேகமாய் எவ் விடத்தும் அனுஷ்டிக்கப்படுகின்றன. பிறகு உபநயநம் நடத்தப்படுகிறது. இதுவெகு முக்கியமான சடங்கு. இதில் பையன் குரு சமீபத்தையடைந்து அவரால் யக் ஞோபவீதம்என்னப்படும் பவித்திரமாகிய முப்புரிநூல் கொடுக்கப்பெற்று, காயத்திரி மந்திரத்தை யுபதேசிக் கப்படுகிறான். இவ்வுபதேசம் அவனை 'இருபிறப்பா ளன்' ஆகிய 'த்விஜன்' ஆக்குகின்றது.

உபநயநம் சிறுவனுடையவித்தியாப்பியாசநிலைமை யையாரம்பிக்கச்செய்கின்றது. இவ்வவஸ்தையில் பூர்ண மான 'பிர்ம்மசரியம்' அதாவது ஸ்திரீ விருத்தியின்மை விதிக்கப்பட்டிருக்கிறதோடு, சிறுவனுக்கு முயற்சியு டன் வித்தையையப்பியாசித்துவரலும் கடமையாய் ஏற் படுத்தப்பட்டிருக்கின்றது. இவ்வவஸ்தை வித்தியாப்பி யாசமுடிவில் கிரமமாய்க்கிருஹத்தை நோக்கித்திரும்பி வரலாகிய சமாவர்த்தனம் என்னும்சடங்குடன்முடிகின் றது. பிறகுசிறுவன் அடுத்தபடியாகிய கிருஹஸ்தம் அல்

லது கிருஹாதிகார நிலைமையில் பிரவேசிக்கத்தக்கவனுகிறுன். இப்பொழுதுதான் 'விவாஹம்' செய்யப்படுகின்றது. இதுசிறுவன்பிரௌடனுகிய புமானுகிப் புமானுக்குரிய சகல பாரங்களையும் வஹிக்கத்தக்கவனுவதைக் குறிப்பிடுகின்றது.

தற்காலத்திய ஹிந்தியாவில் மேற்கூறிய க்ஷேமகரங்களாகிய விதிகள்யாவும் வழக்கந்தவறிப்போயினவன்றே! பேருக்குமட்டும் விவாஹமுமுபநயநமும் சமஸ்காரங்களாக அனுஷ்டிக்கப்பட்டுவருகின்றன. விவாஹம், வித்தியாப்பியாச நிலைமையின் மத்தியில் மிகவொழுங்கீனமாய் நடத்தப்படுகிறது. இதனுல் வித்தியாப்பியாசி, கிருஹஸ்தன் இவ்விருவர்களின் தர்மங்களும் ஒன்றேடொன்று கலக்கப்பட்டு இருநிலைமைகளும் பூரணமாகாது இரண்டும் கெடுதலையடைந்து வருகின்றன. ஆதலால் மேற்கூறிய பூர்வகாலத்திய வுத்தமவிதிகள் பழையபடி இத்தேசத்தில் அனுஷ்டானத்தில் வரும்படி கடவுள் கருணைபுரிவாராக.

---

## பிரமாணங்கள்.

𑌏𑌕𑌃 𑌶𑌬𑍍𑌦𑌃 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌜𑍍𑌞𑌾𑌤𑌃 𑌸𑍁𑌪𑍍𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑍇 𑌲𑍋𑌕𑍇 𑌕𑌾𑌮𑌧𑍁𑌗𑍍𑌭𑌵𑌤𑌿।

பதஞ்சலி மஹாபாஷ்யம் vi. 1. 84.

ஒரே சப்தமாகிலும் பிசகின்றி யுச்சரிக்கப்பட்டால் ஸ்வர்க்க லோகத்தில் சகல அபீஷ்டங்களையும் கொடுக்கக்கூடிய தாகின்றது.

𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍋 𑌹𑍀𑌨𑌸𑍍𑌸𑍍𑌵𑌰𑌤𑍋 𑌵𑌰𑍍𑌣𑌤𑍋𑌵𑌾 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌪𑍍𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌨 𑌤𑌮𑌰𑍍𑌥𑌮𑌾𑌹 ।

𑌸 𑌵𑌾𑌗𑍍𑌵𑌜𑍍𑌰𑍋 𑌯𑌜𑌮𑌾𑌨𑌂 𑌹𑌿𑌨𑌸𑍍𑌤𑌿 𑌯𑌥𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌶𑌤𑍍𑌰𑍁𑌸𑍍𑌸𑍍𑌵𑌰𑌤𑍋𑌽𑌪𑌰𑌾𑌧𑌾𑌤𑍍 ॥

பாணினியின் சிக்ஷை 52.

ஸ்வரத்தாலாவது வர்ணத்தாலாவது ஹீனமான மந்திரம் வீணாக வுச்சரிக்கப் பட்டதாகி, அதன் அருத்தத்தைக் கொடுக்காது. (அன்றியும்) அதுவாக்குவஜ்ரமாகி முன்னொருகாலத்தில் "இந்திரசத்துரு" என்னும்பதம் ஸ்வரப்பிசகால் உத்தேசித்தபடி விருத்திரனுக்குச் சத்துருவாகிய இந்திரனைக்கொல்லாமல் இந்திர சத்துருவான விருத்திரனையே கொன்றதுபோல் யஜமானனையேஹிம்ஸிக்கின்றது.

𑌵𑍈𑌦𑌿𑌕𑍈𑌃 𑌕𑌰𑍍𑌮𑌭𑌿𑌃 𑌪𑍁𑌣𑍍𑌯𑍈𑌃 𑌨𑌿𑌷𑍇𑌕𑌾𑌦𑌿𑌰𑍍𑌦𑍍𑌵𑌿𑌜𑌨𑍍𑌮𑌨𑌾𑌮𑍍 ।

𑌕𑌾𑌰𑍍𑌯𑌃 𑌶𑌰𑍀𑌰𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌃 𑌪𑌾𑌵𑌨𑌃 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 𑌚𑍇𑌹 𑌚 ॥

மனுஸ்மிருதி ii. 26.

புண்ணியமான வைதிக கர்மங்களால் இங்கும் மறுவுலகிலும் பாவனங்களான நிஷேகம்முதலிய சரீரசம்ஸ்காரங்கள் துவிஜனுக்குச் செய்யப்படல்வேண்டும்.

𑌚𑌿𑌤𑍍𑌰𑌕𑌰𑍍𑌮 𑌯𑌥𑌾𑌨𑍇𑌕𑍈𑌰
𑌰𑌙𑍍𑌗𑍈𑌰𑍁𑌨𑍍𑌮𑍀𑌲𑍍𑌯𑌤𑍇 𑌶𑌨𑍈𑌃 ।
𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑌮𑌪𑌿 𑌤𑌦𑍍𑌵𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌸𑌂
𑌸𑍍𑌕𑌾𑌰𑍈𑌰𑍍𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑍈𑌃

பராசர கிருஹ்ய சூத்திரம் ஹரிஹர பாஷியத்தில் உதகரிக் கப்பட்ட ஆங்கிரஸ் வாக்கியம். பக். 260. (II. 1.)

𑌗𑌰𑍍𑌭𑌾𑌧𑌾𑌨𑌂 𑌪𑍁𑌂𑌸𑌵𑌨𑌂
𑌸𑍀𑌮𑌨𑍍𑌤𑍋 𑌜𑌾𑌤𑌕𑌰𑍍𑌮 𑌚 ।
𑌨𑌾𑌮𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌮𑌣𑍇𑌽𑌨𑍍𑌨
𑌪𑍍𑌰𑌾𑌶𑌨𑌂 𑌵𑌪𑌨𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 ॥
𑌕𑌰𑍍𑌣𑌵𑍇𑌧𑍋 𑌵𑍍𑌰𑌤𑌾𑌦𑍇
𑌶𑍋 𑌵𑍇𑌦𑌾𑌰𑌮𑍍𑌭𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌵𑌿𑌧𑌿𑌃 ।
𑌕𑍇𑌶𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌸𑍍𑌨𑌾𑌨𑌮𑍁𑌦𑍍𑌵𑌾𑌹𑍋
𑌵𑌿𑌵𑌾𑌹𑌾𑌗𑍍𑌨𑌿𑌪𑌰𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ॥
𑌤𑍍𑌰𑍇𑌤𑌾𑌗𑍍𑌨𑌿𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑌶𑍍𑌚𑍈𑌵
𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌾𑌃 𑌷𑍋𑌡𑌶𑌸𑍍𑌮𑍃
𑌤𑌾𑌃 ।

பராசரஸ்மிருதியில் உதகரிக் கப்படும் வியாசஸ்மிருதி. பக். 269.

ஒருசித்திரத்தின் உருவம் அநேகவர்ணங்களால் வரவரப்பிரகாசப்படுத்தப் படுவது போல் இவ்விதமே பிராம்மண்யமும் விதி பூர்வகமான சமஸ்காரங்களால் நாளடைவில் பூர்த்தியடைகிறது.

கர்ப்பாதானம்,பும்ஸவநம்,ஸ்ரீமந்தம்,ஜாதகர்மம், நாமக்கிரியை, நிஷ்க்ரமம்,அன்னப்பிராசனம், வபநக்கிரியை, கர்ணவேதம், விரதாதேசம், வேதாரம்பகிரியாவிதி,கேசாந்தம், ஸ்நாநம், உத்வாஹம், விவாஹாக்நி பரிக்கிரஹம், திரேதாக்நி ஸங்கிரஹம்,எனச்சமஸ்காரங்கள் 17 ஆக ஸ்மரிக்கப்படுகின்றன.

# அதிகாரம் 2.

## சிராத்தம்.

மரணத்தால் ஸ்தூலசரீரத்தை நீக்கிக்கொண்ட ஜீவனுக்கு உபகாரமாக இவ்வுலகத்தில் வசிக்கும் அவன் பந்துக்கள் செய்யும் கருமங்களுக்குச் சிராத்தம் என்று பெயர். பிரத்தியக்ஷமான ஸ்தூலசரீரம் நீக்கிய ஜீவனுக்குப் 'பிரேதன்' என்று பெயர். இவ்வவஸ்தையில் அவனுக்குச் செய்யப்படும் சிராத்தகருமங்கள் பிரேதக் கிரியை எனப்படும். பிரத்தியக்ஷசரீரமாகிய அன்னமயகோசமானது மரணத்திற்குப் பின் அதன் அணுக்கள் கூடியசீக்கிரத்தில் சிதறுண்டு கலைந்துவிடும் வண்ணம் தகனபூமிக்குக் கொண்டுபோகப்படுகிறது. தகனத்திற்ப்பிறகு மூன்றுநாள் சாம்பலைத்திரட்டி ஓடும் ஜலத்தில், விசேஷமாய் ஒரு புண்ணிய நதியில் கரைக்கிறார்கள். அன்னமயகோசம் அழிந்தவுடன் பிராணமயகோசம் அதிசீக்கிரத்தில் அழிந்துவிடுகிறது. தகனசமயத்தில் பிரயோகிக்கப்படும் சிலமந்திரங்கள் இவ்விதம் பிராணமயகோசத்தின் நாசத்தைத் துரிதப்படுத்தி விடுவதற் குதவுகின்றன. இறந்த சரீரத்தை யழிப்பதற்குள்ள வழிகளில் தகனமே சிரேஷ்டமானது. இவ்விதம் சரீரம் அதிகசீக்கிரத்தில் அழிந்துவிடுவது மரணமடைந்தவனுக்கும், பின்னிற்கும் இதரர்களுக்கும் மிக அவசியமானது. சரீரமழியாது கிடக்கும்வரை பிராணமயகோசம் அதனிடத்துள்ள தேஜோதாரையின் கவற்சியால், அதைவிட்டப்பாற் செல்லாது, சமீபத்தில் தங்கிநிற்கின்றதாதலால் ஜீவனுக்கு பூலோகத்தோடு பந்தம் நீங்காது. இது மிகவும் கெடுதலைவிளைக்கக்கூடி

யது. இனி பிணமாகிய சரீரம் புதைக்கப்பட்டால் பூமிக்குள்ளிருந்து அழுகிக்கொண்டிருக்கும் பொழுது விஷமயமான வாயுக்களைக் கிளப்பிக்கொண்டே யிருக்கின்றதாதலால் இவ்வுலகில் வசிக்கும் ஜனங்களுக்குக் கெடுதியை யுண்டுபண்ணுகின்றது.

தகனத்திற்குப் பின் செய்யப்படும் சிராத்தகிரியைகள், சிறிதுபாகம் இக்கருமங்களிலுபயோகிக்கப்படும் சிலதிரவியங்களின் 'தேஜஸ்' சக்தியாலும், சிறிதுபாகம் இப்பொழுது பிரயோகிக்கப்படும் மந்திரங்களின் சலனங்களாலும் மனோமயகோசத்தின் ஓர்வித நூதன புனர்நிர்மாணத்தில் உதவிபுரிகின்றன. பிறகு சிறிது காலத்திற்கப்பால் ஜீவன் பிரேதலோகத்திலிருந்து அப்பால் பிதிருலோகத்துக்குட் செல்லுவதற்கு உதவி புரியும் சபிண்டீகரணக்கிரியை நடத்தப்படுகின்றது. இப்பொழுது ஜீவன் புவர்லோகத்தில் உயர்ந்த விபாகங்களில் வசிக்கும் நமது முன்னோராகிய பிதிர்களில் ஒருவனாகிறான். பூலோகத்தில் ஒன்றும் புவர்லோகத்தில் ஆறும் ஆக ஏழு சந்ததிகள் வரை ஜீவர்கள் பரஸ்பரம் உபகாராதி சாதக பாதகங்களைச் செய்துகொள்ளலாம். இவற்றிற்கு மப்பால் ஜீவனுக்கு சுவர்க்கலோகம் சேர்ந்தபின், சிராத்தாதி கிரியைகளால் உபகாரம் தேவையில்லை.

## பிரமாணங்கள்.

𑌦𑍇𑌶𑍇𑌕𑌾𑌲𑍇𑌚 𑌪𑌾𑌤𑍍𑌰𑍇𑌚
𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾𑌵𑌿𑌧𑌿𑌨𑌾𑌚𑌯𑌤𑍍 ।

𑌪𑌿𑌤𑍄𑌨𑍁𑌦𑍍𑌦𑌿𑌶𑍍𑌯𑌵𑌿𑌪𑍍𑌰𑍇𑌭𑍍𑌯𑍋
𑌦𑌤𑍍𑌤𑌂 𑌶𑍍𑌰𑌾𑌦𑍍𑌧𑌮𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌮𑍍 ॥

பிரம்மாண்டபுராணம்.

பிதிருக்களை யுத்தேசித்துப்பாத்திரர்களான பிராமணர்களுக்குத் தக்கசமயங்களிலும் ஸ்தலங்களிலும் விதிப்பிரகாரம் சிரத்தையோடு அளிக்கப்படுவது சிராத்தம் என்னப்படும்.

𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌦𑌹𑌰𑌹𑌃 𑌶𑍍𑌰𑌾𑌦𑍍𑌧
𑌮𑌨𑍍𑌨𑌾𑌦𑍍𑌯𑍇𑌨𑍋𑌦𑌕𑍇𑌨 𑌵𑌾 ।
𑌪𑌯𑍋𑌮𑍂𑌲𑌫𑌲𑍈𑌰𑍍𑌵𑌾𑌪𑌿
𑌪𑌿𑌤𑍃𑌭𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌮𑌾𑌵𑌹𑌨𑍍 ॥

மனுஸ்மிருதி iii. 203.

நாள்தோறும் அன்னம் முதலியவைகளாலும், ஜலத்தாலும், அல்லது கனி, கிழங்கு ஜலத்தாலாவது, பிதிர்களுக்குத் திருப்தியைச் செய்வித்துச்சிராத்தம் செய்தல்வேண்டும்.

𑌪𑌞𑍍𑌚𑌭𑍍𑌯 𑌏𑌵 𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌭𑍍𑌯𑌃
𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌿𑌨𑌾𑌂 𑌨𑍃𑌣𑌾𑌮𑍍
𑌶𑌰𑍀𑌰𑌂 𑌯𑌾𑌤𑌨𑌾𑌰𑍍𑌥𑍀𑌯𑌮𑌨𑍍𑌯𑌦𑍁
𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑍍 ॥

மரணத்திற்குப் பின் பாபிகளான ஜீவர்களுக்கு நரகதண்டனைகளை யனுபவிக்கும் பொருட்டுஐந்துபூதங்களாலுமே வேறு ஒரு (சூட்சுமமும்) ஸ்திரமான சரீரம் உண்டாக்கப்படுகிறது.

𑌤𑍇𑌨𑌾𑌨𑍁𑌭𑍂𑌯 𑌤𑌾 𑌯𑌾𑌮𑍀𑌃
𑌶𑌰𑍀𑌰𑍇𑌣𑍇𑌹 𑌯𑌾𑌤𑌨𑌾𑌃 ।
𑌤𑌾𑌸𑍍𑌵𑍇𑌵 𑌭𑍂𑌤𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌸𑍁
𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌨𑍍𑌤𑍇 𑌵𑌿𑌭𑌾𑌗𑌶𑌃 ॥

அந்தச் சரீரத்தில்யமனுடைய தண்டனைகளை (ஜீவன்) அனுபவித்தபின் சரீரத்தின் பாகங்கள் முறையே அந்தப் பஞ்சபூதங்களிலடங்கிவிடுகின்றன.

𑌯𑌦𑍍𑌯𑌾𑌚𑌰𑌤𑌿 𑌧𑌰𑍍𑌮𑌂 𑌸 𑌪𑍍𑌰𑌾𑌯
𑌶𑍋𑌽𑌧𑌰𑍍𑌮𑌮𑌲𑍍𑌪𑌶𑌃 ।
𑌤𑍈𑌰𑍇𑌵 𑌚𑌾𑌵𑍃𑌤𑍋 𑌭𑍂
𑌤𑍈𑌃 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑍇 𑌸𑍁𑌖𑌮𑍁𑌪𑌾
𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 ॥

மனுஸ்மிருதி xii. 16, 17, 20.

(ஜீவன்) அதர்மம் சொல்பமும் தர்மம் அதிகமாகவும் செய்தவனாகில் இந்தப்பஞ்ச பூதங்களாலாகிய மற்றொருசரீரத்தில் சுவர்க்கமடைந்து சுகமனுபவிக்கிறான்.

𑌚𑌿𑌤𑌾𑌮𑍋𑌕𑍍𑌷𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌿 𑌵𑍈 𑌪𑍍𑌰𑍇
𑌤𑌤𑍍𑌵𑌮𑍁𑌪𑌜𑌾𑌯𑌤𑍇 ।

கருடபுராணம் ii. v. 36.

சிதையிலிருந்து விடுபட்டதுமுதல் (தகனமுடிந்தது முதல்) பிரேத நிலைமை (ஜீவனுக்கு) ஏற்படுகிறது.

𑌵𑌰𑍍𑌷𑌂 𑌯𑌾𑌵𑌤𑍍𑌖𑌗𑍇𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠
𑌮𑌾𑌰𑍍𑌗𑍇 𑌵𑌸𑌤𑌿 𑌮𑌾𑌨𑌵𑌃 ।
𑌤𑌤𑌃 𑌪𑌿𑌤𑍃𑌗𑌣𑍈𑌃 𑌸𑌾
𑌰𑍍𑌧𑌂 𑌪𑌿𑌤𑍃𑌲𑍋𑌕𑌂 𑌸 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥

ஓ! பக்ஷிசிரேஷ்டா! ஒருவருஷம்வரைமனிதன்மார்க்கத்தில் பிரேதலோகத்தில்) வசிக்கிறான். பிறகு பிதிர்கணங்களுடன் பிதிர்லோகம் சென்று வசிக்கிறான்.

𑌦𑌤𑍍𑌤𑍈𑌷𑍋𑌡𑌶𑌭𑌿𑌶𑍍𑌰𑌾𑌦𑍍𑌧𑍈
𑌪𑌿𑌤𑍃𑌭𑌿𑌸𑍍𑌸𑌹𑌮𑍋𑌦𑌤𑍇 ।
𑌪𑌿𑌤𑍁𑌃 𑌪𑍁𑌤𑍍𑌰𑍇𑌣 𑌕𑌰𑍍𑌤
𑌵𑍍𑌯𑌂 𑌸𑌪𑌿𑌣𑍍𑌡𑍀𑌕𑌰𑌣𑌂 𑌸𑌦𑌾 ॥

கருடபுராணம் II. xvi. 6-7,20.

பதினாறு சிராத்தங்களைக்கொடுப்பதால் அவன் பிதிர்லோகத்தில் பிதிருக்களுடன் ஆனந்தத்தையனுபவிக்கிறான். ஆதலால் தந்தைக்குப் புத்திரன் எப்பொழுதும் சபிண்டீகரணகிரியைகளைச் செய்துவரல்வேண்டும்

# அதிகாரம் 3.

## சௌசம்.

சௌசமாவது ஸ்தூலசரீரத்தில் பலம் ஆரோக்கிய மிவை நிலைக்கும்படி சரீரசுத்தியைக்கொடுப்பதற்கேற்ற விதிகளையுடையதேயாம். வியாதியாவது இயற்கையின் சில வொழுங்குகள் மீறப்பட்டதற்கு அறிகுறியேயன்றோ! பெரியோரான ரிஷிகள் இயற்கையின் ஒழுங்குகள் யாவும் ஈசுவரனது நியதி, அதாவது ஈசுவரனது பாஹ்யமான பிரகாசமே என்றும், ஜீவனும் மாயையால் மூடப்பட்டிருக்கும் ஈசுவராம்சமேயென்று மறிந்தவர்களாதலின், இயற்கையின் ஒழுங்குகளை விடாது அனுஷ்டிப்பது மதானுஷ்டானத்தைச் சேர்ந்த தர்மமென்றே ஏற்படுத்தியிருக்கின்றனர்.

பிரத்தியக்ஷமாகிய ஸ்தூலவுடம்பும், அப்பிரத்தியக்ஷமாகிய அதன் பிரதியான பிராணமய கோசமும், ஸ்தூலவுலகின் பதார்த்தங்களாலேயே நிர்மாணம் பண்ணப்பட்டிருக்கிறபடியால் அவற்றைச் சுத்தம்பண்ணவும் பின்னச்சுத்தத்தை விடாது காப்பாற்றவும், ஸ்தூலசாதனங்களை யுபயோகித்தல் அவசியமாகின்றது. இவ்விதமிச் சாதனங்களை யனுஷ்டிப்பதற்கும் அவைகளைச் செம்மையா யறிந்துகொள்ளவேண்டியது அவசியமாகின்றது.

பிரத்தியக்ஷமாகிய அன்னமய கோசமானது நாமுட்கொள்ளும் ஆகாரம் பானங்கள், காற்று, நமக்கு நாற்புறத்திலுமுள்ள வஸ்துக்களி னிடமிருந்து சதாகாலமும் நம்மை வந்தடையும் அம்சங்கள், இவற்றால் நிரம்பியது. இதரமனிதர்கள், பதார்த்தங்கள் இவ

ற்றினிடமிருந்து எப்பொழுதும் வெளியேறி நம்மிடம் வந்து சேர்ந்துகொண்டிருக்கும் இவ்வம்சங்கள் மிகவும் நுண்ணியவைகள். நம்மால் பிரத்தியக்ஷமாய்ப் பார்க்கமுடியாதவைகளா யிருக்கின்றன. இந்த விஷயம் சற்று நூதனம்போல் உங்களுக்குத் தோன்றும். ஆயினும் அது உண்மையே யன்றி வேறன்று. நமது சரீரங்கள் முற்றிலும் சேதனமற்ற ஜடபதார்த்தங்களாலாகியவையன்று. உண்மையில் சேதனமற்ற ஜடபதார்த்தமென்பது ஒன்றில்லை. பிரகிருதியானது அற்பஜீவர்களாகிய அணுக்கள், இவ்வணுக்களின் திரள்களாகிய மற்ற ஜீவர்கள், இவற்றுல் நிரம்பியதே. ஆதலால் தெருவீதியிற் காணப்படும் தூசியில் சிறிது பாகத்தை யெடுத்துப் பரிசோதிப்போமாயின் கணக்கற்றகோடி அற்பஜீவர்கள், படிப்படியாய் கீழ்ப்பட்ட அணுத்தன்மைமுதல், கணக்கற்ற வகைகளாய்க் கடைசியாய்ப் பூதக்கண்ணுடியின் உதவியால் காணக்கூடிய அங்குரக்கிருமிகள்வரை தட்டுப்படுகின்றன. இவ்வங்குரக்கிருமிகள் முதலிய பலவகை யற்ப ஜீவக் கூட்டங்கள் ஆகாயத்தில் நாற்புறத்திலு மிதந்துகொண்டு சஞ்சரிக்கின்றன. இவற்றுலேயே நமது சரீரங்களும் இதர வஸ்துக்களும் உண்டுபண்ணப்படுகின்றன. கற்கள், செடிகொடிகள், மனிதர், மற்றும் மானிடரால் சிருஷ்டிக்கப்படும் பதார்த்தங்களான வீடுகள், தட்டுமுட்டுச் சாமான், வஸ்திராதிகள் இவையனைத்தும் பிரதிநிமிஷமும் இவ்வகை யற்பஜீவ சமூகங்களின் மேகம்போன்ற கூட்டங்களை வெளிப்படுத்திக்கொண்டேயிருக்கின்றன. நம்மைச் சூழ்ந்திருக்கும் சகல பதார்த்தங்களும், அதிலும் விசேஷமாய் நாம் ஸ்பரிசிக்குஞ் சகல பதார்த்தங்

களும், நமக்குச்சில அம்சங்களைத் தருகின்றன. நம்மிட மிருந்து சிலவற்றைத் திரும்பிப் பெற்றுக்கொள்ளுகின் றன. இவ்விதம் சதாகாலமும் வெளியிலிருந்து பதார்த் தங்கள் நம்முடைய சரீரங்களில்வந்து சேருகின்றமை யால், நமது சரீரங்கள் சுகஸ்திதியிலிருக்க வேண்டுமா யின், நாம் சுத்தமான அம்சங்களைமட்டும் வெளியிலிருந் து ஸ்வீகரித்துக்கொண்டு, அசுத்தங்களை நம்மை வந்து அணுகவொட்டாமல் துரத்திவிடவேண்டியது. சௌச விதிகள் இதை நாம் செய்துகொள்ளும் விதத்தைக் காட்டுவதற்காகவே ஏற்பட்டிருக்கின்றன.

நாமுட்கொள்ளுமாகாரம் பரிசுத்தமானதாக இரு க்கவேண்டும். உலகில் உள்ள சகல பதார்த்தங்களும் வரவர சேதன விருத்தியுடையவைகளாயாவது, அல் லது வரவரச் சேதனக்குறைவால் மரணத்தைச் சமீ பித்து வருவனவைகளாயாவது இருக்கின்றன ; அதா வது விருத்தியல்லது நாசத்தையடைந்து வருகின்றன. பரிசுத்தமான ஆஹாரம் அதிக சைதன்யாம்சம் நிறை ந்து விளங்குவது ; அவற்றின்கண்ணுள்ள சைதன் யம் பிரகாசமடைந்து வருகின்றது. நவமான இலை, கனி கள், தானியம், கிழங்குகள் இவைமுதலியன விருத்தி யடைந்துவரும் சைதன்யமுடையன. இவற்றை நாம் உட்கொள்ளுவதால் இவற்றின் சைதன்யம் நம்முடைய சரீரங்களைச்சேர்ந்து அவற்றைவிருத்திபண்ணுகின்றது. இக்கந்தமூல முதலியன நாட்சென்றவைகளும் அழுகி வருபவைகளுமாயின், இவை யசுத்தங்களாகி விடுகின் றன. ஏனெனில், இவற்றின் சைதன்யம் அப்பாற்சென் றுவருகின்றது. இவையிறக்கும் சமயத்தைநோக்கியிரு க்கின்றன. இப்படியே எவ்வகை மாம்சமும் ஏறக்குறை

ய அசுத்தமான ஆஹாரமே ; ஏனெனில், அதன் உயிர் அப்புறப்படுத்தப்பட்டிருக்கின்றது. அதுவும் அழுகு வதற்குத் தயாராயிருக்கின்றது. இதனால் விருத்தியடை யும் சரீரம், கந்தமூலதான்யங்களால் போஷிக்கப்படும் சரீரத்தைக் காட்டிலும் அதிகமாக வியாதிக்கிடமாகக் கூடியதாகின்றது. மாம்சத்தால் போஷிக்கப்பட்ட சரீர த்தில் காயங்கள் நீடித்த காலத்தில் ஆறுகின்றன. ஜ்வ ரமும் மிகவுச்சமாய் அடிக்கின்றது.

திரவமயமான பதார்த்தங்களிலும் சுத்த ஜலமான து சௌக்கியத்திற்கு மிகவும் அவசியமானது. தேயிலை, காப்பி, கோக்கோமுதலிய மூலிகைகளின் ரஸமும் ஜலமும் சேர்ந்த பானங்கள் மிதமாய் உட்கொள்ளப் படின் யாதொரு கெடுதலையும் உண்டுபண்ணுகிறதில்லை. அநேக சமயங்களில் மிகப் பிரயோஜனத்தையு முண்டு பண்ணுகின்றன. பாலோ மிகப் பரிசுத்தமான உத்தம ஆகாரமும் பானமுமாகின்றது. லாகிரிகலந்த எவ்வகை ப்பானமும் மிகவசுத்தமானதேயாம். சரீரத்துக்கு மிக வும் அபாயகரமான தென்பதில் சந்தேகமேயில்லை. இவ் வகைப் பானங்களெல்லாம் அழுகல் முதலிய பல விகா ரங்களையடைய வாரம்பித்திருக்கும், அல்லது அடைந்து வரும் சாராய பதார்த்தங்களே தவிர வேறன்று. இவை சரீரத்தின் பாகங்களுக்கு நாசஞ்செய்பவை ; சாக்ஷாத் விஷமேதவிர வேறன்று ; அதிலும் உஷ்ணதேசங்களில் மிகவும் தீங்கை விளைவிக்கக்கூடியவை; வெகு சீக்கிரத் தில் சரீரத்திற்கு தளர்ச்சியையும் அற்பாயுளையும் உண் டுபண்ணுகின்றன. இம்மாதிரியே கஞ்சா, சௌக்கியத் துக்கு முற்றிலும் விரோதியான சர்வசாதாரணமாகிய பங்கி முதலிய மயக்கத்தைக் கொடுக்கும் சரக்குகள்

கலந்த சகலவித பானங்களும் தீமையானவைகளே யாகும்.

பரிசுத்த ஆகாயம், பரிசுத்தமான அன்னம், பான மிவற்றைப்போலவே சரீர சௌக்கியத்திற்கு மிகவுமவசியமானது. நாம் மூச்சுவிடும்பொழுது (கரி மலவாயு) வென்னும் ஓர்வகை மயக்கத்தைத் தரும் துர் வாயுவை வெளிப்படுத்தி வருகிறோம். ஓர் அடைப்பான விடத்தில் நாம் மூடிக்கொள்வோமானால் சில நிமிஷங் களில் அதிலுள்ள ஆகாயமெல்லாம் இத்துர்வாயுவால் நிறைந்துவிடுகின்றதாதலால், நமது சுவாஸத்திற்கு அநர்ஹமாகிவிடுகிறது. மேலும் நாம் மூச்சுவிடுதலால் வெளிப்படுத்தும் காற்றானது சரீரத்தின் உட்பாகங்க ளிலிருந்து கழிவான அசுத்த பதார்த்தங்களைச் சுமந்து செல்கின்றது. ஆதலின் இக்காற்றுவெளியேறினவுடன் வேறு சுத்தவாகாயம் இதிலுள்ள மேற்கூறிய அசுத்த பதார்த்தங்களை அப்புறப்படுத்தாமற்போனால் இவை நமது சுவாஸாசயங்களிலும் பிறருடையவைகளிலும் திரும்பித்திரும்பிச் செலுத்தப்பட்டு விஷமாகமாறிப் பல தீங்குகளை யுண்டுபண்ணிவிடுகின்றன.

இவ்விதமாய்ப் பரிசுத்த ஆஹாரத்தால் நமது சரீ ரத்தை நாம் போஷித்துவரவேண்டியதுந் தவிர, சரீரத் தின் மேல்தளமாகிய த்வக்கையு மடிக்கடி கழுவி முழு கிச் சுத்தமாய் வைத்துக்கொள்ளவேண்டும். சரீரமுழு மையும் குறைந்தபக்ஷம் தினத்துக்கொரு தடவையாவ து நீரால் சுத்திசெய்யவேண்டும். ஸ்நாநசமயத்திலும் சரீரத்தின் மேல்பாகங்களி லொட்டியிருக்கும் தூசி யழுக்குகள் முதலியன நீங்கும்படி நன்றாய்த் தேய்த்து முழுகல்வேண்டும். இவ்விதம் செய்வதால் சரீரத்தின்

மேற்போர்வையாகிய தோல் அசுத்தம் நீங்கிச் சுறுசுறுப்புள்ளதாகும். அடிக்கடி பலவேலைகளைச் செய்வதால் அழுக்கடையும் உறுப்புகளாகிய கைகால்களை யடிக்கடி சுத்தம் செய்துவரலும்வேண்டும். அதிலும் போஜனத்துக்கு முன்னும் பின்னும் அவற்றைக் கழுவுதலை யொருபோதும் தவிரக்கூடாது. கழுவாத கைகளுடன் போஜனம் செய்வது நாமுண்ணும் போஜனத்துள் தூசி, துகள் முதலிய விஷாம்சங்களைப் பிரவேசிக்க இடந்தருவதாகும். போஜனம் செய்தபின் கழுவுவதுதான் பிரத்தியக்ஷமாய் அவசியமாயிருக்கின்றது. சரீரத்தை யடுத்துத் தரிக்கப்படும் வஸ்திரங்களும பிரதிதினமும் சுத்தஞ்செய்யவேண்டும்.

ஹிந்துமதஸ்தன் பாஹ்யமவ்வளவும் அந்தரத்தில் வர்த்திக்கும் தத்வத்தின் பிரகாசமே யென்னும் நம்பிக்கையுள்ளவனாதலால், சகல பாஹ்யாநுஷ்டானங்களுடன் அந்தரசுத்தியும் சேர்த்துக்கொள்ளுகிறான். தனது பாஹ்யசரீரத்தை ஸ்நாநாதிகளால் சுத்திசெய்யும்பொழுது சூட்சுமசரீரங்களும் சுத்தியடையும் பொருட்டு ஏற்ற மந்திரங்களை யுச்சரிக்கிறான். இவ்விதம் பிரதிதின கிரியைகளிலும் இவனுக்கு மதானுஷ்டானம் சேர்த்திணைக்கப்பட்டிருக்கிறது.

பூர்வீகர்களான ரிஷிகள் சுத்தியைப்பற்றி இவ்வளவு விசேஷமாய் வற்புறுத்திக்கூறியிருப்பதின்னகாரணத்தாலென்றிப்பொழுது சிறுவர்க்குத்தெரியும். அழுக்கடைந்த சரீரம் வஸ்திரமாகிய இவைகளையுடையவொரு மனிதன் தன்னைச்சுற்றிலுமிருக்கும் ஆகாயத்தை யசுத்தமான அம்சங்களால் நிரப்பிவிடுகிறான். இவற்றால் இதர மனுஷர்க்கும் விஷமூட்டுகிறான். நமக்காக

மட்டும் நாம் பரிசுத்தமா யிருக்கவேண்டு மென்பதன்று; பின்னே நமக்குச் சுற்றிலுமுள்ள இதரர்க்காகவும் நாம் சுத்தமாயிருக்கவேண்டிய தவசியமாகின்றது. அழுக்கடைந்த சரீரம், அழுக்கடைந்த வஸ்திரம், அழுக்கடைந்த ஸ்தலம் அல்லது ஸ்தானம், ஆகிய இந்நாற்புறத்திலுமிருந்து விஷபதார்த்தங்கள் ஓடிவந்து தங்குமிடம், சர்வஜன சமூகத்திற்கும் பொதுவான அபாய ஹேதுவாகின்றது.

இனிப் பிராணமய கோசத்தின் பரிசுத்தி, அதனிடம் சேர்ந்திருக்கும் தேஜோதாரைகளின் சுத்தாசுத்தியைப் பொறுத்திருக்கின்றது. நமக்குப் பக்கத்திலுள்ள சகல பதார்த்தங்களினுடைய தேஜோ குணங்களால் இப்பிராணமய கோசமானது அதிசீக்கிரத்தில் பாதிக்கப்படுகின்றது. ஆதலால் இவ்விஷயத்திலும் நாம் மிகவுஞ் ஜாக்கிரதையாயிருக்கவேண்டியது அவசியமாகின்றது. அந்நமய கோசத்திற்குப் பாதகமில்லாத வெள்ளைப் பூண்டு வெங்காயம் முதலிய சில சரக்குகளும் மூலிகைகளும் பிராணமய கோசத்திற்கு மிகவும் கெடுதலைவிளைவிக்கக் கூடியவைகளாயிருக்கின்றன. இவைகளின் கவர்ச்சி மாம்சத்தினுடையதை விடக் கெடுதலாயிருக்கின்றது. இன்னுமிக்கோசம் லாகிரி வஸ்துக்களினின்றும் எழும் ஆவிகளாலும், இதரர்களின் பிராணமய கோசங்களாலும் பாதிக்கப்படுகின்றது. இவை யெல்லாவற்றைக் காட்டிலும் முக்கியமான விஷய மொன்றுண்டு. அதாவது: இக்கோசமானது தனது சூட்சும சரீரத்தாலும், தனது சூட்சுமசரீரத்தின் வழியாய்ப் பிறர் சூட்சுமசரீரங்களாலும் விசேஷ பாதையை யடைகின்றது. ஆதலாற்றான் கெட்டசகவாசத்தில் பல தீங்குகள் நேரி

டுகின்றன. சூட்சுமசரீரத்தின் சுத்தியோ, அதன் ஜீவன் உத்பத்தி பண்ணிக்கொள்ளும் நினைவு, இச்சைகளைப் பொறுத்திருக்கின்றது. ஆதலால், ஸ்தூலகோசங்களில் அசுத்தி நிறைவதற்கு முக்கியமான ஹேது இதுவே. ஒருவன் நினைவுகளும், இச்சைகளும் அசுத்தங்களாயிருப்பின் அவனது ஸ்தூலகோசங்கள் ஒருபோதும் சுத்தமாயிருத்தலமையாது. ஒருவன் சௌசவிதிகளொன்றையும் விடாமல் அனுஷ்டித்து வரக்கூடும்; ஆயினும் கர்வம், அகங்காரம், குரூரம், தற்பெருமை, சந்தேகம் முதலிய துர்க்குணங்கள் அவனிடமிருக்குமாயின் எவ்வகை சௌசவிதிகளினனுஷ்டானத்தாலும் சுத்திப்பண்ணிக்கொள்ளமுடியாத அசுத்தங்களை சதா தனது தாழ்ந்த கோசங்களில் வருஷித்துக்கொண்டிருப்பவனாகின்றான். தேவர், ரிஷிகள் திருஷ்டியில் இவன் சதா அசுசியே தவிர வேறல்லான்.

## பிரமாணங்கள்.

𑌦𑍂𑌰𑌾𑌦𑌾𑌵𑌸𑌥𑌾𑌨𑍍𑌮𑍂𑌤𑍍𑌰𑌂 𑌦𑍂
𑌰𑌾𑌤𑍍𑌪𑌾𑌦𑌾𑌵𑌸𑍇𑌚𑌨𑌮𑍍 ।

𑌉𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌨𑌨𑌿𑌷𑍇𑌕𑌂 𑌚 𑌦𑍂
𑌰𑌾𑌦𑍇𑌵𑌸𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍 ॥

மனுஸ்மிருதி iv. 151.

வீட்டுக்குத் தூரத்திலேயே மூத்திரம் முதலிய சர்வமலங்களையும் கால்கழுவும் நீரையும், எச்சிலன்னத்தையும் ஸ்நாநநீரையும் விடுதல்வேண்டும்.

𑌆𑌚𑌮𑍍𑌯 𑌪𑍍𑌰𑌯𑌤𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍁𑌭𑍇
𑌸𑌂𑌧𑍍𑌯𑍇 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌃 ।
𑌶𑍁𑌚𑍌 𑌦𑍇𑌶𑍇 𑌜𑌪𑌞𑍍𑌜𑌪𑍍𑌯
𑌮𑍁𑌪𑌾𑌸𑍀𑌤 𑌯𑌥𑌾𑌵𑌿𑌧𑌿 ॥

மனுஸ்மிருதி ii. 222.

ஆசமனம் செய்து சுத்தனாகி, சுத்தமான விடத்தில் விதிப்படி ஜபிக்கவேண்டியதை ஜபித்து, இருசந்திகளிலும் மனதை யொருமுகப் படுத்திக்கொண்டு உபாஸிக்கவேண்டும்.

𑌉𑌪𑌸𑍍𑌪𑍃𑌶𑍍𑌯 𑌦𑍍𑌵𑌿𑌜𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌨𑍍𑌨
𑌮𑌦𑍍𑌯𑌾𑌤𑍍𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌃 ।
𑌭𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌚𑍋𑌪𑌸𑍍𑌪𑍃𑌶𑍇𑌤𑍍𑌸𑌮𑍍𑌯
𑌗𑌦𑍍𑌭𑌿𑌃 𑌖𑌾𑌨𑌿 𑌚 𑌸𑌂𑌸𑍍𑌪𑍃𑌶𑍇𑌤𑍍 ॥

மனுஸ்மிருதி ii. 53.

த்விஜன், ஜலத்தால் மனதை யடக்கிக்கொண்டுசுத்திசெய்துகொண்டு உண்ணல்வேண்டும். உண்டபின் நன்றாய் அவயவங்களை ஜலத்தால் ஸ்பரிசித்தல் வேண்டும்.

𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑌪𑍋𑌽𑌗𑍍𑌨𑌿𑌰𑌾𑌹𑌾𑌰𑍋 𑌮𑍃
𑌨𑍍𑌮𑌨𑍋 𑌵𑌾𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌞𑍍𑌜𑌨𑌮𑍍 ।
𑌵𑌾𑌯𑍁𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌰𑍍𑌕𑌕𑌾𑌲𑍌 𑌚
𑌶𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 𑌕𑌰𑍍𑌤𑍄𑌣𑌿 𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌮𑍍

மனுஸ்மிருதி ii. 105.

ஞானம், தபஸ், அக்கினி, ஆகாரம், மண், மனது, ஜலம், அப்பியங்கரம், வாயு, சூரியன், காலம் இவை தேஹிகளுக்குச்சுத்தியைச்செய்பவைகள்.

𑌅𑌦𑍍𑌭𑌿𑌰𑍍𑌗𑌾𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌶𑍁𑌧𑍍𑌯𑌨𑍍𑌤𑌿
𑌮𑌨𑌃 𑌸𑌤𑍍𑌯𑍇𑌨 𑌶𑍁𑌧𑍍𑌯𑌤𑌿 ।
𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑌪𑍋𑌭𑍍𑌯𑌾𑌂 𑌭𑍂𑌤𑌾
𑌤𑍍𑌮𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌶𑍁𑌧𑍍𑌯𑌤𑌿 ॥

மனுஸ்மிருதி v. 109.

(காத்திரம்) தேகம் ஜலத்தாலும், மனது சத்தியத்தாலும், பூதாத்மா (வியவஹாரஜீவன்) வித்தை, தபசினாலும், புத்தி, ஞானத்தாலும் சுத்தியடைகின்றன.

𑌨𑌹𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌸𑌦𑍃𑌶𑌂
𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌮𑌿𑌹 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ।

பகவத்கீதை iv. 38.

ஞானத்துக்குச் சமானமான பரிசுத்தி பண்ணும் வஸ்து இவ்வுலகத்தில் கிடையாது.

𑌅𑌪𑌿 𑌚𑍇𑌤𑍍𑌸𑍁𑌦𑍁𑌰𑌾𑌚𑌾𑌰𑍋
𑌭𑌜𑌤𑍇 𑌮𑌾𑌮𑌨𑌨𑍍𑌯𑌭𑌾𑌕𑍍 ।

𑌸𑌾𑌧𑍁𑌰𑍇𑌵 𑌸 𑌮𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌃
𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌵𑍍𑌯𑌵𑌸𑌿𑌤𑍋 𑌹𑌿 𑌸𑌃

மிகவும் துராசாரனாயிருந்தாலும் என்னைப் பிறிதொன்றிலும் நாட்டமற்ற மனதொடு பஜிப்பானாகில் அவனைச் சாதுவென்றே மதிக்கவேண்டியது; ஏனெனில், அவன் சரியான முயற்சியில் நிற்கிறான்.

𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌂 𑌭𑌵𑌤𑌿 𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌾
𑌶𑌶𑍍𑌵𑌚𑍍𑌛𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 𑌨𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ।

𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑌾𑌨𑍀𑌹𑌿
𑌨 𑌮𑍇 𑌭𑌕𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌤𑌿 ॥

சீக்கிரத்தில் அவன் தர்மாத்மாவாகி சாந்தியையடைகிறான். ஓ! குந்திபுத்திரா! எனது பக்தன் நாசமடைகிறதில்லை என்பதை உலகில் கோஷணம் செய்வாயாக.

𑌅𑌹𑌂 𑌤𑍍𑌵𑌾 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑍋
𑌮𑍋𑌕𑍍𑌷𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌮𑌾 𑌶𑍁𑌚𑌃

பகவத்கீதை ix. 30-31.
xviii. 66.

நான் உன்னைச்சகல பாபங்களினின்றும் விடுவிப்பேன். நீ வியசனப்படுதலை யொழி.

---

## அதிகாரம் 4.

### தினந்தோறும் செய்யவேண்டிய பஞ்ச யக்ஞங்கள்.

இயற்கையில் தியாகத்தைக் கருத்தாகவுடைய யக்ஞ ஸ்வரூபமாகும் விதி அல்லது நியதி யொன்றுண்டென நாம் முன்னமே கூறினோமல்லவா? அந்நியதியுடன் மனப்பூர்வமாய் ஒத்து வியவஹரிப்பதே நமக்கு மஹிமை யென்பதையும் தெரிந்துகொண்டோமல்லவா. இப்பொழுது ஸநாதனதர்மமானது மேற்கூறியபடி மதஸ்தர்கள் ஒழுகிவரும்படி எவ்விதமவர்களைப் பழக்கப் படுத்தி வந்ததெனப் பார்ப்போம்.

சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கும் கணக்கற்ற பல விதமான யக்ஞங்களைப்பற்றி யிங்கு பிரஸ்தாபிப்பதற்குச் சாத்தியப்படாது. ஆதலின் அதை நிறுத்தி இங்கு தினந்தோறும் நடத்தப்படவேண்டிய முக்கியமான பஞ்ச மஹா யக்ஞங்களைமட்டும் குறிப்பிட்டுப் பேசுவோம். இவையாவன.

(1) ரிஷிகள் அல்லது வேதங்கட்கு இடப்படும் யக்ஞம்.
(2) தேவர்க்களிக்கப்படும் யக்ஞம்.
(3) பிதிர்க்களின் யக்ஞம்.
(4) நரர்களுக்கு யக்ஞம்.
(5) பூதங்கட்கு யக்ஞம்.

இவற்றில் ஒவ்வொன்றிற்கு வாச்சியமல்லது பாஹியமானரூபமும், லக்ஷியம் அல்லது அந்தரங்கமான அர்த்தமல்லது கருத்தும் உண்டு. இதில் பின் சொன்னதாகிய அந்தரங்கமான கருத்தே, யக்ஞம் செய்வோனை யாகத்தின் 'முழு உயிர்' அல்லது பூர்ணமான

பலத்தை யடையச்செய்விக்கின்றது. இவ்விரண்டையு மறிந்துகொள்ள நாம் யத்தனிப்போம்.

(1) ரிஷிகள் அல்லது வேதங்களுக்குச் செய்யப் படும் யக்ஞத்தில் பாஹியரூபமாவது, அத்தியயநமும் அத்தியாபனமுமாம். பிரதிதினமும் ஒவ்வொருவரும் ஏ தேனும் ஒரு புண்ணியகிரந்தத்தைப்படித்துவரல்வேண் டும். அல்லாவிடில் தன்னையும், தனது பரிபாக நிலைமை, அதற்கேற்ற தர்மங்கள் அல்லது கடமைகளையும், செவ் வையா யறிந்துகொள்வதற் கவசியமான ஞானத்தைச் சம்பாதித்துக்கொள்ளுவது முடியாதன்றோ. இவ்விதம் தேடிக்கொண்ட ஞானத்தைத் தன்னிலும் குறைந்த அறிவுள்ளாராகிய பிறர்க்கும் தானம் செய்து வருவதற் கும் இவன் தயாராயிருக்கவேண்டும். ஆதலாற்றான் மனு வும் இந்தயக்ஞத்தை வர்ணிக்குமிடத்து அது 'அத்தி யாபனம்' அல்லது 'பரோபதேசம்' எனக் கூறியிருக் கின்றனர். ஆதலின் இதைப்படிக்கும் ஒவ்வொரு சிறு வனும் பகவத்கீதை, அனுகீதை, ஹம்சகீதை, முதலிய புண்ணியகிரந்தங்களி லேதேனுமொன்றைப் பிரதிதின மும் சிறிது சுலோகங்கள்வரை படித்து அதன் பொ ருளை ஆழ்ந்து சிந்தனைபண்ணி வருவதால் இவ்வித யக் ஞத்தைச் செய்துவரவேண்டும். இங்கு அதிகபாகம் படித்துவருவதைக்காட்டிலும் சொற்பம் படித்தவரை ஆழ்ந்த கருத்தாய்ச் சிந்தித்தலே விசேஷமானது.

இனி யிந்த யக்ஞத்தின் லக்ஷியார்த்தமாவது: இவ் விதம் படித்துத்தெளிவது எல்லாம் தியாகார்த்தமே; பிறர்க்குபதேசிக்கும் பொருட்டே நாம் கற்றுத்தெளி வது என்பதே.

(2) தேவயக்ஞமென்பது ஹோமம். இயற்கையில் நாமடைந் தனுபவிக்கும் மழை காற்று முதலிய சகலசௌகரியங்களையும் நமக்குக் கருணையோடு பாது காத்து அளிப்பவர்களாகியதேவர்களுக்கு நாம் செலுத்தவேண்டியதாகிய நன்றியறிதலைக் காட்டுவதும் அந்தப் பிரயோஜனங்களுக்குப் பதிலாய் நாமவர்களுக்கு நமது பொருள்முதலியவற்றில் ஓர் பாகத்தைப்பிரதிதானமாய் அளிப்பதுமே இஃதாகும். இந்த யக்ஞத்தின் லக்ஷியார்த்தமாவது நமக்கும் மேலுலகங்களுக்குமுள்ள சம்பந்தங்களின்னவையெனவும், ஸ்தூலவுலகமும் மேலுள்ள மற்ற சூட்சுமலோகங்களும் ஒன்றிற்கொன்று சம்பந்தமுள்ளவைகளே யன்றி, எக்காலத்தும் பரஸ்பர ஒத்தாசை யன்றி நிலைநிற்பவைகள் அன்றெனவும் நாமுணருதலேயாம். நாம் பிரபஞ்சத்தில் நாற்புறத்திலும் பிரவர்த்திக்கும் நியதியுடன் ஒற்றுமையொடு வியவஹரிக்க வேண்டும். சகல ஜீவசமூகத்துடனும் கலந்து உறவுடன் ஒழுகவேண்டும்.

(3) பிதிர் யஜ்ஞத்தில் பாஹியாங்கமாவது நமது குடும்பத்தின் பூர்வீகர் முதலிய முன்னோர்க்கு நாம் செய்யவேண்டிய தர்ப்பணம் அல்லது ஜலதானமாம். இதன் லக்ஷியார்த்தமாவது பூர்வகாலத்திற்கு நாம் செலுத்தவேண்டிய கடமை யுண்டெனவும், பூர்வகாலங்களில் இவ்வுலகத்தில் வசித்து உலகம் திருந்தி க்ஷேமப்பட்டுப் பின்வருவோர்க்குப் பயன்படவேண்டுமென்றே யோடியுழைத்து வந்திருக்கும் பெரியோராகிய நம்முன்னோர்க்கு நன்றியறிதலொடு நாம் கடமைபுரியவேண்டுமெனவும் அறிதலேயாம். முன்சென்ற காலத்திற்கு, அதாவது அக்காலத்தவராகிய பிராசீனருக்கு, தான்

செலுத்தவேண்டிய கடமையை யுணராத மனிதன் எவனும் மானிடனுகான்.

(4) நரயக்ஞத்தில் பாஹியாங்கமாவது விருந்தளித்துபசரித்தலாம். பிரதிதினமும் ஆரியராகிய எவரும் தன்னிலும் எளியராகிய வொருவருக் கன்ன மளிக்க வேண்டும். இங்குஅந்தரங்கமாவதுமனிதவர்க்கத்திற்கு நாம் செய்யவேண்டிய உபகாரத்தை மறவாதுணர்தல். பசியுள்ளார்க்கு அன்னமளித்தல், வஸ்திரமில்லாதவர்க்கு ஆடையளித்தல், திக்கற்றவர்க்கு வசதியீதல், துக்கமுற்ருர்க்கு ஆறுதல் கூறல், இவையாவும் நமதுகடமையே யென்றறிதலேயாம். செல்வமுள்ளவர் வறியார்க்குச் சகலவித சௌகரியங்களேயும் பாதுகாத்தளிக்கும் கடமைபூண்ட உக்கிராணக்காரர்களே யாவர்.

(5) பூதயக்ஞத்தில் பாஹியாங்கமாவது நமக்கு நாற்புறத்திலும் சஞ்சரிக்கும் அப்பிரத்தியக்ஷ மாகிய அற்பஜந்துக்களினிமித்தம் நாம் உண்ணுமுன் சிறிது ஆகாரத்தை பூமியில் வைத்தலும், நமது போஜனத்திற்குப் பின் சிறிதுணவை திக்கற்ற சஞ்சாரிகளாகிய மனிதர்க்கும், பிராணிகட்கும் உபயோகமாம்படி ஏற்ற ஸ்தானத்தில் வைத்துவருதலுமேயாம். இதில் அந்தரங்கமாவது மானிடவர்க்கத்திலும் தாழ்ந்தவர்க்கங்களிலுமுள்ள நம்மிலும் தாழ்ந்த பிராணிகளின் க்ஷேமத்தைக் கோரவேண்டியது நமது கடமை யென்றும், இது அவை நமக்குழைத்துவருதற்கு நாம் செய்யவேண்டிய பிரதியுபகாரமே யென்றும், அன்றியும் எப்பொழுதும் அவைகள் விஷயத்தில் நாம் பக்ஷம், ஆதரவுடன் ஒழுகிவரவேண்டியது என்றும் நாமறிந்து கொள்ளுதலேயாம்.

இவ்விதமிந்தப் பிரதிதின பஞ்சமஹா யக்ஞங்களும் நமக்குச்சுற்றிலுமுள்ள பெரியோர், நம்மவர், தாழ்ந்தோர், கீழ்ப்பட்டவை முதலிய சகல வஸ்துக்கட்கும் நமக்குமுள்ள சம்பந்தங்களை விளக்குகின்றன. குடும்பங்கள், ஜாதியார், தேசத்தார் இவற்றின்யோக க்ஷேமங்கள் நிலைபெறவேண்டியதற்கவசியமான ஒற்றுமை யல்லது சௌஜன்யபாவத்தை இவை யேற்படுத்துகின்றன. பிரபஞ்சவாழ்க்கையாகும் மகாசக்கிரத்தை ஈசுவரனது இச்சையின்படி சுழற்றியாட்டுவித்துச்சகல வுலகங்களும் மென்மேல் பரிபாகமடையும்படி செய்விக்கின்றன. அன்றியும் இவை, யொவ்வொரு மனிதனும் இயற்கையிலுள்ள ஏனையவற்றோடு சம்பந்தமற்ற தனிவியக்தியன்று, பின்னை, யெல்லாம் தன்னுள்ளடக்கிய ஒரு பூர்ணவஸ்துவின் ஓர் அம்சமே, ஒரு மஹாசரீரத்தில் ஓர் அங்கம் அல்லது சிறுபாகமேயாதலால், இவனது யோக க்ஷேமாதிகள் மேற்கூறிய பூர்ணவஸ்துவின் யோகக்ஷேமாதிகளை யிவன் கோரி அவற்றிற்கு முரண்படாது ஒழுகுவதாலன்றி வேறுவழியில் எவ்விதத்தினும் கிட்டாதென்று வற்புறுத்தியும் காட்டுகின்றது.

## பிரமாணங்கள்.

| | |
|---|---|
| அத்⁴யாபநம் ப்³ரஹ்மயஜ்ஞ: பி<br>த்ருயஜ்ஞஸ்து தர்ப்பணம் ।<br>ஹோமோ தை³வோ ப³லி<br>ர்பௌ⁴தோ ந்ருயஜ்ஞோதிதி²<br>பூஜநம் ॥<br><br>மனுஸ்மிருதி. | (பிறர்க்கு) போதித்தலே பிர்ம்ம யக்ஞம்; தர்ப்பணமே பிதிர் யக்ஞம்; தேவயக்ஞமாவது ஹோமம்; பூதயக்ஞமாவது பலியிடல்; அதிதிகளைப் பூசித்தலே நரயக்ஞமாகும். |

𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑍇𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑌃𑌸𑍍𑌯𑌾𑌦𑍍
𑌦𑍈𑌵𑍇𑌚𑍈𑌵𑍇𑌹𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 ।

𑌦𑍈𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑍋𑌹𑌿
𑌬𑌿𑌭𑌰𑍍𑌤𑍀𑌦𑌂𑌚𑌰𑌾𑌚𑌰𑌮𑍍 ॥

மனுஸ்மிருதி iii. 75.

𑌋𑌷𑌯𑌃𑌪𑌿𑌤𑌰𑍋𑌦𑍇𑌵𑌾𑌭𑍂
𑌤𑌾𑌨𑍍𑌯𑌤𑌿𑌥𑌯𑌸𑍍𑌤𑌥𑌾 ।
𑌆𑌶𑌾𑌸𑌤𑍇𑌕𑍁𑌟𑍁𑌮𑍍𑌬𑌿𑌭𑍍𑌯
𑌸𑍍𑌤𑍇𑌭𑍍𑌯𑌃𑌕𑌾𑌰𑍍𑌯𑌂𑌵𑌿𑌜𑌾𑌨𑌤𑌾 ॥

𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑍇𑌨𑌾𑌰𑍍𑌚𑌯𑍇𑌤
𑌋𑌷𑍀𑌨𑍍 𑌹𑍋𑌮𑍈𑌰𑍍𑌦𑍇𑌵𑌾𑌨𑍍
𑌯𑌥𑌾𑌵𑌿𑌧𑌿 ।

𑌪𑌿𑌤𑍄𑌞𑍍𑌶𑍍𑌰𑌾𑌦𑍍𑌧𑍈𑌰𑍍𑌨𑍄𑌨𑌨𑍍𑌨𑍈
𑌭𑍂𑌤𑌾𑌨𑌿𑌬𑌲𑌿𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 ।

எப்பொழுதும் வேதாத்தியயனத்தை நடத்தி வரவேண்டும்; தேவர்கடனையும் ஓம்பல் வேண்டும். தேவர்கடனைச்செலுத்தி வருவதால் சராசரமான வுலகையே போஷிக்கிறான்.

ரிஷிகள், தேவர், பிதிருக்கள், பூதங்கள், நரர் இவர்யாவரும் குடும்பிகளையே எதிர்ப்பார்க்கிறார்கள்.

ஆதலால் அவர்கட்குச் செய்ய வேண்டிய காரியமின்னதென அறிந்தவன் ரிஷிகளை வேதாத்தியனத்தாலும், தேவர்களை ஹோமத்தாலும் பிதிர்களைச் சிராத்தத்தாலும், நரர்களை அன்னத்தாலும், பூதங்களைப் பலி பிரதானத்தாலும் விதிப்படி யருச்சித்து வரல்வேண்டும்.

## அதிகாரம் 5.

### பூஜை.

பிரபஞ்சத்தில் சகலமான பதார்த்தங்கள், பிராணிகள் ஆகிய இவைகளோடு, மனிதனுக்கு நெருங்கிய சம்பந்தமுடையது என்றறிந்து கொண்டு மேற்கூறிய பஞ்ச யக்ஞங்களையும் ஒருவன் செய்து வந்தாலும், அவன் உண்மையான மதவிசுவாஸமுள்ளவனாயிருப்பானாகில் இவ்வளவோடு அவன் அந்தரங்கத்திற்குத்திருப்தியுண்டாகமாட்டாது; ஏனெனில் பிரபஞ்சத்திற்கு ஆதிநாதனும், தன்ஜீவனையோர் அம்சமாகத் தன்னுள்ளடக்கிய பூர்ணமான சைதன்ய மூர்த்தியுமாகிய ஈசுவரனை அபரோக்ஷமாய் அறிந்தடையவேண்டுமென்பதன்றோ இவனதுகருத்து. இவ்வித நாட்டம் ஈசுவரனை நோக்கிச் செய்யப்படும் பூஜையில் திருப்தியடைகிறது. பரபிர்ம்ம தத்துவத்தின் முடிவை யறிந்தவரும் சகல பூதங்களின் ஹிதத்தைக் கோருகிறவருமான வியாசாசாரியர் மஹாபாரதம், பிரம்மசூத்திரமிவற்றை யியற்றிய பின்னரும் சித்தசாந்தியடையாம லிருந்தபொழுது, நாரதபகவான் அவருக்கு ஈசுவர ஸ்துதியைப் பாடும்படி உபதேசித்தருளினர். வியாசரும் இஃதை விஷ்ணு பாகவதத்தை யியற்றி நிறைவேற்றினர். அதனால் முன் தானடையாத சாந்தியை யடைந்தானந்தித்தார்.

பூசையாவது பரமனிடம் அன்பை வெளிப்படுத்தல், அவனிடம் பக்திசெலுத்தல், அவனையறிவோடு அறிந்துணர விரும்பல், அவனோடைக்கியமுற அவாக்கொள்ளல், எல்லாந்தன்னுளடக்கிய பூரணவான்மாவினிடம் தானென்னும் பின்னரூபமாகிய ஜீவான்மா

வை யமிழ்த்தியொன்றுபடுத்தி அப்பெரிய ஐக்கியத்தை யனுபவிக்கக் கருத்துக் கொள்ளலாம். இப்பக்தி அவ் வீசுவரனது பூரண மஹிமையை நோக்கி ஸ்துதியாக வும் அல்லது அவனது பெருமைக்கும் தன்சிறுமைக்கு முள்ள தாரதம்மியத்தைக் கவனித்துப் பிரார்த்தனை யல்லது ஸ்தோத்திரரூபமாகவும், அவனது அன்பை நோக்கி முறையிடலாகவும், அவனது அநந்தமான மஹி மையைப்பற்றிப் புகழாகவும், பிரபஞ்ச கிருத்தியத்தில் விளங்கும் அவனது காருணியத்தைப் பேசுவதாகவும், அவன் பிரசன்னமாகும்படி செய்து கொள்ளும் மன திரங்கிய வேண்டுகோளாகவும், இன்னுமவரவர் சுபாவத் திற்கும் பரிபாக நிலைமைக்குமேற்பப் பற்பலவிதங்களல் லது பிரகாரங்களாகவும் பிரவிர்த்திக்கும். ஆயினும் கற்றறியா மூடனிடத்தினுலுஞ்சரி, சாஸ்திரவாராய்ச்சி யுள்ள விவேகியினிடத்தினுலுஞ்சரி இது பிரம்மத் தோடு ஐக்கியமடையவேண்டுமென்று மிவ்விச்சையே யன்றி. இது ஜீவர்களின் மனோபிவிருத்திமுதலிய பரி பாகஸ்திதிகளின் வேற்றுமைகளுக்குத் தக்கப்படி அவ ரவர்களிடத்தில் வித்தியாசங்களோடு பிரகாசிப்பதாயி னும் இதன் மூலம் மேற்கூறியவன்பு அல்லது ஆவலே யன்றி வேறன்று.

அகண்டமாகிய பூரணவஸ்து ஒரு பொழுதும் பூஜை யல்லது பக்திக்கு விஷயமாகாது. ஆதலால் மனது நிலைத்தூன்றுவதற்கும், ப்ரேமை விருத்தியடை வதற்கும் குணங்கள் அவசியமாயிருக்கின்றன. ஆதலின் சகுணப்பிர்ம்மமாகிய ஈசுவரனே பக்திக்கு இலக்காகி றான். பூஜாஸ்தோத்திரங்கள் யாவு மிவனையே யடைகி ன்றன. தியானுதிகளும் இவனையே யுத்தேசித்துச் செ

ய்யப்படுகின்றன. இவனைச் சிவனாகவாவது விஷ்ணுவாகவாவது, மஹாதேவனாகவாவது நாராயணனாகவாவது துர்க்கையாக வாவது லக்ஷ்மியாகவாவது அல்லது, கணேசன், இந்திரன், அக்கினி, சரஸ்வதி, அல்லது ராமகிருஷ்ண புத்தாதி அவதாரங்களி லொன்றாகவாவது பூஜிக்கலாம். ஆனால் எவ்வித நாமரூபங்களிலும் அர்ச்சிக்கப்படுவது ஈசுவரனேயன்றி வேறன்று.

ஒருபுராணத்தில் சிவனையும் மற்றொன்றில் விஷ்ணுவையும் பரம்பொருளாகக் கூறப்பட்டிருப்பதும் ஒரு புராணம் சிவனையுயர்த்தியும் மற்றொன்று விஷ்ணுவை யுயர்த்தியும் கூறுவதும் ஆகிய விரோதவசனங்களால் சிறுவர்களுக்குண்டாகும் மயக்கத்தைகீழ்வருவது விலக்குகின்றது. சிவவிஷ்ணுவாதியான இவையெல்லாம் ஆகாரங்கள்; ஈச்சுவரன் ஒரேவஸ்து. உபாசகன் இக்கணக்கற்ற ஆகாரங்களில் தனக்கு இஷ்டமான வொன்றில் ஈசுவரனையே வணங்குகிறான். இந்த ஆகாரங்கள் மூலமாய் அவன் ஈசுவரனை வணங்குகிறானே யொழிய ரூபத்தை வணங்குகிறதில்லை. எந்த ரூபத்திலும் அதிலுள்ள ஈசுவரனையே யுத்தேசிக்கிறான். இதற்குதாரணம்: மனைவிதன்புருஷனிடம் தனக்குள்ள அன்பால் சில சமயங்களில் அவன் தரிக்கு மாடைகளிலும் பிரீதியைச்செலுத்துகின்றனளாயினும் அவ்வஸ்திராதிகளேதன்புருஷனென்னும் பாவனையடைகிறதில்லை. புருஷனைவிட்டு வஸ்திராதிகளை நேசிக்கிறதுமில்லையன்றோ? அதுபோல் பித்தனும் ஈசுவரனது திவ்விய ரூபங்களில் ஏதேனுமொன்றில் பிரகாசிக்கும் அவனது அன்பு, சௌந்தர்யம், மஹிமை முதலிய குணங்களையே குறித்து வந்திக்கிறான். இத்திவ்விய குணங்களில் சிறிதையே நாம் கிஞ்சி

க்ஞர்களாதலால் ஒவ்வொரு காலத்தில் கிருகிக்க முடியும். ஆனால் பக்தியில் ஏகனாகிய ஈசுவரனது குணங்களில் சிலவற்றை நாம் கிரஹிக்கமுடியும்.

இவ்வுண்மையை யறியாமலே பற்பல மதங்களும் ஒரே மதத்தினுள்ளும் அதன் உள்விபாகங்களும் ஒன்றோடொன்று விவேகமற்றுக்காட்டிவரும் பல விவாதச் சச்சரவுகள் நடைபெறுகின்றன. இம்மதவாதிகள் எல்லோரும் ஒரே ஈசுவரனையே வணங்குகிறார்கள். இவர்களுக்குள் பிரகாசிக்கும் சகல வித்தியாசங்களும் பக்தர்களின் வேற்றுமைகளால் ஏற்படுபவைகளேயன்றி பக்திக்கு விஷயமான ஈசுவரனைச் சேர்ந்தனவன்று.

பூஜையானது சாமானிய பக்தியின் ஸ்வரூபம். ஒரு படமல்லது பிரதிமையை வைத்து, மந்திரங்களை யுச்சரிப்பது, பத்திரபுஷ்பங்களை யர்ச்சிப்பது, பிரதிமைக்கு ஜலத்தால் அர்க்கியம் ஸ்நாநம் செய்வித்தல் முதலிய பாஹியயோபசாரக் கிரியைகளில் ஈசுவரனிடம் வைக்கப்பட்ட அந்தரங்கத்தின் அன்பானது பிரகாசித்துக்காலக்கிரமத்தில் பிரதிமை முதலிய பாஹியசாதனங்களின்றிச் சாக்ஷாத் ஈசுவரனையே நாடும் சக்தியை யடைகின்றது. பக்திக்குச் சிலசமயங்களில் குலதெய்வம் அல்லது தேவி அல்லது சில சமயங்களில் இஷ்டதெய்வம் (அதாவது தனக்குப் பிரீதியான ஸ்வரூபம்) இவற்றைப் பக்தன் தானே தேடிக்கொண்டோ அல்லது தன் குருவால் உபதேசிக்கப்பட்டோ ஏற்றுக்கொள்ளுகிறான்.

உபாஸனை யென்னும் பதம் தியானம் சந்தியை முதலிய ஸநாதன தர்ம்மாநுஷ்டானங்களையுடைய மத

ஸ்தர் யாவரும் பிரதிதினமும் தவருது செய்யவேண்டிய அநேகவித பூஜாபிரகாரங்களையும் குறிப்பிடுகின்றது. சந்தியையிலும் வைதிகமென்றும் தாந்திரிகமென்றும் இருவிதமுண்டு. ஒவ்வொரு சிறுவனும் தன் வருணம், குலாசாரங்களுக் கியைந்தபடியே சந்தியையைச் செய்துவரவேண்டும். தக்க யோக்கியதையுள்ள ஆசிரியனிடமிருந்துமுதல் இதைக்கற்றுக்கொண்டு அவன் பிறகு தவருமல் தினந்தோறும் நடத்திவரவேண்டும். தியானம் விசேஷமாய் மேற்பட்ட தசைகளில் சிறுவனுக்குத் தக்கவயது வந்தபின் அனுஷ்டிக்கச் சாத்தியமே தவிர் இளமைப்பருவத்தில் முடிவதன்று.

## பிரமாணங்கள்.

𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌮𑌪𑍍𑌯𑌚𑍍𑌯𑍁𑌤
𑌭𑌾𑌵𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌂 𑌨 𑌶𑍋𑌭𑌤𑍇
𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌲𑌂 𑌨𑌿𑌰𑌂𑌜𑌨𑌮𑍍 ।

𑌕𑍁𑌤𑌃 𑌪𑍁𑌨𑌃 𑌶𑌶𑍍𑌵𑌦𑌭𑌦𑍍𑌰𑌮𑍀
𑌶𑍍𑌵𑌰𑍇 𑌨 𑌚𑌾𑌰𑍍𑌪𑌿𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌯𑌦
𑌪𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑌮𑍍 ॥

விஷ்ணு பாகவதம் I. V. 12.

களங்கமற்ற உயர்ந்த அறிவாயினும், பூரணமான நிஷ்காம கர்ம்மாயினும், அழிவற்ற பரம்பொருளினிடத்தில் பக்தியற்றிருக்குமானல் சோபிக்காது. (அப்படி யிருக்கும்பொழுது) ஆசையற்றவையாயினும் அசுத்தங்களான ஈசுவரார்ப்பணமற்ற கிரியைகள் சோபியாது என்று சொல்லவும் வேண்டுமோ ?

𑌯𑍇 𑌤𑍍𑌵𑌕𑍍𑌷𑌰𑌮𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑍍𑌯𑌮𑌵𑍍𑌯
𑌕𑍍𑌤𑌂 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 ।

𑌤𑍇 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍁𑌵𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌮𑍇𑌵
𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌹𑌿𑌤𑍇 𑌰𑌤𑌾𑌃 ।

𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾 𑌹𑌿 𑌗𑌤𑌿𑌰𑍍𑌦𑍁𑌃𑌖𑌂 𑌦𑍇
𑌹𑌵𑌦𑍍𑌭𑌿𑌰𑌵𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 ।

𑌯𑍇 𑌤𑍁 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿
𑌮𑌯𑌿 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌃 ।

𑌅𑌨𑌨𑍍𑌯𑍇𑌨𑍈𑌵 𑌯𑍋𑌗𑍇𑌨 𑌮𑌾𑌂
𑌧𑍍𑌯𑌾𑌯𑌨𑍍𑌤 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇 ॥

𑌤𑍇𑌷𑌾𑌮𑌹𑌂 𑌸𑌮𑍁𑌦𑍍𑌧𑌰𑍍𑌤𑌾 𑌮𑍃
𑌤𑍍𑌯𑍁𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑌾𑌗𑌰𑌾𑌤𑍍 ।

𑌭𑌵𑌾𑌮𑌿 𑌨𑌚𑌿𑌰𑌾𑌤𑍍𑌪𑌾𑌰𑍍𑌥 𑌮𑌯𑍍𑌯𑌾
𑌵𑍇𑌶𑌿𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌂 ॥

பகவத்கீதை Xii. 3. 7.

நிர்த்தேசம்பண்ண முடியாததும், அவ்யக்தமானதும், அழிவற்றதுமான வஸ்துவை எவர்கள் உபாஸிக்கிறார்களோ அவர்கள் சகல பூதங்களின் ஹிதத்தை நாடுகிறவர்களாய் என்னையேயடைகிறார்கள். அவ்யக்தத்தில் நாட்டப்பட்ட சித்தத்தையுடைய விவர்களுக்குச் சிரமம் மிகவு மதிகமாகின்றது; இந்த அவ்யக்தமார்க்கம்மிகக்கிலேசத்துடன் மனிதரா லடையப்படுகிறது.

எவர்கள் சகல கருமங்களையும் என்னிடத்தில் சமர்ப்பித்து என்னைச்சரணமடைந்தவர்களாய் என்னையே தியானஞ்செய்துகொண்டு உபாஸிக்கிறார்களோ, என்னிடத்தில் வைக்கப்பட்ட மனதையுடையவர்களை ஓ! அர்ஜ்ஜுனா! ஜனனமரணசாகரத்தினின்றும் சீக்கிரமாகக்கரை யேற்றுவிக்கிறேன்.

𑌈𑌶𑍍𑌵𑌰𑌃𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂
𑌹𑍃𑌦𑍍𑌦𑍇𑌶𑍇𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 ।
𑌭𑍍𑌰𑌾𑌮𑌯𑌨𑍍𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌯𑌂
𑌤𑍍𑌰𑌾𑌰𑍂𑌢𑌾𑌨𑌿 𑌮𑌾𑌯𑌯𑌾 ॥

ஓ! அர்ஜ்ஜுனா! யந்திரத்திலேறிய வஸ்துக்களைப்போல் சகல பிராணிகளையும் தனது மாயாசக்தியால் கருமங்களில் பிரவர்த்திக்கச்செய்து கொண்டு ஈசுவரன் சகல பிராணிகளுடைய ஹிருதயத்திலும் வஸிக்கிறார்.

பகவத்கீதை-XVIII. 61. 62.

ஓ! பரதவம்சத்தில் உதித்தவனே! அவனையே முழுமனதோடும் சரணமடைவாயாக. அவனனுக்கிரஹத்தால் உயர்ந்த சிரத்தையும் சாசுவதமான ஸ்தானமும் உனக்குக் கிடைக்கும்.

பகவத்கீதை-IV. ii.

ஓ! அர்ஜ்ஜுனா! எவர்கள் எவ்விதமாய் என்னை யுபாஸிக்கிறார்களோ அவர்களை யவ்விதமாகவே நான் அனுக்கிரஹிக்கிறேன். மனிதர்கள், என்னுடைய மார்க்கத்தைச் சகலவிதத்திலேயும் அனுசரிக்கிறார்கள்.

பகவத்கீதை-VII. 21. | எவ்வெந்த பக்தன் எவ்வெந்த ஈசுவர சரீரத்தைச் சிரத்தையுடன் பூஜிக்கிறதற்கு இச்சிக்கிறானோ, அவ்வந்த பக்தனுக்கு அவ்வந்த விசுவாசத்தை நானேஸ்திரமாக்குகிறேன்.

---

## அதிகாரம் 6.

### நான்கு ஆசிரமங்கள்.

ஒவ்வொரு வகுப்பிற்கும் தனித்தனி குணங்களிருப்பதுபோல உலகிலுள்ள பற்பல தேசத்தார்க்கும் தனித்தனியான குணங்கள் அல்லது ஸ்வபாவங்கள் உண்டு. இவ்விதம் இந்த ஹிந்து ஜாதியார்க்கும் பூர்வ காலங்களில் ஒழுங்கு ஒற்றுமை இவை சுபாவகுணங்களாயிருந்தன. ஸநாதனதர்மமும் இக்குணங்களை ஜனங்களிடத்தில் பதியச்செய்து இவர்களை மானிடருள் (மிகவும்) ஓர் உயர்தரத்தாராக்கி ஒழுங்கு மொற்றுமையும் பொருந்திய பரிபாகத்தை யடையச்செய்யும்படி ஏற்பட்டது. இக்குணங்கள் அந்நாட்களில் ஸநாதனதர்ம மதஸ்தனுக்கு இன்றியமையாத சீலமாய் ஏற்பட்டிருந்ததுபற்றியே, ஸ்ரீகிருஷ்ணனும் கீதையில் "சமத்துவம்" என்னும் ஒற்றுமையே யோகமெனக் கூறினர்.

வேதங்களில் வருணிக்கப்படும் ஆத்மாவினது மஹிமையின் விஸ்தாரமே மேற்கூறிய இந்நற்குணங்களை நோக்கி முயற்சி இந்த ஜாதியாருள் ஏற்படுவதற்குக்காரணமாயிருந்தது. இவ்விஷயத்தில் வேதங்கள் கூறுவதாவது: சகல பதார்த்தங்களும் ஆன்மாவின் பொருட்டே; ஆத்மாவின் இச்சையாலேயே வஷிக்கின்றன. ஆத்மா அனுபவிக்க விரும்பும் சகல அனுபவங்களையும் தருவதற்காகவே இவையனைத்தும் ஏற்பட்டிருக்கின்றன எனவேயாம். அழிவற்ற வஸ்துவாய் மேலுலகங்களில் சகல சக்திகளோடும் கூடிய பிரபுவாய் எக்காலத்திலும் வஹிப்பதுபோல் ஸ்தூலமாதி தாழ்ந்த வுலகங்களிலும் தனது சகல சக்திகளையும் பிரகாசப்படுத்திக்கொண்டு ஸ்வாதீனமாய் ஆத்மா தன்னறிவோடு அடக்கியாளவேண்டுமென்று இச்சைகொள்ளுகிறான். இவன் சாசுவத பொருளாதலால் கடுகளவும் அவசரமுடையவனன்று. சமயம்போல் சாவகாசமாய் ஒன்றின்பின் னொன்றாய்ச் சகல அனுபவங்களையும் ஏற்று ஒற்றுமை யொழுங்குடன் தன் சக்திகளைப் பிரகாசப்படுத்திக்கொள்ளுகிறான். இவ்வேற்பாடு பரமான்மாவாகிய ஈசுவரனால் நாம் வசிக்கு முலகில் உலோகமாதி தாழ்ந்த வர்க்கங்களில் அமைக்கப்பட்டிருக்கின்றது. முதலில் விதை, பின் வேர், பிறகு முளை, பின் இலைகள், அப்பால் காய் இவை யொன்றன் பின்னொன்றாய் ஒழுங்குதவறாமல் தோன்றுகின்றன அன்றோ! இவற்றுள் ஒவ்வொன்றிற்கும் தக்க ஸ்தலமும் அழகும் அததன் பருவத்தில் ஏற்பட்டிருக்கின்றனவன்றோ அவ்விதமே மானிடர்க்கும் குழவிப்பருவம், சிறுவனாகும் காலம், வாலிபபருவம், பிரௌடாவஸ்தை, முதுமையாகிய

இவ்வொழுங்கை அவரே. யமைத்திருக்கின்றனர். இவ் வரிசையை மீறவாவது மாற்றிக்கொள்ளவாவது மனி தனால் கூடாதன்றோ ! ஆயினும் ஜீவாத்மாவானவன் இன்னும் தான் வசப்படுத்திக்கொள்ளாத பிரகிருதி யால் கட்டுண்டிருப்பவ னாதலின் கர்மத்தால் தூண் டப்பட்ட மனிதன் ஏவலால் இவ்வுண்மையை யுண ராது பலவழிகளிலும் முயலுவோனாகி ஓர் நிலைமை யிலிருக்கும்பொழுதே மற்றவைகளிலுள்ள விஷயங் களைப் பற்ற நினைந்து தனது பரிபாகம் ஒழுங்குடன் நிறைவேறி வருவதைத் தடைப்படுத்திக் கொள்கிறான். சிசு பையனாகவும், பையன் வயதுவந்த மனிதனாகவும் விரும்புகிறான். கிழவன் வாலிபனது போகங்களை யனு பவிக்க ஆவல்கொள்ளுகிறான். இவ்விதம் வாழ்க்கை யில் சாந்தியென்பதில்லாமல் பரபரப்பும் பெருமூச் சும் ஏற்படுவதால் அதனாலுண்டாகும் பிரயோசனம் பாதி இல்லாமற் போய்விடுகிறது.

இவ்விதமான அறியாமையால் எழும் பரபரப்பு, ஒழுங்கின்மை யிவை யேற்படாவண்ணம் மகாரிஷிகள் ஆரியமகா வம்சத்தாருள் முதற் பிறந்தவர்களாகிய முதல் உள் வகுப்பினர்க்கு ஜனனமுதல் மரணம்வரை யொரு ஜன்மத்திலும், கணக்கற்ற ஜன்மங்களையுடைய சம்சார வாழ்க்கையிலும் சில குறிப்பிட்ட படிகள் அல் லது நிலைமைகளை வகுத்து அளித்தனர். இவ்விருவகை யிலும் அந்நிலைமைகள் நான்கே. ஒரு ஜனனம் ஒரு மரணமிதற்கு மத்தியிலுள்ள ஒரு ஜன்மத்தில் இவற் றிற்கு 'ஆசிரமங்கள்' (சிரம பரிகார ஸ்தலங்கள், வச திகள்) என்று பெயர். அநேக ஜனனமரணங்களி னூடே செல்லும் பெரும் வாழ்க்கையாகிய சம்ஸார

மார்க்கத்தில் இவற்றிற்கு வருணங்கள் நிறங்கள், ஜாதி கள் என்று பெயர்.

இங்கு நாம் ஆசிரமங்களைப் பற்றிமட்டும் பேசுவோம். முற்கூறியபடி இவ்வவஸ்தைகள் நான்காகும். அவை பிர்ம்மசரியம் (வித்தியாப்பியாச நிலைமை) க்ருஹஸ்தம் (கிருஹஸ்தனுயிருக்கும் அவஸ்தை) வானப்பிரஸ்தம் (வனவாஸநிலைமை) சந்நியாஸம்: (சகலத்தையும் தியாகம் செய்து நிற்கும் நிலைமை அல்லது துறவு.) என்னும்.

இவற்றுள் எந்நிலைமையிலும் மற்ற மூன்றின் தர்மங்களை யொருவன் பற்றுவது, கூடாது. பிர்ம்மசாரி கிருஹஸ்தனு யிருப்பதாவது, வானப்பிரஸ்தன் சந்நியாசியாகவாவது பொருந்தாது. அப்படியே கிருஹஸ்தனுவான் பிர்ம்மசாரி வானப்பிரஸ்தன், சந்நியாசி யிவர்கள் நிலைமையை அடைவது ஒவ்வாது. வானப்பிரஸ்தனும் கிருஹஸ்தனுடைய அனுபவங்களுக்கு ஆசைப்படப்படாது. அவ்வாறே சன்னியாசியும் வானப்பிரஸ்தன் தனிமையில் அனுபவிக்கும் அனுபவங்களை விரும்பலும் தகாது. இவ்வொவ்வொரு ஸ்திதியிலும் அதற்குத் தக்க தர்மங்களும் ஆனந்தங்களுமுண்டு. இவற்றை அவ்வவற்றின் கால அளவின்படி அனுஷ்டிக்கப்பட்டால் இவை ஜீவாத்மாவின் பரிபாகம் ஒழுங்குடன் நிறைவேறுதற்கு உபயோகமாகின்றன. இந்த ஸ்திதிகளின் முறை தவறப்படுமானுல் ஜீவ பரிபாகந் தடைப்படுகின்றது.

இனி தற்காலத்தில் பூர்வகாலத்திய ஒழுங்கின்படி பிசகின்றி இவ்வாச்சிரமங்களை யனுஷ்டிக்க நம்மால் முடியாது. ஏனெனில் இவற்றிற்கு வேண்டிய வெளி

சௌகரியங்களைத் தற்காலத்தில் ஏற்படுத்திக்கொள்வது அசாத்தியம். ஆயினும் இவ்வாச்சிரமங்களின் முக்கிய தர்மங்கள் யாவை யென நாம் தெளிவாய் அறிந்து கொள்வோமாயின் இக்காலத்திலும் கூடியவரை நமது வாழ்க்கையை யவற்றிற் கொருவாறு ஒவ்வும்படி செய்து நமது பரிபாகம் ஒழுங்குடன் பிரவர்த்திக்கும்படி செய்துகொள்வது அசாத்தியமாகாது.

பிர்ம்மசரீயம் அல்லது மாணுக்கனுடைய வித்தியாப்பியாச நிலைமை உபநயன சமஸ்காரம் அவனுடைய இரண்டாம் பிறப்புடன் ஆரம்பிக்கின்றது. இன்று முதல் இவன் சில நற்குணங்களை விடாது அப்பியஸித்தொழுகல் வேண்டும். இவனது பழக்கங்கள் சாதாரணமாயும் விசேஷ சௌகரியங்களை யபேக்ஷிக்காதவைகளாயு மிருக்கவேண்டும். இவை யிவனது சரீரத்தைப் பலமுடையதும், வியாதியற்றதுமானதா யாக்குகின்றன. அதிகாலையில் துயிலைவிட்டெழுதல், ஸ்நாநம் செய்தல், சாதாரணமான ஆகாரத்தை மிதத்துடன் உட்கொள்ளுதல், வேண்டியமட்டில் சரீர முயற்சியில் பழகுதல், சோம்பல், சுகந்தேடல் இவைகளால் உறங்கி வீழ்வதற் கிடங்கொடாமை ஆகிய பழக்கங்களை யனுசரிப்பதால் சரீரத்துக்கு உறுதியும் ஆரோக்கியமும் உண்டாமென்பதற்குத் தடையுமுண்டோ! இவ்விதம் நாட்கழிக்கும் ஒரு சிறுவனையும் நேரம் சென்றும் படுக்கையைவிட்டு நீங்காது கிடப்பவனும், சுவையுள்ள தின்பண்டங்கள், விசேஷ போஜனங்களிவற்றை மித மிஞ்சி யுட்கொள்ளுபவனும், சரீரப்பிரயாசை யென்பது சிறிதும் பயிலாதவனும், மிருதுவான தலையணைகளில் எப்பொழுதும் சாய்ந்துகொண்டு காலத்தைக்

கழிப்பவனுமாகிய ஒரு பையனையும் சற்று ஒப்பிட்டுப் பார்ப்போம். இவருள் முன் சொன்னவன், சுறுசுறுப்பு, தேகபலம், வலிமைபற்றிய சதைபிடிப்பு, உத்ஸாகம், உழைப்பு இவை பொருந்தி விளங்குகிறான். மற்றவனோ மிகவும் சோம்பலுள்ளவனாய், ஸ்தூலித்துக் கொழுத்து முற்றிலும் சுறுசுறுப்பற்றவனாகவாவது அல்லது இளைத்து மெலிந்து அதி சீக்கிரத்தில் வியாதி பிடித்துக் கஷ்டப்படவேண்டியவனாகவாவது காணப் படுகிறான்.

இன்னும் சிறுவன் அடைவதற்கு முயலவேண்டிய குணங்களாவன: உழைப்பு, கீழ்படிதல், தாழ்மை, பரோபகாரசீலமாம். இளமைப்பருவமானது ஜீவிய காலம்வரை வேண்டிய சகல ஸாமக்கிரிகைகளையும் தேடி யாயத்தப் படுத்திக்கொள்ளும் காலம் ஆதலால் பிற்காலத்தில் வயதுவந்தபின் விசேஷ பிரயோசன மடையவேண்டுமாயின் இப்பொழுது விசேஷ வுழைப்புடன், அறிவைப் பெருக்கிக்கொள்ளு நிமித்தம், கல்வி பயிலுவது மிகவு மவசியமாகும். கீழ்ப்படிதலாவது நம்மிலும் மூத்தோர்களின் அனுபவத்தால் நமது நடத்தையைச் சீர்படுத்திக்கொள்ள முயலுதல்; இதனால் இப்பருவத்தில் அநேக வகைகளினின்றும் சிறுவன் தன்னைத் தப்பித்துக்கொள்ளச் சக்தனாகிறான். மேலும் பிறர்க்குக் கீழ்ப்படிந்து நடக்கப்பழகுபவனே பிற்காலத்தில் பிறரை யடக்கியாளச் சக்தனாகிறான். தாழ்மையென்னும் குணம் சிறுவனை மிகவும் துரிதமாய் உயர்வை யடைவிக்கின்றது. ஏனெனில், தாழ்மையுள்ளார்க்கு யாவருந் தம்மாலியன்றமட்டி லுதவ விரும்புகின்றார்கள். வீடு, பள்ளிக்கூடம் ஆகிய இவ்விடங்களில்

செய்யப்பழகும் பரோபகாரமானது சிறுவனைப் பின்னால் மானிடவர்க்கத்திற்கே பரமோபகாரியாக்கி விடுகின்றது.

கல்வி பயிலும் சிறுவன் தனது நினைவு, நடத்தைகளில் அதாவது மனம், காயங்களில் பரிசுத்தமுள்ளவனா யிருக்கவேண்டும். நினைவுகளை யடக்கிவரவேண்டும்; ஏனெனில் அசுத்தியை நினைக்காதவன் எவனோ அவன் அசுத்தியைச் செய்யமாட்டானன்றோ. அன்றியும் இவன் ஸ்திரீ புருஷ வித்வியாஸங்களை நினைத்துவரல்கூடாது. பகற்பொழுதில் இவற்றை பாவித்துக் கனவுகாணும் துர்வழக்கமும் கூடாது. நினைவிலும் கிரியையிலும் பரிசுத்தியைச் சிறுமைப்பருவத்தில் காப்பாற்றி வருபவர்களே பிற்காலத்தில் கிருஹஸ்த நிலைமையிற் பூரண சந்தோஷத்தை யடைபவராகக் கூடும். வித்தியாப்பியாஸியின் நாமதேயமாகிய பிரம்மாசாரி என்னும் பதம் இக்காலத்தில் முற்றிலும் ஸ்திரீ விருத்தியற்ற பரிசுத்தன் என்னுமர்த்தத்தையே பெற்றிருக்கின்றதன்றோ! இவ்வித பூர்வீகமான விதியைமீறி வித்தியாப்பியாஸ காலத்தில் விவாஹம் செய்துகொள்ளுபவர்க்கு அதிபால்யத்தில் விருத்தாப்பியம், கலவீனம், வியாதி, வம்சக்ஷீணம் இவை யாவும் பலன்களாய் விளைகின்றன.

பள்ளிக்கூடம், மேற்சட்ட கலாசாலைகள் ஆகிய இவைகளில் வித்தியாப்பியாசத்தை முடித்துக்கொண்டபின், சிறுவன் விவாஹம் செய்துகொள்ளும் பொழுது கிருஹஸ்த பதவியில் பிரவேசிக்கிறான். இக்காலத்தில் இவன் கிருஹஸ்தனுடைய தர்மங்கள் அல்லது கடமைகளை யேற்றுக்கொள்ளத் தகுதி யடைகிறான். எல்லா

ஆச்சிரமங்களிலும் இவ்வாச்சிரமமே மேம்பட்டது. ஏனெனில் மற்றெல்லாவற்றிற்கும் இதுவே ஆதாரமாகின்றது குடும்பம்,தேசமிவற்றின் க்ஷேமம் கிருஹஸ்தனையே பொறுத்திருக்கின்றது. இவர்களது அபிவிர்த்தியும் அவன் கையிற்றா னிருக்கின்றது. ஒரு நற்குணமுள்ள புருஷனும் நற்குணமுள்ள பிதாவாயும் நல்ல யஜமானனும், நற்குணமுள்ள குடியாயும் இருக்கும் மனிதன் மிகவுயர்வுடையோன் அன்றோ! ஆதலால், பரோபகாரசீலம், காருண்யம், இரக்கம், சுத்தமும் மிதமுமான வுணவு கொள்ளல், பரிசுத்தி, தயை, முன்னாலோசனை, உழைப்ப, கூர்ந்தாலோசித்தல், தானமாதி நற்குணங்களெல்லாம் கிருஹத்திலேயே வளருகின்றன. நாடு நகரமிவற்றில் வாழும்பொழுது நல்ல குடும்பி எனப் பெயர் பெறுபவன் இந்நற்குணங்களையே சகல வுலகிற்கும் பொதுவாயுழைப்பதிலும் உபயோகித்து வருவானாகில் சாது யோகி எனும் பெயரடைகிறான். கிருஹஸ்தனது மஹிமை மிகவும் குறைவடைந்ததினால் இக்காலத்தில் உலகவாழ்க்கையே அற்பமானதும் இழிவுடையதுமாகிவிட்டது. மேலும் தற்காலத்தில் கல்வி பயிலும் சமயத்திலேயே சிறுவர்க்கு விவாஹம் செய்யும் கொடிய பழக்கத்தால் அவன் சிறிது பிர்ம்மசரிய பதவிலும் சிறிது கிருஹஸ்த மார்க்கத்திலும் பிரவேசிப்பவனாகி இவ்விரண்டு ஆச்சிரமங்களின் தர்மங்களையும் கலந்துகொண்டு ஒன்றையும் பூர்த்தியுடன் நிறைவேற்றிக்கொள்ள இயலாதவனாகிக் கிருஹஸ்த பதவிக்கு முன்காலத்திலிருந்த மஹிமையையும் கௌரவத்தையும் முற்றிலும் இழந்துவிடுகிறான். காய் பழுத்துப் பக்குவமாவதற்குமுன் அதைப்பறித்துத் தின்பவனுக்கு அதன் மாதுரியம் எங்ஙனம் கிட்டும்.

இவ்விஷயத்தைப்பற்றி மகாபாரதம் சாந்திபருவத்தில் ஒரு கதை கூறப்பட்டிருக்கின்றது. அஃதாவது குலத்திற்பிறந்த பிராமணச் சிறுவர்கள் யோசனையில்லாமல் தக்க காலம் வருமுன் தம்முடைய கிருஹங்களைத் துறந்து துறவிகளாய்க் காலங்கழிக்க வெண்ணி வனத்தில் பிரவேசித்தார்கள். இவர்கள்மீது இந்திரன் இரக்கங்கொண்டு ஒரு சுவர்ணபக்ஷி வடிவத்துடன் பிரசன்னமாகி:—(ஓ பிள்ளைகளே!) நீங்கள் கிருஹஸ்தமார்க்கத்தையே யனுஷ்டியுங்கள், அது ஒரு புண்ணியபதவி அதுவே சகல நற்குணங்களும்விளைந்து வரும் க்ஷேத்திரம். தேவர்களின் வந்தனை, பாராயணம் குடும்பவிருத்தி நாம் பரிபாலிக்கப்பட்டு வந்ததைப்போல் இன்னும் வேறு ஜீவர்களுக்கு ஜனன பரிபாலனாதிகளைச் செய்து வருவதால் பிதிர்களுக்கு நாம் செய்யவேண்டியகடமை நிறைவேற்றல் ஆகிய இவை தபசுகளுக்குள் மிக்க கடினமானவைகள் ஆதலின், இவ்வளவு கடினமான குடும்ப பாரங்களை வஹியுங்கள். அவரவர்க்கேற்பட்டிருக்கும் கடமைகளைக் கைவிட்டோடுபவர் பாபத்தில் வீழ்கிறார்கள். ஏழைகளுக்களித்தபின் மிகுந்தவன்னத்தை யுண்பது உண்மையாக யாகத்தில் மிகுந்த சேஷத்தைப் புசிப்பதாகும் என உபதேசித்தானென்பதேயாம்.

பின்னர் கிருஹஸ்தன் தன்குமாரர்கள் தன் கடமைகளின் முழுபாரத்தையும் வஹிக்கத்தக்க வயது அடைந்ததைக் காணும்பொழுது முதுமைப்பருவத்தின் சின்னங்கள் தனக்குண்டாகும்பொழுது தன்னுடைய புத்திரர்க்குப் புத்திரர், தன் முன் விளையாடக்காணும்பொழுது தானும் தன் மனைவியும் கிருஹத்தில்

தலைமையைப் பிறரிடம் ஒப்பித்துவிட்டு உலக வியாபாரங்களைக் கூடியமட்டில் ஒழிக்கவேண்டிய காலம் சமீபித்துவிடுகிறது. சாந்தமாயும் சிறிது ஏகாந்தமாய் நாட்களைப்படிப்பிலும், பிறர்க்குபகாரமாய் உழைப்பதிலும், சிறியோர் முதலியவர்க்குப் புத்திசொல்லுவதிலும் கழித்து வருதலே இந்நாட்களில் மூன்றும் ஆசிரமானுஷ்டானமாகக் கருதவேண்டியது.

முடிவில் வார்த்திகதசையில் சன்னியாசியின் ஸ்திதியாகும் நான்காமாச்சிரமத்தில் பிரவேசிக்கலாம். இங்குத் தன் அந்தியநாட்களைப் பக்தி தியானமிவைபுரிந்து வருவதில் கழித்துவரவேண்டியது. பின் மரணத்தின் வழியாய்த் தான் இதுவரை உலக வாழ்க்கையை ஒழுங்குடன் நடத்திவந்ததற்குப் பலனாகிய அவ்வுலகவாழ்க்கையில் பிரவேசிக்கிறான்.

---

## பிரமாணங்கள்.

பிர்ம்மசாரி, கிருஹஸ்தன், வானப்பிரஸ்தன், யதி ஆகிய இவ்வெவ்வேறான நான்கு ஆச்சிரமங்களும் கிருஹஸ்தாசிரமத்தினிடத்திலிருந்து உண்டாகின்றன.

மனுஸ்மிருதி vi. 37.

கிரமந்தவறாது ஒரு வேதத்தையாவது இரண்டு வேதங்களையாவது அல்லது வேதங்கள்முழுமையுமாவது அத்தியயனம் பண்ணினபின் பிர்மசரியம் வழுவாமலேகிருஹஸ்தாச்சிரமத்தில்பிரவேசிக்கக்கடவன்.

கிருஹஸ்தன் தன் சரீரத்தில் சுருங்கல், நரை யிவற்றையும் தன் புத்திரனுக்குப் புத்திரனையும் கண்டபின் அரணியத்துக்குச்செல்லக்கடவன்.

ஆயுளின் மூன்றிலொருபாகத்தை வனத்தில் கழித்து விட்டபிறகு சகல சங்கங்களையும் விட்டவனாய் ஆயுளின் நான்காம் பாகத்தில் சந்நியாசியாகச் சஞ்சரிக்கக்கடவன்.

மனுஸ்மிருதி iii. 2. vi. 233.

மனுஸ்மிருதி vi. 37.

வேதங்களைப் படியாமலும், பிரஜையை யுத்பத்தி பண்ணுமலும், யஜ்ஞங்களைச் செய்யாமலும் மோக்ஷத்தை விரும்புகிற த்விஜன் அதோகதியை யடைகிருன்.

மனுஸ்மிருதி ii. 57.

அளவுமீறி யுண்ணுதல், சௌக்கியத்திற்கும், தீர்க்காயுசிற்கும் கெடுதல். சுவர்க்கத்தையடைவதற்கும் இடையூறு விளைவிக்கிறது. புண்ணியமல்லாதது உலகத்தாரால் வெறுக்கப்படுகிறது. ஆதலாலதை நீக்கிக்கொள்ளவேண்டும்.

குருவால் ஏவப்பட்டாலும், ஏவப்படாவிட்டாலும் சிஷ்யன் எப்பொழுதும் படிப்பிலும், குருசேவையிலும் சதாகாலமும் நிற்கவேண்டும்.

லாகிரிவஸ்து, மாம்சம்வாஸனைத்திரவியம் புஷ்பங்களில் மாலை முதலியவை, ரஸங்கள் ஸ்திரீ, ருசியான ஆகாரம் இவற்றைச்சிஷ்யன் நீக்கவேண்டியது. அப்படியே காமம், குரோதம், பேராசை, நர்த்தனம், கீதம், வாத்யம், சூது, பிறர்பேச்சு, பிறர்நிந்தை, பொய் இவற்றையும் நீக்கவேண்டியது.

மனுஸ்மிருதி ii. 191 ; 117. 180.

எவ்விடத்திலும் தனியாகவே சயனித்துக்கொள்ளவேண் டியது : ரேதஸ்ஸைச் செலவழித்தல் கூடாது. கர்மத்தால் ரேதஸ்ஸைச் செலவழிக்கும் மாணுக்கன் தன் பிர்ம்மசரியவிரதத்தை யழித்துவருகிறுன்.

சகல ஜந்துக்களும் எப்படி வாயுவை யாசிரயித்து ஜீவிக்கின்றனவோ அப்படியே சகல ஆச்சிரமங்களுங்கிருஹஸ்தாச்சிரமத்தையே யாசிரயித்து நிற்கின்றன.

இவ்வாச்சிரமங்கள் எல்லாவற்றுள்ளும் வேதச்சுருதியின் ஏற்பாட்டின்படி கிருஹஸ்தனே சிரேஷ்டன். ஏனெனில் கிருஹஸ்தனே மற்ற ஆச்சிரமஸ்தர்களை யாதரிக்கிறவன்.

சகலநதிநதங்களும் சமுத்திரத்தையே நோக்கியோடிச்சென்றடைவதுபோல் சகலவாச்சிரமிகளும் கிருஹஸ்தனிடமே ஆசிரயமாகச்சென்றடைகின்றனர்.

மனுஸ்மிருதி iii. 77. 89. 90.

இவ்விதகருமத்தை எவன் ஸ்வதர்மமென்று பலாபிலாஷையின்றிச் செய்து வருகிறானோ அவனே சந்நியாசியாவன். பின்னை அக்நிசந்தானமற்றும் கருமங்களற்று நிற்பவன் சந்நியாசியாகான்.

பகவத்கீதை iv. 1.

---

## அதிகாரம் 7.

### நான்கு வருணங்கள்.

எண்ணிறந்த ஜன்மங்களடங்கிய ஜீவனதுசம்சார மகா யாத்திரையில் முற்கூறியபடி நான்கு குறிப்பிட்ட ஸ்திதிகள் உண்டு. இவற்றிற்குப் பூர்வீகர் ஜாதிகள், அல்லது வருணங்கள் என்ற பெயரிட்டிருக்கின்றனர். மனுதர்ம சாஸ்திரத்தில் இவை வெவ்வேறான கோஷ்டியின் வகுப்புகளாய்க் கணிக்கப்படுகின்றன.

இந்த ஸ்திதிகள் சர்வகாலத்திற்கும், சகல மானிட வகுப்புகளுக்கும் பொதுவானவை. எக்காலத்திலும் எவ்வகையாரிடத்தும் உள்ளவைகளே. ஆனால் சநாதன தர்மத்திலுள்ள விசேஷம் யாதெனில் இவ்வகுப்புகளைத்தன்னுடைய மனுஷவர்க்கத்திய வியவஹாரத்திற்கும் அடிப்படையாக அது ஏற்படுத்தியிருக்கின்றதே

யாம். இந்த ஸ்திதிகளும் வெளியிலுள்ள ஜாதிகளும் பூர்வகாலங்களில் ஒன்றையொன்று காட்டுவனவாய் ஒற்றுமைப்பட்டிருந்தன. ஒவ்வொரு ஸ்திதியிலுமுள்ள ஜீவர்கள் அந்தந்த ஸ்திதியைச்சேர்ந்த சரீரங்களில் ஜனனத்தை யடைந்துவந்தார்கள். அதனால் கோஷ்டி முழுவதும் திருப்தியும் அபிவிர்த்தியு மடைந்துவந்தது. இந்நாட்களில் அர்ஜுனன் முன் குருக்ஷேத்திரத்தில் கூறியபடியே வர்ணசங்கரம் அல்லது ஜாதிக்கலப்பு இவ்வாரியவர்த்தத்திலும் அதைச் சூழ்ந்திருக்கும் நாடுகளிலும் உண்டாகிவிட்டது. ஒவ்வொரு ஸ்திதியிலுள்ள ஜீவாத்மாக்கள் இதர ஸ்திதியைச் சேர்ந்த சரீரங்களில் ஜனிக்கின்றனர். ஆதலால் முற்காலத்தில் திருப்தியும் அபிவிர்த்தியு மிருந்ததுபோல் இப்பொழுது ஜனங்கள் உள்ளும் வெளியும் ஒற்றுமைப்பட்டிராத குழப்பத்தால் இவர்களின் ஒழுங்கீனமும் அபிவிர்த்தியின்மையும் ஏற்படுகின்றன. இதனினின்றும் சீர்திருத்தத்தை எவ்விதம் வருவிப்பதென்பது வயதுவந்த பிரௌடரான மனிதர் யோசித்து முடிவு செய்யவேண்டியவிஷயமாம். அனுபவமில்லாதசிறுவர் வியவஹரிக்கும் விஷயமன்று. ஆதலால் நாமிங்கு விசாரிக்கவேண்டிய தெல்லாம் ஜாதியாவது யாது? அதன் கருத்தென்ன வென்பதே.

ஸ்திதிகள் நான்குண்டென முன்னமேகூறினோம்.

முதலாவது ஸ்திதியானது ஜீவாத்மாவின் ஆரம்பதசையாகிய சிசுவின் பருவம், இளமை, வாலிபம் இவை யடங்கியது. இந்த ஸ்திதியில் ஜீவன் இளம்பருவத்திற்கு வேண்டிய நற்குணங்களை வெளிப்படுத்துகி

ருன். கீழ்ப்படிதலுள்ளவனுகிப்பிறர்க்குழைத்தல், பொறுமை யிவற்றை யப்பியசிக்கிருன். இவனுக்குப் பொறுப்புகள் மிகச் சொற்பமே. இவனது தர்மம் முழுவதும் சிசுரூஷை யென்பதி லடங்குகின்றது. ஜாதி குழப்பமில்லாத விடத்தில் இவ்வகை ஆரம்ப தசையிலுள்ள ஜீவாத்மாக்கள் கோஷ்டியில் கடைசியான சாதியில் பிறக்கிருர்கள். இவர்கள் கூலிவேலை செய்வோர், தொழிலாளிகள், ஏவல்புரிவோர், முதலிய சகலவித வேலைக்காரர்களுமே யாவார்கள். ஸநாதன தர்மத்தில் இவ்வகையினர் சூத்திர வருணத்தில் ஜனித்து வந்தார்கள். சாதிக் குழப்பமுள்ள இக்காலத்தில் இவ்விளமைப் பருவத்திலுள்ள ஜீவர்கள் இந்தியாவில் சூத்திரஜாதியில் ஜனித்திருப்பவர்களாயினும் சரி, அல்லது இதர தேசங்களில் சூத்திர ஜாதிக்கு அனுகுணமான வகுப்பில் பிறந்திருப்பவர்களாயினும் சரி, திருப்தி சமாதானமுள்ளவர்களாய் ஜகத்துக்கு உபயோகமுள்ளவர்களாய் வசித்து வருகிருர்கள். ஆனல் இக்காலத்தில் விசேஷமாய்ச்சம்பவிக்கிறபடி இவ்வகையினர் உயர்ந்த ஜாதிகளல்லது வகுப்புகளிலாவது ஜனித்தால் இவ்வுயர்ந்தஜாதி வகுப்புக்களின் தர்மங்கள் அல்லது கடமைகளை நிறைவேற்ற யோக்கியதையில்லாமையால் இவர்களால் மற்றவர்க்கு மிகவும் கெடுதி விளைகின்றது. இவர்கள் இந்நிலைமைக்கு அநர்ஹர்களானதால் இவற்றின் மேலான பொறுப்பையும்பாரங்களையும்வஹிக்கச்சக்தியற்றிருக்கின்றனர். இவ்விதமே விசேஷ பரிபாகமுடைய ஜீவர்கள் தாழ்ந்த ஜாதியின் சரீரங்களில் ஜனனத்தை பெறும் பொழுதும் பலசங்கடங்கள் உண்டாகின்றன. இவர்கள் தமது சௌகரியக் குறைவுகளைக் கண்டு மனம்பொ

ருது அதிருப்தியடைந்துகலகம் செய்கின்றனர். ஆனால் உண்மையாய் உயர்ந்த பரிபாகமுடைய எவனும் தனது வெளி நிலைமைகளின் குறைவு நிறைவுக்கு வருத்தமடைதல் ஒவ்வாது. இவன் எச்சரீரத்தில் ஜனனம் கிடைப்பினும் திருப்தியுள்ளவனாயிருப்பான். மத்திய தசையிலுள்ள ஜீவர்கள் சுபாவமாய்த் தங்கள் பாஹ்ய சௌகரியக் குறைவுகளைச் சகியாததுபோலழுகிறார்கள். இவர்களது பரபரப்பையும் அதிருப்தியையும் ஈசுவரன் இக்காலத்தில் ஒழுங்கீனங்களைச் சீர்திருத்தும்பொருட்டு வேண்டிய மாறுதல்களை ஏற்படுத்துவதற்கும் ஜகத் பரிபாகத்தை மேல் நடத்துவதற்கும் கருவியாக உபயோகப்படுத்துகிறார்.

இனி யிரண்டாம் ஸ்திதி ஜீவனது பிரௌடாவஸ்தையில் முற்பாதி யடங்கியது. இப்பொழுது ஜீவன் திரவியத்தைச் சம்பாதிக்கவும் அதை யனுபவித்துச் செலவழிக்கவும், பல தொழில்களை யேற்படுத்தி யவற்றை நடத்திப் பெரும் சொத்துகளைத்தேடி யவற்றைப் பரிபாலித்து விருத்திபண்ணுவதாகிய பொறுப்புகளை நிர்வஹிக்கவும் தகுதியடைகிறான். இவ்வகையினர் தாம் பெருத்த வர்த்தகக் கூட்டத்தாராயும், வியாபாரிகளாயும், பெரும்தொழில்களையேற்படுத்துவோராயும், முதலாளிகளாயும், நாணயசாலை யதிபதிகளாயும், விசாலமான கைத்தொழில் முதலிய வியாபார ஏற்பாடுகளுக்குத் தலைவர்களாயும் ஏற்படுவார்கள். ஸநாதன தர்மத்தின் கோஷ்டியில் இவ்வித ஜீவர்கள் வைசிய ஜாதியில் பிறந்து நாளடைவில் திரவியம் தேடி மேன்மையடைவதல்லாமல் சகலரும் பொதுவாய் க்ஷேமாபிவிர்த்தியடையும்படி செய்வதுவே தமது வருணத்தின்

கடமை அல்லது கருத்து என்றறிந்தொழுகும்படி பழக்கப்பட்டு வந்தனர்.

மூன்றும்ஸ்திதி ஜீவாத்மாவின் பிரௌடதசையில் பிற்பாதியைச் சேர்ந்தது. இப்பொழுது இவன் பொறுப்புகளும் கடமைகளும் நாடு இராஜ்ஜியம் முழுமையும் பரவுகின்றது. இவன் ராஜ்ஜியபாரம்தாங்கத் தகுதியுடையோனுகித்தேசமுழுமையும் க்ஷேமமடையும்பொருட்டு ஸ்வயநலத்தைப்பாராமல் ஆளத்தலைப்படுகிருன். இவனது சக்தியும் வல்லமையும் தன்னை யுயர்த்திக்கொள்ளுவதற்கல்லாமல் பிறரைரக்ஷித்துக்கலகம் முதலியன வாராது ஒழுங்கை நிலைநிறுத்துவதற்குமே யுபயோகப் படுகிறது. இவ்வகையினர் தாம் அரசர்கள், நியாயாதிபதிகள், சட்டநிர்மாண கர்த்தர்கள், யுத்தவீரர்கள் இன்னும் தேசத்தில் ஆளுகைபுரிவோர், ஒழுங்கை நிலை நிறுத்துவோர், முதலினேர்களாம். ஸநாதன தர்மத்தில் இவ்வகையினர் க்ஷத்திரிய ஜாதியில் ஜனனமெடுத்துச் சத்துருவின் கைவசப்படாமல் தேசத்தைக் காப்பாற்றும் பொருட்டுப் போர்புரிதல் முதலிய தர்மங்களைத் தாங்கிவந்தனர்.

இனி நான்காம் ஸ்திதியாவது ஜீவனது முதிர்ச்சியான பரிபாக தசையைச் சேர்ந்தது. இப்பொழுது ஜீவன் உலக பதார்த்தங்களில் முழுமையும் பற்றிழந்து தன்னிலும் தாழ்ந்த சகல ஜீவர்களுக்கும் மித்திரன், புத்திசொல்லுவோன் அல்லது உபகாரியாக ஆகிவிடுகிருன். இவ்வகையினர் தாம், குருமார், மந்திரிகள், மற்றும்சகல உபாத்தியாயர்கள், நூலாசிரியர்கள், சாஸ்திரப்பயிற்சியுள்ளார், கவிகள், தத்துவாராய்ச்சி புரிவோர் முதலியவர். ஸநாதன தர்மகோஷ்டியில் இவ்வித

ஜீவர்கள் பிராம்மண வருணத்தில் ஜனனமடைந்து வந்தனர். இவ்வருணத்தவர் அக்காலங்களில் தாம் ஒன்றையும் வேண்டாது பிறர்பொருட்டுச் சகலத்தையும் தியாகம் செய்யும் சுபாவ முடையோராயிருந்தனர். இந்தியாவில் ஏற்பட்டிருக்கும் ஜாதிகுழப்பத்தால் மிகவும் கெடுதலை யடைந்த வகுப்பு இதுவே. ஏனெனில் தாழ்ந்தோர் கெடுவதைப்பார்க்கிலும் மேலோர் கெடுவது எப்பொழுதும் மிகவும் விசேஷமான தீங்கன்றோ! பிராம்மணசரீரத்தில் ஜனித்திருக்கும் சூத்திர சுபாவமுடைய ஜீவனைவிடத் தேசத்திற்கும் உலகத்திற்கும் வேறு அதிகமான அபாயம் கிடையாது.

இன்னும் இவ்வருணங்களுள் ஒன்றிலுள்ளவர் இதரவருணங்களின் தர்மம், சௌகரியங்களுக்காசைப்பட்டு அவற்றை அனுஷ்டிக்கமுயலுவதாலும் ஒவ்வொரு வருணத்தவரும் தத்தம், கடமைகளைக் கவனியாது தத்தம் உயர்வு பெருமைகளை மட்டும் பாராட்டிவருதலாலுமே பெருந்தீங்கு விளைந்திருக்கின்றது. பிராம்மண க்ஷத்திரியர் தம் வருணங்களின் உயர்வையும் வருணதர்மங்களின் கடினமான மஹிமையுமே பாராட்டித் தமது கடமைகளை நிறைவேற்றிவரக் கூசுகிறார்கள். இதனால் இயற்கையில் இவரிடம் மற்றவர்க்குப் போட்டியும் வெறுப்பும் உண்டாயிருக்கிறது. பூர்வகாலத்தில் இருந்த ஒற்றுமையும் பிரீதியும் போய்விட்டன. ஆதலால் சகல ஜனசமூகங்களையும் ஒழுங்குடன் வாழ்ந்து வரும்படிசெய்யவேண்டிய ஏற்பாடு ஆகிய ஜாதிவியவஹாரம், இக்காலத்தில் மனித கோஷ்டியில் போராட்டம், துவேஷம் இவற்றிற் காஸ்பதமா யிருக்கின்றது. அந்தோ!

இப்பொழுது நமது தேசத்தில் காலாந்தரத்திலாயினும் வருணச்சீர்ப்பாடு ஏற்படுவதற்கு இதைப்படிக்கும் சிறுவர் இம்மட்டில் செய்துவரலாம். அதாவது ஒவ்வொருவனும் தன் ஜாதியின் சுபாவங்களை முயற்சியுடன் அனுஷ்டித்துக் கர்வம், தற்பெருமை, தன் வருணத்தின் உயர்வையே பாராட்டல் இவற்றை நீக்கிவரலேயாம். சூத்திரவருணத்தவன் உழைப்பு, விசுவாசம், சிசுரூஷை இவைகளுக்குப் பெயர் பெற்றவனாக உழைத்து விளங்கவேண்டும். வைசியன் பிரயாசை, சாமர்த்தியம், தானமிவை யமைந்து விளங்க வேண்டும். க்ஷத்திரியன் தைரியம், தயாளம், உறுதி யிக்குணங்களைப்பெற்று நடத்தல் வேண்டும். பிராம்மணன் பொறுமை, வித்தை, பரிசுத்தி, சத்தியம், ஆத்மத்தியாகம் இவற்றிற்குப் பெயர் பெற்றவனாயிருத்தல் வேண்டும். இப்படி வருணங்கள் தத்தம் தர்மங்களைக் கைவிடாது ஒழுகிவருமாயின் சிறிது சிறிதாய்ச் சகல ஜாதிக்கலப்பும் நாளடைவில் விலகிவிடக்கூடுமன்றோ !

---

## பிரமாணங்கள்.

𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍋𑌽𑌸𑍍𑌯 𑌮𑍁𑌖𑌮𑌾
𑌸𑍀𑌦𑍍𑌬𑌾𑌹𑍂 𑌰𑌾𑌜𑌨𑍍𑌯𑌃 𑌕𑍃𑌤𑌃 ।

𑌊𑌰𑍂 𑌤𑌦𑌸𑍍𑌯 𑌯𑌦𑍍𑌵𑍈𑌶𑍍𑌯𑌃
𑌪𑌦𑍍𑌭𑍍𑌯𑌾𑌂 𑌶𑍂𑌦𑍍𑌰𑍋 𑌅𑌜𑌾𑌯𑌤 ॥

ருக்வேதம் X. x. c. 12.

பிராம்மணன் இவனுக்கு முகமானான், க்ஷத்திரியன் பாஹுக்களாக்கப் பட்டான். வைசியன் துடைகளாக்கப்பட்டான், பாதங்களிலிருந்தும் சூத்திரன் உண்டாயினன்.

𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌯 𑌤𑍁 𑌸𑌰𑍍𑌗𑌸𑍍𑌯 𑌗𑍁𑌪𑍍𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 𑌸 𑌮𑌹𑌾𑌦𑍍𑌯𑍁𑌤𑌿𑌃 । 𑌮𑍁𑌖𑌬𑌾𑌹𑍂𑌰𑍁𑌪𑌜𑍍𑌜𑌾𑌨𑌾𑌂 𑌪𑍃𑌥𑌕𑍍𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑍍𑌯𑌕𑌲𑍍𑌪𑌯𑌤𑍍 ॥

அந்த மகா காந்தியையுடைய பிரபுவானவர் சகலசிருஷ்டியின் ரக்ஷணத்தின் பொருட்டு முகம், பாஹு, ஊரு, பாதங்களிலுண்டானவர்களுக்கு வெவ்வேறான கருமங்களை ஏற்படுத்தினர்.

𑌅𑌧𑍍𑌯𑌾𑌪𑌨𑌮𑌧𑍍𑌯𑌯𑌨𑌂 𑌯𑌜𑌨𑌂 𑌯𑌾𑌜𑌨𑌂 𑌤𑌥𑌾 । 𑌦𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌗𑍍𑌰𑌹𑌂 𑌚𑍈𑌵 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌨𑌾𑌮𑌕𑌲𑍍𑌪𑌯𑌤𑍍 ।

வேதம் ஓதல் ஓதுவித்தல், யஜனம் செய்தல், செய்வித்தல், தானம் செய்தல், தானம் வாங்கல் இவற்றைப் பிராமணர்களுக்கு ஏற்படுத்தினர்.

𑌪𑍍𑌰𑌜𑌾𑌨𑌾𑌂 𑌰𑌕𑍍𑌷𑌣𑌂 𑌦𑌾𑌨𑌮𑌿𑌜𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌯𑌨𑌮𑍇𑌵 𑌚 । 𑌵𑌿𑌷𑌯𑍇𑌷𑍍𑌵𑌪𑍍𑌰𑌸𑌕𑍍𑌤𑌿𑌶𑍍𑌚 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌸𑌮𑌾𑌸𑌤𑌃 ॥

பிரஜைகளை ரக்ஷித்தல், தானம்செய்தல், யாகம்செய்தல், வேதமோதல், விஷயங்களிலழுந்தாமை யிவற்றை க்ஷத்திரியனுக்கு அமைத்தார்.

𑌪𑌶𑍂𑌨𑌾𑌂 𑌰𑌕𑍍𑌷𑌣𑌂 𑌦𑌾𑌨𑌮𑌿𑌜𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌯𑌨𑌮𑍇𑌵 𑌚। 𑌵𑌣𑌿𑌕𑍍𑌪𑌥𑌂 𑌕𑍁𑌸𑍀𑌦𑌂 𑌚 𑌵𑍈𑌶𑍍𑌯𑌸𑍍𑌯 𑌕𑍃𑌷𑌿𑌮𑍇𑌵 𑌚 ।

பசுக்களைக் காப்பாற்றல், தானம்செய்தல், வேதமோதல், வாணிபம், நாணயமாற்றல், பயிரிடுதல் இவை வைசியனுக்கு அமைக்கப்பட்டன.

𑌏𑌕𑌮𑍇𑌵 𑌤𑍁 𑌶𑍂𑌦𑍍𑌰𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌮𑌾𑌦𑌿𑌶𑌤𑍍। 𑌏𑌤𑍇𑌷𑌾𑌮𑍇𑌵 𑌵𑌰𑍍𑌣𑌾𑌨𑌾𑌂 𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌾𑌮𑌨𑌸𑍂𑌯𑌯𑌾 ॥

மனுஸ்மிருதி i. 87. 91.

சூத்திரனுக்கு இதர வருணங்களுக்கு வெறுப்பின்றிச் சேவைபுரிதலாகிய ஒரேயொரு கருமத்தையே பிரபுவானவர் ஆக்ஞாபித்தார்.

𑌯𑌸𑍍𑌯 𑌯𑌲𑍍𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌪𑍁𑌂𑌸𑍋 𑌵𑌰𑍍𑌣𑌾𑌭𑌿𑌵𑍍𑌯𑌞𑍍𑌜𑌕𑌮𑍍।
𑌯𑌦𑌨𑍍𑌯𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌦𑍃𑌶𑍍𑌯𑍇𑌤 𑌤𑌤𑍍𑌤𑍇𑌨𑍈𑌵 𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌶𑍇𑌤𑍍 ॥

ஜாதியை விளக்கக்கூடியதாய் எவ்வெந்த லக்ஷணம் கூறப்பட்டிருக்கிறதோ அவ்வது அவ்வந்த ஜாதியைத்தவிர இதர ஜாதியிலும் காணப்படுமாயின் அந்த லக்ஷணத்திற்குச் சுபாவமாயுரிய ஜாதியாலேயே அஃது குறிப்பிடப்படவேண்டும்.

நயொநிநாபிஸம்ஸ்காரொ
நஶ்ருதம்நசஸந்ததி꞉ । கார
ணாநி த்விஜத்வஸ்ய வ்ருத்தமெவ
து காரணம் ।

மஹாபாரதம் வருணபருவம்
c. c. x. iii. 108.

பிறப்பாவது, சம ஸ்காரமாவது கேள்விகளாவது, சந்ததியாவது துவிஜனுதற்குக் காரணமாகாது; நடத்தையே காரணமாகும்.

ஸத்யம்தாநம்க்ஷமாஶீல
மாந்ருஶம்ஸ்யம்தபொக்ருணா ।
த்ருஶ்யந்தெயத்ரநாகெந்த்ர
ஸ ப்ராஹ்மண இதி ஸ்ம்ருத꞉ ।

சத்தியம், தானம், க்ஷமை, நற்சீலம், மிருதுசுபாவம், தபஸ், கருணை யிவை எங்கு விளங்குகின்றனவோ அவன் பிராம்மணனெனக் கூறப்படுகிறான்.

ஶூத்ரெதுயத்பவெல்லக்ஷ்மத்வி
ஜெதச்சநவித்யதெ ।
நவைஶூத்ரொபவெச்சூ
த்ரொப்ராஹ்மணொநச ப்ரா
ஹ்மண꞉ ॥
யத்ரைதல்லக்ஷ்யதெஸர்ப
வ்ருத்தம்ஸப்ராஹ்மண꞉ஸ்ம்ருத꞉ ।
யத்ரைதந்நபவெத்ஸர்ப
தம் ஶூத்ரமிதிநிர்திஶெத் ।

மஹாபாரதம் வருணபர்வம்
ci. XXX. 21. 25. 26.

இக்குணங்கள் சூத்திரனிடம், காணப்படினும், துவிஜனிடமில்லாதிருந்தாலும் அந்த சூத்திரன் சூத்திரனுகான், பிராமணனும் பிராமணனன்று. ஓ! சர்ப்பமே! இந்த நடத்தையுள்ள இடமே பிராமணன். இதில்லாத இடமே சூத்திரன் என்று நிச்சயித்தல் வேண்டும்.

𑌆𑌚𑌾𑌰𑌹𑍀𑌨𑌂 𑌨 𑌪𑍁𑌨𑌨𑍍𑌤𑌿
𑌵𑍇𑌦𑌾 𑌯𑌦𑍍𑌯𑌪𑍍𑌯𑌧𑍀𑌤𑌾𑌃 𑌸𑌹𑌷
𑌡𑍍𑌭𑌿𑌰𑌙𑍍𑌗𑍈𑌃 । 𑌛𑌨𑍍𑌦𑌾𑌂𑌸𑍍𑌯𑍇𑌨𑌂
𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌕𑌾𑌲𑍇 𑌤𑍍𑌯𑌜𑌨𑍍𑌤𑌿 𑌨𑍀𑌡𑌂 𑌶
𑌕𑍁𑌨𑍍𑌤𑌾 𑌇𑌵 𑌜𑌾𑌤𑌪𑌕𑍍𑌷𑌾𑌃 ॥

ஆறு அங்கங்களோடும் செவ்வையாய்ப் படிக்கப்பட்டாலும் ஆசாரமற்றவர்களை வேதங்கள் பரிசுத்தப் படுத்தா. சிறகு முளைத்த பறவைகள் எவ்விதம் கூட்டைவிட்டு வெளியேறி விடுகின்றனவோ அவ்விதமே மரணசமயத்தில் வேதங்கள்) இவனுக்குதவாமல்) இவனைத்தியாகம் செய்துவிடுகின்றன.

𑌆𑌚𑌾𑌰𑌹𑍀𑌨𑌸𑍍𑌯 𑌤𑍁 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮
𑌣𑌸𑍍𑌯 𑌵𑍇𑌦𑌾𑌃 𑌷𑌡𑌙𑍍𑌗𑌾𑌸𑍍𑌤𑍍𑌵𑌖𑌿𑌲𑌾
𑌸𑌯𑌜𑍍𑌞𑌾𑌃 ।

𑌕𑌾𑌂 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌮𑍁𑌤𑍍𑌪𑌾𑌦𑌯𑌿𑌤𑍁𑌂 𑌸𑌮
𑌰𑍍𑌥𑌾 𑌅𑌨𑍍𑌧𑌸𑍍𑌯 𑌦𑌾𑌰𑌾 𑌇𑌵 𑌦𑌰𑍍𑌶
𑌨𑍀𑌯𑌾𑌃 ॥

ரூபலாவண்ய முள்ள ஒரு ஸ்திரீ குருடன் திருஷ்டிக்கு எப்படியோ அப்படி ஆசாரஹீனனான பிராம்மணனுக்கு அங்கங்கள் யஜ்ஞங்களுடன் அப்பியாசிக்கப்பட்ட வேதங்களும் என்னபிரீதியை யுண்டுபண்ணக் கூடும்?

# ஸநாதன தர்மம்.



## 3-ம் பாகம்.

### தர்மாதர்ம விசாரணைகள்.

### அதிகாரம் 1.

#### தர்மாதர்ம விசாரம்.

அறிவின் விஷயங்கள் பல விசாரித்து ஒழுங்காய்த் தொகுக்கப்படின் அவற்றிற்கு சாஸ்திரம் என்றுபெயர். சில விஷயங்கள் மட்டும் சேர்ந்துள்ளது சாஸ்திரமாகாது. இவ்விஷயங்கள் ஒழுங்கான ஏற்பாட்டில் ஒன்றிற்கொன்றுள்ள சம்பந்தங்களின் விபரங்களுடனும் இச்சம்பந்தங்களின் லக்ஷணங்களுடனும் விவரிக்கப்பட்டால் மட்டும் சாஸ்திரமாகும். "நீதிசாஸ்திரத்தைப்பற்றிய" என்பது, நமது நடத்தையின் ஒழுங்கை விரிப்பது என்று அர்த்தம், அதாவது பகுத்தறிவுடைய மானிடர் தம்முள் ஒருவரைநோக்கியொருவரும் இதர ஜந்துக்களை நோக்கியும் நடந்துகொள்ளவேண்டிய வழியல்லது கிரமத்தை விரிப்பது. ஆதலால் நீதியை விசாரிக்கும் சாஸ்திரமென்பது கேவலம் சில நற்குணங்களையும் தீய குணங்களையும் இன்ன

வையென எடுத்துக்காட்டும் படிப்பு என்பது கருத் தன்று. பின்னை யாதோவெனின் நமது நடத்தைகளைப் பற்றிய அநேக விஷயங்களை ஒழுங்காய் அவை யொவ்வொன்றிற்கும் மற்றவற்றோடுள்ள சம்பந்தங்களும் இச்சம்பந்தங்களின் லக்ஷணங்களும் விளங்கும்படி முறைப்படி செய்யப்படும் விசாரணைகளேயாம்.

இந்நீதிக்கு இன்னமொரு பெயராவதுதர்மம் அல்லது நன்னடத்தை யென்பதாம். இனி எது தர்மமென்று அறிவதற்குமனிதனையும் அவனைச்சூழ்ந்திருக்கும் பதார்த்தங்களையும் சிறிது இவ்விடத்தில் நாம் விசாரித்தறிந்து கொள்ளவேண்டும்.

தர்மம் அல்லது நன்னடக்கையின் உபயோகமாவது சகல ஜந்துக்களும் க்ஷேமத்தையடைந்து வாழும்படிசெய்தலேயாம். இது நன்னடத்தையின் சாஸ்திரத்தால்மனிதனுக்கு உலகில்சகல வஸ்துக்களோடும்ஒத்து வாழவேண்டிய வழியைக்காட்டுவதால் சித்திக்கின்றது. ஈசுவரன் அன்பின் உருவேயாதலால் தனது பிரபஞ்ச முழுவதும்க்ஷேமத்துடன்வாழவேண்டுமென்னுமிச்சை கொண்டு அவ்விதம் பிரபஞ்சமுழுவதும் காலக்கிரமத்தில் க்ஷேமமடையும்படி செய்கிறார். இதனால் நியாயமான எவ்விஷயமும் எந்த சமயத்திலும்சுககரமானதே யென்றும் அக்கிரமமானது எதுவும் எச்சமயத்திலும் துக்ககரமானதே யென்றும் அர்த்தங்கொள்ளக்கூடாது. பின்னை யாதோவெனின்முடிவில் சாசுவதமாகிய சுகமான மோக்ஷத்தை அதாவதுஈசுவரனோடு ஐக்கியப்படுதலாகும் பரமானந்தத்தைத்தரும் நடத்தையே நல்லதென்பது பொருளாகக் கொள்ளல் வேண்டும். வண்

டியின் சக்கரங்கள் தம்மையிழுத்துச்செல்லும் எருதை நிச்சயமாய்ப் பின்பற்றி வருவதைப்போல் பாவத்தை யொட்டித் துக்கமும் சம்பவிக்கின்றது. அவ்வித மே நன்னடத்தையைச் சுகமும் பின்பற்றுகின்றது. பாபகிருத்தியங்களின் பயன் தற்சமயத்தில் அனுபவத் திற்கு ஆநந்தமாயிருந்தாலும் அதுவிஷமே; வருங்கால த்தில் மிகவும் துக்ககரமான பலனை வருவிக்கின்றது; சிலசமயங்களில் வெகுநாள் நிற்கும்வியாதியையும் விளை விக்கின்றது. அற்பசுகத்தை யுத்தேசித்துப் பாபத்தைச் செய்கிற ஒரு சிறுவன், ருசியுள்ளதும் மனதைக் கவ ரத்தகுக வர்ணங்களை யுடையதுமான விஷக்கனிகளைப் பறித்துத்தின்று உடனே அன்று சாயந்திரமே வலி யால் துடித்து வருந்தும் ஒருசிறு குழந்தைக்கு ஒப்பா வான். ஆதலால் நீதியை யுபதேசிக்கும் எவ்வொரு உபாத்தியாயரும் ஒவ்வொரு பாபத்தையும் விஷமென் றே வற்புறுத்திக் கூறல்வேண்டும்.

## பிரமாணங்கள்.

| | |
|---|---|
| ஆசாரலக்ஷணோ தர்ம: ஸந்தஶ்சாசாரலக்ஷணா: \| | தர்மம் ஆசாரத்தை லக்ஷணமாக வுடையது, பெரியோர் ஆசாரத்தை லக்ஷணமாகக் கொண்டவர்கள்; சகல வுபதேசங்களிலும் ஆசாரமே சிரேஷ்டமென்று கூறப்பட்டிருக்கின்றது. தர்மமானது ஆசாரத்திலுண்டாகின்றது. |
| ஆகமாநாம் ஹி ஸர்வேஷாம் ஆசார: ஶ்ரேஷ்ட உச்யதே \|\| | |
| ஆசாரப்ரபவோ தர்மோ தர்மாதாயுர்விவர்த்ததே \| | |

𑌆𑌚𑌾𑌰𑌾𑌲𑍍𑌲𑌭𑌤𑍇 𑌹𑍍𑌯𑌾𑌯𑍁𑌰𑌾𑌚𑌾-
𑌰𑌾𑌲𑍍𑌲𑌭𑌤𑍇 𑌶𑍍𑌰𑌿𑌯𑌮𑍍 ॥

𑌆𑌚𑌾𑌰𑌾𑌤𑍍𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿
𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 𑌚𑍇𑌹 𑌚 ।

(மகாபாரதம் அனுசாஸநபருவம்) iv.

𑌆𑌚𑌾𑌰𑌃 𑌪𑌰𑌮𑍋 𑌧𑌰𑍍𑌮𑌃 𑌶𑍍𑌰𑍁-
𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌸𑍍𑌮𑌾𑌰𑍍𑌤 𑌏𑌵 𑌚 ।

𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌸𑌦𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌨𑌿-
𑌤𑍍𑌯𑌂 𑌸𑍍𑌯𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑌵𑌾𑌨𑍍𑌦𑍍𑌵𑌿𑌜𑌃 ॥

𑌏𑌵𑌮𑌾𑌚𑌾𑌰𑌤𑍋 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾
𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌮𑍁𑌨𑌯𑍋 𑌗𑌤𑌿𑌮𑍍 ।

𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌤𑌪𑌸𑍋 𑌮𑍂𑌲𑌮𑌾-
𑌚𑌾𑌰𑌂 𑌜𑌗𑍃𑌹𑍁𑌃 𑌪𑌰𑌮𑍍 ॥

மனுஸ்மிருதி I. 108. 110.

தர்மத்தால் ஆயுள் வர்த்திக்கின்றது. ஆதலின் ஆசாரத்தால் ஒரு புருஷன் ஆயுளையடைகிறான். ஆசாரத்தால் மேன்மையையு மடைகிறான். ஆசாரத்தால் இவ்வுலகத்திலும் அவ்வுலகங்களிலும் கீர்த்தியைப் பெருகிறான்.

சுருதியிலும் ஸ்மிருதியிலும்ஆசாரமேமிக வுயர்ந்த தர்மமென்று கூறப்பட்டிருக்கின்றது. ஆதலின் ஆத்மஞானமுள்ள துவிஜன் எப்பொழுதும் ஆசாரத்திலேயே தவறாது நிற்றல்வேண்டும்.

இவ்விதம் ஆசாரத்தினின்றுமே தர்மம் பிரவிர்த்திப்பதைக் கண்ட மேலோர் சகல தபசுக்கும் ஆசாரமே மூலமெனக் கிரஹித்தார்கள்.

ஆசாரம்=நன்னடக்கை.

𑌪𑍍𑌰𑌭𑌵𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂
𑌧𑌰𑍍𑌮𑌪𑍍𑌰𑌵𑌚𑌨𑌂 𑌕𑍃𑌤𑌮𑍍 ।

𑌯𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌭𑌵𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌸
𑌧𑌰𑍍𑌮 𑌇𑌤𑌿 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃 ॥

சகல பூதங்களினுடைய க்ஷேமத்துக்காகத் தர்மம் வசனிக்கப்பட்டது. ஆதலால்எது சகல பிராணிகளின் க்ஷேமத்தை வருவிக்குமோ, அதுவே தர்மம். இதுதான் நிச்சயம்.

𑌧𑌾𑌰𑌣𑌾𑌦𑍍𑌧𑌰𑍍𑌮𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌰𑍍𑌧
𑌰𑍍𑌮𑍇𑌣 𑌵𑌿𑌧𑍃𑌤𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 ।

𑌯𑌃 𑌸𑍍𑌯𑌾𑌦𑍍𑌧𑌾𑌰𑌣𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌸
𑌧𑌰𑍍𑌮 𑌇𑌤𑌿 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃 ॥

சகலத்தையும் தரிப்பதால் தர்மமென்றுகூறப்படுகிறதால் சகலபிராணிகளும் தர்மத்தாலேயே நிலைபெறுகிறார்கள். ஆதலால் எது சகலத்தையும் தாரணம் பண்ணுமோ அதுவே தர்மமென்பது நிர்ணயம்.

சர்வ பூதங்களுக்கும் அஹிம்சை ஏற்படும் பொருட்டுத்தர்மம் பிரவசனிக்கப்பட்டது. ஆதலால் எது அஹிம்சையோடிருக்குமோ அதுவே தர்மமென்பது நிச்சயம்.

ஸர்வேஷாம்ய: ஸுஹ்ருந்நித்யம் ஸர்வேஷாம்சஹிதே ரத: ।

கர்மணா மனஸா வாசா ஸ தர்மம்வேத ஜாஜலே ॥

மஹாபாரதம் சாந்திபருவம் lxxxviii.

சகல ஜந்துக்களுக்கும் எவன் சதாகால மும்மித்திரனே, சகலருடைய ஹிதத்தையே மனோவாக்கு காயங்களால் நாடுகின்றானோ அவனே தர்மத்தை யறிந்தவன் ஓ! ஜாஜலியே!

நகுர்யாத்கர்ஹிசித்ஸங்கம் தமஸ்தீவ்ரம் திதீரிஷு: ।

தர்மார்த்தகாமமோக்ஷாணாம் யதத்யந்தவிகாதகம் ॥

மிகவடர்ந்த தாகிய (சம்சாரரூப) அந்தகாரத்தைத்தாண்ட விரும்புவோன் தர்மார்த்தகாமமோக்ஷங்களுக்கு மிகவுமிடையூறான சேர்க்கைகளொன்றையும் செய்துகொள்ளக் கூடாது.

தத்ராபி மோக்ஷ ஏவார்த்த ஆத்யந்திகதயேஷ்யதே ।

த்ரைவர்க்யோர்த்தோ யதோ நித்யம் க்ருதாந்தபயஸம்யுத: ॥

விஷ்ணுபாகவதம். ix. xxi. 34. 35.

இவற்றுள்ளும்மோக்ஷமாகிய புருஷார்த்தமே முடிவாய் ஜனங்களால் விரும்பப்படுகின்றது; ஏனெனில் மற்றையமூன்றும் எப்பொழுதும் சகலத்திற்கு முடிவை வருவிக்கும் யமனது பீதியையுடையனவாகின்றன.

𑌧𑌰𑍍𑌮𑌂 𑌚𑌾𑌰𑍍𑌥𑌂 𑌚 𑌕𑌾𑌮𑌂 𑌚 𑌯
𑌥𑌾𑌵𑌦𑍍𑌵𑌦𑌤𑌾𑌂 𑌵𑌰 ।

𑌵𑌿𑌭𑌜𑍍𑌯 𑌕𑌾𑌲𑍇 𑌕𑌾𑌲𑌜𑍍𑌞𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾
𑌨𑍍 𑌸𑍇𑌵𑍇𑌤 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌃 ॥

மஹாபாரதம் வனபருவம் XXX iii.

ஓ! வக்தாக்களுள்ளும் முதலோனே! காலங்களையறிந்த புத்திமான் தர்மம், அர்த்தம், காம மிவற்றி லொவ்வொன்றையும் ஒழுங்காய்த்தனதுகாலத்தைப்பங்கிட்டுக் கொண்டு அனுபவிப்பான். ஆனால், அரசனே! சுகத்தைவிரும்புவோர்க்கெல்லாம் மோக்ஷந்தான் மிகவும் சிலாக்கியமானது.

---

## அதிகாரம் 2.

### மதங்களின்படி (தர்மாதர்ம விசாரத்திற்கு) நீதிகளுக்கு மூலம்.

சர்வ மதங்களினுடையவும் பிரதமோபதேசமாவது 'ஆத்மா ஏகம்' என்பதுவேயென முன்னமேகூறினோம். வெளிப்பார்வைக்கு அநேகம் ஆத்மாக்கள் இருப்பதுபோற் றோன்றினும் அவையாவும் ஏகவஸ்துவின் பிரதிபிம்பங்கள் அல்லது அம்சங்களே. இவ்வாத்மாக்களின் தோற்றம் க்ஷணிகம், அவைகளின் ஐக்கியம் சாசுவதமானது. ஒரு குளத்தில் அநேகம் பானைகளை யமிழ்த்தினால் வெவ்வேறான அவை யொவ்வொன்றிலும் நிறைந்திருக்கும் ஜலம் ஏகமேயன்றி பின்னமன்றன்றோ. ஏகமாகிய வஸ்துவில் கணக்கற்ற வுபாதி

கள் காணப்படுகின்றன. ஆயினும் அவற்றுள் நிரம்பியிருக்கும் சைதன்யம் ஒன்றேயாம். மதங்களின் இவ்வாதியான வுபதேசமே சர்வநீதிகளுக்கும் மூலமாம்.

ஆதலால் நீதிகளைப்பற்றிய இவ்விசாரத்தில் மேற்கூறிய ஆத்மைக்கியத்தை ஒப்புக்கொள்ளவேண்டியது. இதுமட்டும் போதாது ஏனெனில் ஐக்கியபாவனையில் நீ நானென்னும் பேதம் கிடையாது. இந்நீதிகளைப்பற்றிப் பேசுமிடத்திலோ நீ நான் என்னுமிருவருக்குமுள்ளசம்பந்தங்களைப்பேசாமல் முடியாது. ஆதலால் அநாத்மாவின் பேதங்களையும் நாம் ஒப்புக்கொள்ளவேண்டும். அதாவது கணக்கற்றவுபாதிகள் பிரகிருதியில் உண்டென்றும் அவை யொவ்வொன்றிலும் ஏகமாகிய ஆத்மாவின் ஒவ்வோர் பாகம் அல்லது அம்சம் பிரகாசிக்கின்றதென்றும் நாமறிதல்வேண்டும். ஆதலின் எண்ணிறைந்த சரீரங்கள் மனங்கள் இருக்கின்றன. இவை யொன்றையொன்று சம்பந்திக்கின்றன. இவ்வநந்த உபாதிகளின் பரஸ்பர சம்பந்தங்கள் ஒழுங்கும் நேர்மையும் பொருந்தி நடைபெறவேண்டுமாயின், இவற்றுள் ஒவ்வொன்றும் இவ்வுபாதிகளாகிய அநந்த பேதங்களும் மூலத்தில் ஒன்றேயாதலால், சகலத்திற்கும் உபகாரமாயிருக்கும்வியவஹாரமே இவற்றுள் ஒவ்வொன்றுக்கும் உபகாரமாமென்றும், எவர்க்காவது அபகாரமாயிருக்குங்காரியம் சகலருக்குமபகாரமேயாகுமென்றும்நம்பி நாம் பிறரைநோக்கி நடந்துவருதலின்றியமையாதது. ஆதலால் பிறருக்கு நாம் ஒருதீங்குவிளைவிக்கும்பொழுது நமக்கே தீங்கை விளைவித்துக் கொள்ளுகிறவர்களாகிறோம். ஒரே சரீரத்தைச்சேர்ந்த கை கால் இவற்றுள்

கையானது காலைக் காயப்படுத்துமானால் காலிலேதான் ரக்தம் வெளிப்படும் கையில் காணாது ; ஆனால் சிறிது நேரத்திற்குள் சரீரத்தில் ரக்தம் குறைவதனால் கை சோர்ந்துபோகும். ஏனெனில் சரீரத்தில் ரத்தமானது எல்லா பாகங்களிலும் சஞ்சரித்துலாவுகின்றது. சரீரமுழுவதிலும் பரவிவரும் ரக்தம் ஒன்றேயன்றி அனேகமன்று. இதுபோலவே மானிடர்க்குள்ளும் ஒருவன் மற்றொருவனைத் துன்புறுத்துவனாயின் துன்பம் விளைவித்தவனும் துன்பமடைந்தவனைப் போலவே சிறிதுகாலங் கழித்தபின்னாவது அவஸ்தைப்படுகிறான் என்பதில் ஆக்ஷேபமில்லை.

இதுதான் நமது அறிவால் ஊகிக்கக்கூடியமட்டில் ஊகித்துப்பார்த்தால் சகல நன்னடக்கைக்குமாதாரமாகும். சிறுவர்கள் ஆரம்பத்தில் இந்நன்னடக்கைக்குரிய விதிகளை, சாஸ்திரங்களில் உள்ள, ரிஷிகள் சாதுக்களுடைய வசனங்களின் பிரமாணத்தால் அங்கீகரித்துக்கொள்ளவேண்டும். ஏனெனில் இவ்வரிய விஷயங்களைத்தாமே சிந்தித்துத் தெளிவதற்கு ஏற்ற சாவகாசமானது சக்தியாவது இவர்களுக்குக் கிடையாது. பின்னர் வயதுவந்தபின் இச்சநாதனதர்ம சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கும் தர்மநீதிகளைத் தாமே தமது யுக்தியை புபயோகித்து யுக்தாயுக்தங்களை அறிந்துகொள்ளக்கூடியவராவார்.

இந்த ஏகமாகிய ஆத்மா சர்வ பதார்த்தங்களிலும் நிரம்பியிருக்கின்றது. ஒவ்வொரு ஜீவாத்மாவும் அதன் ஓர் அம்சமே. இக்கருத்துமட்டும் ஒவ்வொருவருடைய ஹிருதயத்திலும் ஆழ்ந்து பதிந்திருத்தல்வேண்டி

யது. ஒவ்வொருவனும் தான்பிறரைத்துன்புறுத்துவதா லதனுல் தனக்கேதுன்பத்தை வருவித்துக்கொள்ளுகிருனெனவும் அறிந்துகொள்ளவேண்டியது. ஸ்ரீ கிருஷ்ணபகவான் கீதையிலடியில்வருமாறுபதேசித்திருக்கின்ருர். "ஓ! குடாகேசனே! நானே சகலபூத ஹிருதயங்களிலும் வசிக்கும் ஆத்மா, நானே சகல பூதங்களின் ஆதியும், மத்தியமும், அந்தமும்."

## பிரமாணங்கள்.

𑌏𑌕𑍋 𑌦𑍇𑌵𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌗𑍂𑌢𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑍀 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 ।

𑌕𑌰𑍍𑌮𑌾𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌧𑌿𑌵𑌾𑌸𑌃 𑌸𑌾𑌕𑍍𑌷𑍀 𑌚𑍇𑌤𑌾 𑌕𑍇𑌵𑌲𑍋 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌶𑍍𑌚 ॥

சுவேதா சுவதரோபநிஷத் Vi. 2.

ஒரே கடவுள் சகல பூதங்களிலும் மறைந்திருக்கின்ருர். யாவற்றினுள்ளும் பரவி எவற்றிற்கும் அந்தராத்மாவாய் நிற்கிருர். சகல கிரியைகட்கு மதிபதியும் சர்வ பூதங்கட்கு முடிவான இருப்பிடமும் அவரே. சகலத்திற்கும் சாக்ஷியும், குணங்கள், எல்லை யிவைகடந்த சைதனிய மும் அவரே.

𑌏𑌕𑌸𑍍𑌤𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 𑌰𑍂𑌪𑌂𑌰𑍂𑌪𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌰𑍂𑌪𑍋 𑌬𑌹𑌿𑌶𑍍𑌚 ॥

கடோபநிஷத் V-10.

இஃது ஒன்றே சர்வ பூதங்களுக்கு மந்தராத்மாவாய் ஒவ்வொரு ரூபத்திற்கும் தனித்தனியான ரூபமுடையதாயிற்று.

யஸ்து ஸர்வாணி பூதாந்யா
த்மந்யேவாநுபஶ்யதி ।

ஸர்வபூதேஷு சாத்மாநம்
ததோ ந விஜுகுப்ஸதே ॥

யஸ்மிந் ஸர்வாணி பூதாந்யா
த்மைவாபூத்விஜாநத: ।

தத்ர கோ மோஹ: க: ஶோக:
ஏகத்வமநுபஶ்யத: ॥

ஈசோபநிஷத் 6. 7.

• பகவத்கீதை Vi-29.

எவன் தன்னிடத்தில் சகல பூதங்களையும் பார்க்கிறானோ அப்படியே தன்னைச் சகல பூதங்களி னிடத்தும் பார்க்கிறான். அவன் எதையும்கண்டு துவேஷிக்கிறதில்லை. எந்த ஸ்திதியில் சகல வஸ்துக்களுக்கும் ஒன்றென்பதைத் தரிசிக்கும் ஞானிக்குச் சகல வஸ்துக்களுமனுமான மாகவே யாகின்றனவோ, அந்நிலைமையில் மோஹமேது? சோகமேது ?

யோகத்தையடைந்த ஆத்மாவையுடையவொருவன் எவற்றினும் சமதிருஷ்டி யுடையோனாகித்தன்னைச்சகல பூதங்களிலும் சகல பூதங்களையும்தன்னிடத்திலும் காண்கிறான்.

---

## அதிகாரம் 3.

### தர்மாதர்மம்.

தர்மம் அதர்மம் ஆகிய இவற்றைப்பற்றிப் பேசாதவர் ஒருவருமில்லை. ஆனால் தர்மமாவது யாது அதர்மமாவது யாது என உசாவினால் இப்பதங்களால் தாம்

கொள்ளும் கருத்துக்க ளிவையென்று காட்டத்துணி வார் எவரும் இல்லை. இதைச்சற்று விசாரிப்போம்.

நமது பரிபாகம் விசேஷமாய்த் திரிலோகியில் தான் நடந்தேறுகிறதென்பதை முன்னமேகண்டோம். இத்திரிலோகி பிர்மாவினல் சிருஷ்டிக்கப்பட்டு விஷ்ணுவால் பரிபாலிக்கப்பட்டுச் சிவனல் அழிக்கப்படுகிறதென்றும் நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். இப்பொழுது நூதனமாய் ஒரு திரிலோகி சிருஷ்டிக்கப்படப் போகிறதாய்ப் பாவித்துக்கொள்ளுவோம். இது சைதன்யம் அந்தர்முகத்திலிருந்து பகிர்முகப்பட்டு வருதலேயாம். முதலில் எண்ணிறந்த ரூபங்கள் தோன்றுகின்றன. இவை வரவரப்பின்னங்களாகி நாளடைவில் தனித்தனி வ்யக்திகளாய் ஏற்படுகின்றன. இவை வெளியுலகின் அனுபவங்களைக் கிரஹிப்பதால் விருத்தியடைகின்றன. பகிருலகினின்றும் பதார்த்தங்களைக்கிரஹித்துத்தம் சரீரங்களில் சேர்த்து தமதாக்கிக்கொண்டு இச்சரீரங்களையும் அபிவிர்த்தியடையச்செய்துவருகின்றன. இது சைதன்யத்தின் பகிர்முகாவஸ்தை யல்லது பிரவிர்த்தி மார்க்கம் என்னப்படுகின்றது. இம்மார்க்கத்தில் ஜீவாத்மா வெளியுலகின் அனுபவங்களைக் கூடியமட்டில் கிரஹித்து 'நான்' எனும் அறிவைத் திடமாய் ஸ்தாபித்துக்கொண்டு தன்னறிவுடையோனுகி விடுகிறன். அம்மார்க்கத்தின் முடிவில், தான் ஈசுவரனது ஓர் அம்சமே தவிர வேறன்று என்றும், தன்னிடமுள்ள சகல சக்திகளையும் எல்லாம் அடங்கியபேரறிவாகியகடவுளின் ஆக்ஞையல்லது சங்கல்பத்துக் கிணங்கியதன் ஓர் பாகமே தானெனும் அறிவோடு உபயோகித்துவந்தாலொழியத்

தான் சுகமடைவது முடியாதென்றும் அறிந்துகொள்ளுகிறான். இப்பொழுது உலகிற்றோன்றும் சகல பேதங்களிலும் விளங்கும் ஐக்கியத்தை யுணர்ந்து, தானெனு மற்ப வகங்காரத் தன்மையை நீக்கி, சகல பிரபஞ்சைக்கியத்தை அபரோக்ஷமாய் அனுபவிக்க முயலுகிறான். இப்பொழுதுதன்னிலும்தாழ்ந்தோர்க்குத்தன்னிடமுள்ளவற்றில் தான்வணங்குகிறான். அதாவதுதனது மனது சரீரங்களில் தான் சேகரித்து வைத்திருக்கும் அனுபவ முதலியவற்றில் பிரசரீரங்களிலிருக்கும் தனக்கே உதவுகிறான். இது சம்ஸாரத்தினின்றும் திரும்பி வரும் மார்க்கமென்று பொருள்தரும் நிவிருத்திமார்க்க மென்னப்படும். இம்மார்க்கத்தில் ஜீவன் சகல பிரபஞ்சத்தோடும் தனது ஐக்கியத்தை யுணர்ந்து தனது பல பொருள் முதலிய யாவையும் பிறர்பொருட்டுபயோகிப்பதால் இவ்வைக்கியத்தை யபரோக்ஷமாய் அனுபவிக்க முயலுகிறான்.

இவ்விரண்டு மார்க்கங்களும் சேர்ந்து ஜகத் பரிபாகமாகின்றது. இப்பரிபாகத்தின்வழியாக ஈசுவரன் விஷ்ணுமூர்த்தத்தைத்தரித்துபிரபஞ்சத்தை நடத்துகிறார். இவ்வீசுவரனது இச்சைக்கு அநுகூலமாய் நடப்பதே தர்மம். அதற்கு பிரதிகூலமான நடத்தையே அதர்மமாகும்.

இப்பொழுது உலகம் பிரவிர்த்தி மார்க்கத்தை விட்டு நிவிர்த்தி மார்க்கத்தில் திரும்பும் சந்தியிலிருக்கிறது. ஜனங்களிற் பெரும்பாலார் இன்னும் பிரவிர்த்தி மார்க்கத்திலிருக்கின்றார்களாயினும்அவர்களுக்குமேல் அபிவிர்த்தி நிவிர்த்திமார்க்கத்தில் அவர்கள் சென்று

லொழிய நடைபெறுது. ஆதலால் தர்மமான நடத்தை யென்பது யாதெனில் தானும், பிறரும் நிவிர்த்திமார்க் கத்தில் சஞ்சரிப்பதற்கு உபயோகப்படும் நினைவு, இச் சை, கிரியைகளேயாம். இவ்வித வியவஹாரங்களேசர்வ பிரபஞ்சத்தின் ஐக்கிய பாவத்தை அடையச் செய்விக் கும் சுவபாவமுடையவை. நாம் எப்பொழுதும்பேதபுத் தியைக் குறைத்து ஐக்கியபாவத்தை விர்த்திசெய்து வரவேண்டும். பேதபாவத்தைக் குறைத்துஐக்கியத்தை யதிகப்படுத்தும் சகல வியவஹாரங்களும் நன்மையே யாம். பேதத்தைப்பெருக்கி ஐக்கியத்தைக் குறைக்கும் நடத்தையவ்வளவும் பிசகே. ஆனால்மிருகங்கள், காட்டு மிராண்டிகள், முதலிய தன்னறிவு திடமாகாத பரிபா கம் குறைந்த ஜீவர்களுக்குப் பேதபாவம் அவசியமே ; பேதத்தையே கருதி யவர்கள் முயற்சிசெய்து வரவே ண்டியது நியாயமேயாம். விசேஷ பரிபாக முதிர்ச்சி யுடையோர்க்கு எது தர்மமோ அதுவே இவர்களுக்கும் தர்மமென்பதுசரியன்று. இதனால்தான்தர்மம் அவரவர் பரிபாக நிலைமையை நோக்கி வித்தியாசப்படும் என்று கூறப்பட்டிருக்கின்றது. அவரவர் நிற்கும் மார்க்கத்தி ற்குத் தக்கபடியும் அவரவர் பரிபாக ஸ்திதிக்கு ஏற்றப டியும் இது பின்னமாகின்றது.

பீஷ்மர்யுதிஷ்டிரர்க்கு உபதேசித்ததாவது: தர்மம் அறிந்துகொள்வதற்கு மிகக் கடினமானது. நான் இப் பொழு துனக்கு வேத வசனங்களின் வாச்சியார்த்தத் தின்படிமட்டுந் தர்மத்தை யுபதேசிக்கவில்லை, ஞானம் அனுபவம் இவற்றால் வேத வசனங்களுக்கு ஏற்படும், கருத்தைக்கொண்டு உபதேசிக்கிறேன். ஆதலால் ஏக

தேசாசாரத்தால் ஏற்படும் தர்மத்தை யனுஷ்டிப்பதால் எவனும் தன் சம்சார யாத்திரையை ஒழுங்காய் முடித்துக்கொள்ளமாட்டான். ஆதலின் வேதோக்திகளைசத்யுக்தியால் மிக்க கவனத்துடன் விசாரணைசெய்து பொருள்கொள்ளல்வேண்டும். அல்லாவிடில் பாத்தியமே சம்பவிக்கும். முற்காலத்தில் இவ்வுண்மையைப்பகவான் உசனஸ் கூறினர். அதாவது "வேதங்கள் யுக்தியின் சோதனைக்குச் சரிப்படாவிடின் வேதங்களாகா". என்பதேயாம். பலவித சந்தேகங்களோடும் கூடிய வறிவு அஃதின்மையைவிட்டுச்சிறிதும் மேலானதன்று. சமய சந்தர்ப்பங்களுக்கு ஒவ்வாததும் வெறும் வார்த்தைகளால் மட்டும் ஏற்படுத்தப்படுவதுமாகிய தர்மம் தப்பிதத்துக்கே ஆளாக்குவிக்கும். ஒரு காலத்தில் நீடித்த பஞ்சம் நடந்தபொழுது ரிஷி விசுவாமித்திரர் சண்டாளனிடமிருந்து நிஷித்தமான மாமிசத்தைக் கிரஹித்து அதை யாகத்தில் ஆவிர்ப்பாகமாகத் தேவதைகள் பெற்றுக்கொள்ளும்படி செய்தார். இதனல் அவர் கிருத்தியத்தைத்தேவர்களும்ஒப்புக்கொண்டதாயிற்று. க்ஷமை சன்னியாசிக்குப் பொருந்தியது. அரசனிடத்தில் க்ஷமை சர்வகாலத்திலும் பொருந்தாது. அரசன் தனக்குச் செய்யப்பட்ட தீங்குகளை க்ஷமிக்கலாம். ஆனல் தன் குடிகளில் மிகத்தாழ்ந்தவனை ஒருவனுக்காயினும் ஏற்பட்ட அற்பத் தீங்கையும் அரசன் தானும் தனது ராஜ்ஜியமும் க்ஷேமமாயிருக்கவிரும்புவானகில் மன்னிப்பது கூடாது. கொலைசெய்யத் தகாதவனைக் கொல்லுவதால் லுண்டாகும் பாபம் கொலைத் தண்டனையை யடையத் தகுந்தவனைக் கொல்லாமல் விடுவ

தால் ஏற்படும் பாபத்திற்குச் சமானம். ஆதலால் அரசன் எப்பொழுதும் மிகவும் உறுதியோடு தன் குடிகளனைவரையு மவரவர் கடமைகளைச் செய்வித்தல் வேண்டும். இம்மட்டோ! சகல குடிகளையும் அவரவர்களின் கடமைகளில் மிக்க கவலையுடன் அவரவர்களை நிறுத்தக்கடவன். இவ்விதம் இவன் செய்யாவிடின் இவர்கள் பலவீனரை ஹிம்சித்து ஒருவருக்கொருவர் போராடி ஓ நாய்களைப்போல் கட்டுக்கடங்காமற் றிரிவர். "இன்பமாய் வசனிப்பவளே மனைவியென்றும், பிதாவைத் திருப்திசெய்விப்பவனே புத்திரனென்றும், எக்காலத்திலும் நம்பிக்கை வைக்கத்தக்கவனே மித்திரனென்றும், ஜீவனோபாயத்திற்கு வழியுள்ளதே ஸ்வதேசனென்றும், கொடுமையின்றிக் கண்டிப்புடன் ஆள்பவனும், நன்னடக்கையுள்ளோர் பயமின்றி வாழத்தக்க நாட்டையுடையவனும், ஏழைகளை யாதரித்துத் துஷ்டரைச் சிக்ஷிப்பவனுமே அரசனென்றும்". முன்னோர்கள் கூறினார்கள். ஒவ்வொரு காலத்திலும் பிரதேசத்திலும் ஜனங்கள் ஒழுங்குடன் தமது பரிபாகத்தை நடத்திக்கொள்ளும்வண்ணம் எவ்வித தர்மங்களைச் சம்பாதிப்பதற்கு முயலவேண்டுமென்றும் காட்டுவதற்கே வர்ணாசிரமங்கள் அளிக்கப்பட்டன. ஈசுவரனது இச்சை யாதென வறிந்துகொள்ளுவதற்குச் சக்தியும் சாவகாசமும் ஜனங்கள் யாவருக்கும் கிடையாதாதலால் அவ்விச்சையாதென நமக்குக்காட்டித்தர்மம், அதர்மம் ஆகிய இவ்விரண்டையும் நாம் பிரித்தறிந்து கொள்ளும்படி செய்வதற்குச் சாஸ்திரங்கள் ஏற்பட்டன. ஆயினும் நமக்கு விவரங்கள் ஸ்பஷ்டமாகாத சமயங்களில் சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கும் ஸ்ப

ஷ்டமான விதிகளை யுபயோகிக்க அவசியமில்லாமற் போகும்பொழுது உபயோகப்படும்படி வியாசர் முதலான பெரியோர்கள் தம்முடைய கிரந்தங்களில் சில பொதுவான விதிகளையும் ஏற்படுத்தியிருக்கின்றனர். அவையாவன.

" பிறர்க்கின்பம் விளைவிப்பதே புண்ணியமெனவும் துன்புறுத்துவதே பாபமெனவும்.

"ஒருவன் துன்பம் தரக்கூடிய எந்தச் செய்கையைத் தனக்கு இதரர்கள் செய்ய விரும்பமாட்டானே அத்தகைய தீமைகளைத்தான் அவர்களுக்கும் செய்யலாகா தெனவும் அவர்கள் தனக்குச்செய்யவேண்டுமென்று தான் விரும்பும் சகல காரியங்களையும் பிறர்க்குத் தானும் செய்தல்வேண்டு மெனவும்.

" பிறர்க்குத் துன்பத்தை விளைவிக்கும் காரியத்தையாயினும் தனக்கே லஜ்ஜையாயிருக்கும்செய்கையையாயினும் எவனும் செய்யலாகாதெனவும்."

"தனக்கு நன்மையில்லாத எந்தக் காரியத்தையும் ஒருவன் பிறர்க்குச் செய்தல் கூடாது." எனவும் ஆம்.

## பிரமாணங்கள்.

𑌸𑍁𑌖𑌾𑌭𑍍𑌯𑍁𑌦𑌯𑌿𑌕𑌂𑌚𑍈𑌵
𑌨𑍈𑌃𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑌿𑌕𑌮𑍇𑌵𑌚 ।

𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌂𑌚𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌂𑌚 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿
𑌧𑌂 𑌕𑌰𑍍𑌮𑌵𑍈𑌦𑌿𑌕𑌮𑍍 ॥

வேதத்தில் கர்மம் பிரவிருத்தம்' நிவிருத்தம் என இருவிதங்களாகக் கூறப்பட்டிருக்கின்றது: ஒன்று இஹபரலோகங்களில் சுகபோகங்களைத் தருவது; மற்றொன்று எவற்றினு முயர்ந்ததாகிய பதவியை யளிப்பது.

இஹசாமுத்ர வாகாம்யம் ப்ர
வ்ருத்தம் கர்ம கீர்த்யதே ।

நிஷ்காமம் ஜ்ஞானபூர்வந்து
நிவ்ருத்தமுபதிஶ்யதே ॥

"ப்ரவ்ருத்தம் கர்ம ஸம்ஸேவ்ய தே
வாநாமேதி ஸாம்யதாம் । நிவ்ரு
த்தம் ஸேவமாநஸ்து பூதாந்ய
த்யேதி பஞ்சவை ॥

மனுஸ்மிருதி xxi. 88, 89, 90.

அந்யே க்ருதயுகே தர்மாஃ
த்ரேதாயாம் த்வாபரே (அ)பரே ।
அந்யே கலியுகே ந்ருணாம் யுக
ஹ்ராஸாநுரூபதஃ ॥

(மஹாபாரதம் சாந்திபருவம்)
vxxxi. 27.

இவ்வுலகிலு மவ்வுலகிலும் பலாபேக்ஷையுடன் முடிக்கப்படுகிற கர்மம் பிரவிருத்தமாகும்; ஞானத்தின் சகாயத்தால் நிஷ்காமமாய்ச் செய்யப்படும் கருமமே நிவிருத்தமென்று கூறப்படுகின்றது.

பிரவிருத்த ரூபமான கருமத்தை யனுஷ்டிப்பதால் தேவர்களின் ஸ்தானத்தைடைகிறான்; நிவிருத்தத்தை சேவிப்பதால் பஞ்சபூதங்களுக்குமே அப்பால் செல்லுகிறான்.

கிருதயுகத்தில் மானிடரின் தர்மங்கள் வேறாயிருந்தன; அப்படியே திரேதாயுக துவாபர யுகங்களிலும் தர்மங்கள் வேறு. இவ்விதமே கலியுகத்திலும் தர்மங்கள் வேறாகின்றன. ஆதலின் யுகங்களின் மாறுதல்களுக்கேற்றபடி தர்மங்களும் மாறிவருகின்றன.

𑌯𑌤𑌃 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂
𑌯𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌤𑌤𑌮𑍍 ।

𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌤𑌮𑌭𑍍𑌯𑌰𑍍𑌚𑍍𑌯 𑌸𑌿
𑌦𑍍𑌧𑌿𑌂 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 𑌮𑌾𑌨𑌵𑌃 ॥

எவனிடமிருந்து சகல பூதங்களும் பிரவர்த்திக்கின்றனவோ, எவன் இச்சகல பிரபஞ்சத்தினுள்ளும் பரவியிருக்கிறானோ அவனைத் தன் கருமத்தால் அர்ச்சிப்பதால் மானிடன் சித்தியடைகிறான்.

𑌶𑍍𑌰𑍇𑌯𑌾𑌨𑍍𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑍋 𑌵𑌿𑌗𑍁
𑌣𑌃 𑌪𑌰𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑍍𑌵𑌨𑍁𑌷𑍍𑌠𑌿
𑌤𑌾𑌤𑍍 ॥

𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌨𑌿𑌯𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍍𑌵
𑌨𑍍𑌨𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑌮𑍍 ॥

தனக்குரிய தர்மம், விசேஷ குணங்களற்றிருப்பினும் பிறர் தர்மங்களைக் காட்டிலும் மேலாகும். தன் ஸ்திதிக்கு ஏற்பட்ட தர்மத்தை யனுஷ்டிப்பதால் ஒருவன் பாபத்தை யடையான்.

𑌈𑌶𑍍𑌵𑌰𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌹𑍃
𑌦𑍍𑌦𑍇𑌶𑍇𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 ।

𑌭𑍍𑌰𑌾𑌮𑌯𑌨𑍍𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌯𑌂
𑌤𑍍𑌰𑌾𑌰𑍂𑌢𑌾𑌨𑌿 𑌮𑌾𑌯𑌯𑌾 ॥

𑌤𑌮𑍇𑌵 𑌶𑌰𑌣𑌂 𑌗𑌚𑍍𑌛 𑌸𑌰𑍍𑌵
𑌭𑌾𑌵𑍇𑌨 𑌭𑌾𑌰𑌤 ।

ஓ! அர்ஜ்ஜுனா! ஈசுவரன் சகல பூதங்களின் ஹிருதயஸ்தானத்தில் வசிக்கிறான், யந்திரத்தின்மேலேற்றப்பட்டவைகளைப் போல் அவற்றைத் தனது மாயையால் ஆட்டுவிக்கிறான். அவனையே சகல நினைப்புகளாலும் சரணமடைவாயாக.

𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌤𑍍𑌪𑌰𑌾𑌂𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌂𑌸𑍍𑌥𑌾
𑌨𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌮𑍍 ॥

பகவத்கீதை xviii. 46, 47, 61, 62.

ஓ! பரதவம்சத்தி லுதித்தவனே! அவன் கிருபையால் உயர்ந்த சாந்தியையும் சாசுவதமாகிய பதவியையும் அடைவாய்.

𑌵𑍇𑌦𑍋𑌽𑌖𑌿𑌲𑍋 𑌧𑌰𑍍𑌮𑌮𑍂𑌲𑌂
𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌶𑍀𑌲𑍇 𑌚 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑌾𑌮𑍍 ।
𑌆𑌚𑌾𑌰𑌶𑍍𑌚𑍈𑌵 𑌸𑌾𑌧𑍂𑌨𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌸𑍍𑌤𑍁
𑌷𑍍𑌟𑌿𑌰𑍇𑌵 𑌚 ॥

மனுஸ்மிருதி II. 6.

அகிலமான வேதம் தர்மத்திற்கு மூலமாகும். அப்படியே வேதமறிந்த பெரியோரின் சீலமும், ஸ்மிருதியும், சாதுக்களின் ஆசாரமும், ஒவ்வொருவனுடைய அந்தரங்க திருப்தியும் தர்மத்திற்கு ஆதாரங்கள்.

𑌅𑌷𑍍𑌟𑌾𑌦𑌶𑌪𑍁𑌰𑌾𑌣𑍇𑌷𑍁
𑌵𑍍𑌯𑌾𑌸𑌸𑍍𑌯 𑌵𑌚𑌨𑌦𑍍𑌵𑌯𑌮𑍍 ।
𑌪𑌰𑍋𑌪𑌕𑌾𑌰𑌃 𑌪𑍁𑌣𑍍𑌯𑌾𑌯
𑌪𑌾𑌪𑌾𑌯 𑌪𑌰𑌪𑍀𑌡𑌨𑌮𑍍 ।

18 - புராணங்களிலும் வியாசருடைய இவ்விருவசனங்களே முக்கியமானவை. பரோபகாரமே புண்ணியம்; பிறரைப்பிடித்தலே பாபமாகும்.

𑌯𑌦𑌨𑍍𑌯𑍈𑌰𑍍𑌵𑌿𑌹𑌿𑌤𑌂 𑌨𑍇𑌚𑍍𑌛𑍇𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍂𑌰𑍁𑌷𑌃 ।
𑌨 𑌤𑌤𑍍𑌪𑌰𑍇𑌷𑍁 𑌕𑍁𑌰𑍍𑌵𑍀𑌤 𑌜𑌾𑌨𑌨𑍍𑌨𑌪𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥

எது பிறரால் தனக்குச் செய்யப்படக்கூடாதென்று ஒருவன் நினைக்கிறானோ அது தனக்கு அப்பிரியமென்றறிந்துகொண்டபின் அதையே பிறருக்கும் அவன் செய்யலாகாது.

𑌯𑌦𑍍𑌯𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌚𑍇𑌚𑍍𑌛𑍇𑌤 𑌤𑌤𑍍𑌪𑌰𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑍇𑌤𑍍 ।

எதெதை ஒருவன் தனக்கு வேண்டுமென்று இச்சிப்பானோ அததையே பிறருக்கும் அவன் செய்யக்கடவன்.

𑌯𑌦𑌨𑍍𑌯𑍇𑌷𑌾𑌂 𑌹𑌿𑌤𑌂 𑌨 𑌸𑍍𑌯𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍌𑌰𑍁𑌷𑌮𑍍 ।
𑌅𑌪𑌤𑍍𑌰𑌪𑍇𑌤 𑌵𑌾 𑌯𑍇𑌨 𑌨 𑌤𑌤𑍍𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍𑌕𑌥𑌂𑌚𑌨 ॥

பிறர்க்குத் துன்புறுத்தும் காரியத்தையாயினும், தனக்கு லஜ்ஜையை விளைவிக்கும் செய்கையையாயினும் எவனும் செய்யலாலாது.

[illegible] 𑌯𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑍋ऽ𑌪𑌥𑍍𑌯𑌂 𑌪𑌰𑍇𑌷𑌾𑌂 𑌨 𑌤𑌦𑌾𑌚𑌰𑍇𑌤𑍍 ।

யாக்ஞியவல்க்கியஸ்மிருதி iii. 65.

ஆதலால் தனக்கு எது அஹிதமோ அதைப்பிறர்க்கும் செய்யலாகாது.

## அதிகாரம் 4.

### தர்மத்தின் பிரமாணம்.

ஜகத்பரிபாகத்தின் தற்காலத்திய ஸ்திதியில் இன்னும் ஜீவர்களில் அநேகர் கீழ்ப்படிகளிலேயே யுளராயினும், நமது சகல கிரியைகளேயும் தர்மம் அதர்மம் எனத் தீர்மானித்துக்கொள்ளுதற்கு ஐக்கிய பாவனேயே பிரமாணமாமென முன்னமே தெளிந்துகொண்டோம். ஜனங்களில் முக்கால்வாசிப்பேர்கள் செய்துவரும் கிருத்தியங்களில் எதையும் நாம் சோதிக்கும் வழி யாதெனில், இது ஐக்கியத்தை விருத்திபண்ணக் கூடியதா? அல்லது பேதத்தையே விருத்திப்படுத்துவதா? என்பதேயாம். இதில் முன்னதாகிய கேள்விக்கு உத்தரம் 'ஆம்' என்பதாயின் கிருத்தியம் தர்மமானது என்றும் இரண்டாவது கேள்விக்கு 'ஆம்' எனுமுத்தரம் கிடைப்பின் அதர்மமானது என்றும் கொள்ளவேண்டும். இவ்வுண்மையைக் கொண்டுதான் முன்னமே முதலதிகாரத்தில் நன்னடக்கையாவது ஜனங்கள் ஒருவருக்கொருவரும் ஜகத்தோடும் (இதர பதார்த்தங்களோடும்) ஒற்றுமையுடன் வாழ்ந்துவரும்படி செய்விப்பதே' என்று கூறப்பட்டது. ஒற்றுமையுடன் வாழ்வது ஐக்கியத்தை விர்த்திசெய்வதன்றோ!

இவ்விதமே ஸ்ரீ கிருஷ்ணனும் கீதையில் தைவீ, ஆசுரீ என்றிருவித குணங்களேயும் கூறுமிடத்துத் தைவிக சம்பத்தாகிய குணங்கள் யாவும் ஐக்கியத்தை யபிவிர்த்தி செய்பவைகாளாயும் அசுர சம்பத்தின் குணங்கள் பேதத்தைத் திடப்படுத்துபவைகளாயு மிருக்கின்றனவன்றோ:—"அபயம், சத்துவசுத்தி, ஞானயோகநிலே,

தானம், தர்மம், யக்ஞம், சாஸ்திரங்களையோதல், யதார்த்தப்பாவனை, அஹிம்சை, சத்தியம், கோபமின்மை, தியாகம், சாந்தி, விஷமமின்மை, பூததயை, பேராசையின்மை, மிருதுசுபாவம், லஜ்ஜை, சபலமின்மை, உறுதி க்ஷமை, தைரியம், சௌசம், துரோஹமின்மை, கர்வமின்மை'' ஆகிய இவையனைத்தும் மானிடரையொன்று படுத்தும் குணங்களேயன்றோ! இவை யாவும் சகல ஆன்மாக்களும் ஒன்றேயெனினும் ஞானத்தை யாதாரமாகக் கொண்டவையாம். இனி பகவான் ஆசுரம் எனக் குறிப்பிடும் துர்க்குணங்கள் யாவும் மானிடரைப் பிரித்து விலக்கிவிடும் தன்மை பொருந்தியவைகளாயிருப்பதைப் பாருங்கள். அவை "கபடம், கர்வம், அகங்காரம், கோபம், கடுஞ்சொற்பேசல், அறிவின்மையாம்.''

அகங்காரம், கர்வம் ஸ்வயநலபுத்தி ஆகிய யிவற்றை யுடையவனை அசுரப்பிறப்புடையவனென்று இவை காட்டுகின்றனவன்றோ! ஆகவே இளைஞனும் தர்மத்திற்கும் அதர்மத்திற்குமுள்ள இந்த வித்தியாஸத்தை மனதில் ஸ்திரமாய் அமைத்துக்கொண்டு தனது பிரதி தின நடத்தையிலும் உபயோகப்படுத்தி வரவேண்டும். படுத்திவந்தால் பிற்காலத்திய தன்னுடைய வித்யாப்பியாசத்தில் அநேக விவரங்களை யறிந்து இப்பொழுதுள்ள ஞானத்தை விருத்திபண்ணிக்கொள்ளலாம். அக்காலத்தில் வெகு விரிவாய் இவ்விஷயத்தை யாலோசிக்கவும், மிக்க கடினமான கேள்விகளுக்கும் சமாதானம் வருவித்துக்கொள்ளவும் தகுதியை யடைவன். ஆயினும் தர்மம் யாது அதர்மம் யாது எனப் பிரிக்கும்

இம்மூலப் பிரமாணம் மட்டும் என்றும் மாற்றமுடியாததாய் நிலைத்து நிற்கும். ஏனெனில், ஜகத்தின் பரிபாக ஸ்திதியை யாதாரமாகக் கொண்டதும் ஈசுவரேச்சைக் கனுகூலமானதுமாகிய வுண்மையன்றோ ?

## பிரமாணங்கள்.

𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌮𑌪𑌿 𑌚𑍈𑌤𑍇𑌷𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌪𑌰𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 ।
𑌤𑌦𑍍𑌧𑍍𑌯𑌗𑍍𑌰𑍍𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 𑌹𑍍𑌯𑌮𑍃𑌤𑌂 𑌤𑌤𑌃 ॥

இஃதெல்லாவற்றுள்ளும் ஆத்மஞானமே மேலானதென்று கூறப்பட்டிருக்கின்றது. அது சகல வித்தைகளிலும் முதன்மையானது. அதனின்றுமே மரணமற்ற நிலைமையானது கிடைக்கின்றது.

𑌸𑌰𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌸𑌂𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍𑌸𑌚𑍍𑌚𑌾𑌸𑌚𑍍𑌚 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌃 ।

𑌸𑌰𑍍𑌵𑌂 𑌹𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌸𑌂𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌨𑌾𑌧𑌰𑍍𑌮𑍇 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 𑌮𑌨𑌃 ॥

மனுஸ்மிருதி xii. 85, 118, 119, 125.

மனதை பொருமைப்படுத்திக்கொண்டு சத்து அசத்து ரூபமான சகலத்தையும் ஆத்மாவினிடத்தி லுள்ளதாய்க் காணல்வேண்டும். சகலமு மாத்மாவெனக் கண்டபின் ஒருவன் அதர்மத்தில் மனதைச் செலுத்த மாட்டான்.

𑌆𑌤𑍍𑌮𑍈𑌵 𑌦𑍇𑌵𑌤𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌃
𑌸𑌰𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 ।

ஆத்மாவே ஸகல தேவதைகளும் ; சகலமும் ஆத்மாவில் அடங்கியிருக்கின்றன.

𑌏𑌵𑌂 𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁
𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 ।
𑌸 𑌸𑌰𑍍𑌵𑌸𑌮𑌤𑌾𑌮𑍇𑌤𑍍𑌯
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌭𑍍𑌯𑍇𑌤𑌿 𑌪𑌰𑌂 𑌪𑌦𑌮𑍍 ॥

இவ்விதம் எவன் ஆத்மாவினுல் ஆத்மாவினிடத்தில் சகல பூதங்களையும் இருப்பதாகக் காண்கிருனே அவன் சகல வஸ்துக்களுடனும் சம்பாவத்தையடைந்து உயர் பதவியாகிய பிரம்மத்தில் சேருகிருன்.

---

## அதிகாரம் 5.

### நற்குணங்களும், அவற்றிற் காதாரமும்.

ஸநாதனதர்மத்தில் ஒவ்வொருவரும் பிறரை யுத்தேசித்து ஆத்மதியாகரூபமான யக்ஞம் அல்லது பரோபகாரத்தைச் செய்துவரவேண்டும் என்று ஏற்பட்டிருப்பதை முன்னமே யறிந்தோம். இது நியாயமே. ஏனெனில் இவ்வுபகாரம் ஐக்கியத்தை விருத்தி பண்ணக்கூடியதல்லவா ? ஆதலால் மேல் விவரித்துக் கூறப்பட்டிருக்கிற பஞ்சயக்ஞம் கர்த்தாவுக்கும், ரிஷிகள், தேவர்கள், பிதிருக்கள், நரர், பிராணிகள் ஆகிய

இவர்களுக்கு மத்தியில் ஐக்கியத்தை விருத்திபண்ணுகின்றது. நம்மை யின்னுமொரு வழியாகவும் ஸநாதனதமம் நியாயமாய் நடந்துகொள்ளும்படி கற்பிக்கின்றது அதாவது நாம் தீர்க்கவேண்டிய மூன்று கடன்களை நமக்கு அதுகாட்டுவதுதான். முதலாவது ரிஷிகளுக்கு அளிக்க வேண்டிய கடன். இது விசேஷமாய்ப்பிரம்மசரியாசிரமத்தில் வித்தியாப்பியாஸத்தாலும், குருசிசுரூஷையாலும் தீர்க்கப்படுகின்றது ; 2-வது முன்னோராகிய பிதிர்களின் கடன். இது விசேஷமாய்க் கிருஹஸ்தாசிரமத்தில் குடும்பத்தைப் பரிபாலிப்பதாலும், தானத்தாலும் நிறைவேற்றப்படுகிறது ; 3-வது தேவர்களது கடன். இது அதிகபாகம் வானப்பிரஸ்தாசிரமத்தில் யக்ஞ, தியான முதலியவற்றால் நிறைவேறுகிறது.

கடன் என்பது நாம் பிறருக்குச் செய்யக் கட்டுப்பட்டிருக்கும் காரியம். இவ்விதக் கடனைத் தீர்ப்பதற்குக் கடமையை முடித்தல் என்று பெயர். நிறைவேற்றித்தீரவேண்டிய இவ்விதகாரியத்தைச் செய்துமுடித்தல் புண்ணியம் என்றும, அதைச் செய்யாது விடலே பாபம் என்றும் கூறப்படுகிறது. தர்மபுத்தியுள்ளவன் தனது கடமைகளைக் கவனித்து அவற்றை நிறைவேற்றுகிறான். தீயகுணமுள்ளவன் தன் கடமைகளைக் கவனிக்கிறதுமில்லை, அவற்றை நிறைவேற்றுகிறதுமில்லை.

தர்மங்கள் யாவும் 'சத்தியத்தின் ஸ்வரூபங்க' ளெனப்பீஷ்மரால் வருணிக்கப்பட்டருக்கின்றன. ஏனெனில், சத்தியமென்பது உண்மையில் உள்ளது. சத்தியத்தைப் பீஷ்மர் "சாசுவதப்பொருளாகிய பிரம்ம" மென்றேகூறியிருக்கின்றனர். சத்தியமேஈசுவரஸ்வரூபம். இது

பிரம்மத்தின் சாயை அல்லது பிரதிபிம்பமாகிய பாஹ்ய பிரபஞ்சத்தில் விளங்குகின்றது. இயற்கையில் தோன்றும் நியதியின் பிரகாரங்கள் யாவும் உண்மையின் பிரகாசமே. ஆதலாற்றான் அவை சற்றேனும் மாறுபாடு, பிசகு முதலியவைகளின்றிப் பிரவர்த்திக்கின்றன. எல்லாவற்றிலும் பரமசத்தியமானது அநாத்மாவின் எண்ணிறந்த பேதத்தோற்றங்களுள்ளும் ஏகமாகிய ஆத்மாவே உண்மையில் பிரகாசிக்கின்றது என்பதுவே. இதுவே மற்றெல்லா வுண்மைகள் அல்லது நியதிகளுக்கு முதன்மையானது. இவை யாவும் அதன் சாயைகள் அல்லது பிரதிபிம்பங்களேயன்றி வேறன்று. ஆதலால் உலகின் சகலவித வியவகாரங்கள், சம்பவங்கள், சாஸ்திராதி விசாரங்கள், பரிசோதனைகள் இவைகளில் எல்லாம் பற்பலவிதமான உண்மைகளாய்ப் பிரகாசிப்பது இவ்வாத்மைக்கியமாகிய வுண்மையே! இந்நன்னடக்கையைப்பற்றிய விசாரத்தில் இவ்வுண்மையின் ஸ்வரூபமாவது நம்முள் ஒவ்வொருவரும் இதர ஆத்மாக்கள் யாவரையும் நாமாவே அல்லது நமக்குச் சமானமாகவாவது பாவிக்கவேண்டும். இவ்விதம் பாவித்து நாம் எப்பொழுதும் உண்மையே பேசவேண்டும்; ஏனெனில் பொய்யைச் சொல்லுவது பிறரிடம் அவநம்பிக்கை கொள்ளலேயாகும். பிறரை நமக்கன்னியர்களாகவும் நமக்கு விரோதிகளாகவும் கூட நாம் கொள்ளுவதாகும். சகல ஆன்மாக்களும் ஒன்றென்பதே யுண்மையாதலால் சகலருக்கும் பொதுவாயிருக்கும் உண்மையை மறைத்துப் பொய்பேசுவது பொதுவான திரவியத்தை மற்றவர் அனுபவிப்பதை நாம் தடுப்பதுவேயாகும். பொய் பேசுவதால் இவ்விதம் பேதபுத்தியை

நாம் உண்டு பண்ணிவருவதில் விளையும் தீங்குகள் மிகவும் பலவாம். மனதறிந்தோ அறியாமலோ நாமிவ்விதம் செய்துவருவதால் பல கெடுதிகள் விளைகின்றன. அநேகம் அதர்மங்களும் நேரிடுகின்றன. நற்குணங்களைச் சத்தியத்தின் ஸ்வரூபமென இவ்விதம் கூறுவது தர்மத்திற்கு மேலதிகாரத்திற் கூறப்பட்ட பிரமாணத்தொடொக்கும்; ஏனெனில் உண்மைபேசுதல் எப்பொழுதும் ஐக்கியத்தை விருத்திபண்ணக்கூடியது. பொய்பேசுதல் பேதத்தைத் திடப்படுத்தக்கூடியது.

ஹிந்துக்களின் சரித்திர புஸ்தகங்களில் கூறப்படும் உயர்ந்தோர் அநேகரிடத்தில் இந்த சத்தியம் முக்கியமான குணமாயிருந்திருக்கிறது. 'என் வாயினின்றும் அசத்தியம் பிறந்ததில்லை' என்பது இவ்வீரர்களுக்கு வழக்கமான கூற்று. குருக்ஷேத்திரத்தில் ஆயுதம் தரிப்பதில்லையென்று வாக்குதத்தம் செய்திருந்த கண்ணன் யுத்தத்தின் மத்தியில் ஒரு சமயம் தனதுகையிலிருந்த சவுக்கைமட்டு மாயுதமாகக்கொண்டு அர்ஜ்ஜுனனுக்குச் சகாயமாகப் பீஷ்மரை நோக்கி யோட்டினபொழுது அவர் பூர்வம் செய்த பிரதிக்ஞைக்காக அவரது சஹாயத்தை அர்ஜ்ஜுனன் ஒப்புகொள்ளாமல் அவரைத்தடுத்து நிறுத்தினன். அப்படியே யுதிஷ்டிரரும் இப்பிரதிக்ஞைக்காகவே தனக்கு ஜயம் கிடைக்காதென்று மயக்கமடைந்தபொழுதும் இவரது சஹாயத்தை ஏற்றுக்கொள்ளச் சம்மதிக்கவில்லை. இஃதிப்படியிருக்க யுதிஷ்டிரன் தன் ஆத்திரத்தை யுத்தேசித்து ஒருக்ஷணம் சத்தியத்தை மறந்து துரோணர் இறக்கும்படி ஒரு பொய்யைச்சொன்னபொழுது யுதிஷ்டிரனது ரதமானது ஆகாசத்தில் கிளம்பும் சக்தி

யை யிழந்து பூமியில் அமிழ்ந்திற்று என்று கூறப்பட்டிருக்கிறதன்றோ! பாண்டவர்கள் வனவாசம் செய்த காலத்தில் தாங்கள் படும் கஷ்டங்களை நினைந்து துக்கித்துக்கொண்டிருந்தபொழுது கௌரவர்கள்மீது ஒரு சேனையை யனுப்பி யுத்தம் செய்யலாமென்று ஸ்ரீகிருஷ்ணன் யுக்தி சொன்னபொழுது அது பதின்மூன்று வருஷம் ராஜ்ஜியத்தைவிட்டு வனத்தில் வாசம் செய்வதாய் ஆதியில் இவர்கள் செய்த பிரதிக்ஞைக்கு நேர்விரோதமானபடியால் யுதிஷ்டிரர் உடனே 'பாண்டுவின் புத்திரர்கள் சத்தியத்தின் வழியைவிட்டுத்தவறி நடவார்கள்' என மறுமொழியுரைத்தார். நஷ்டமல்லது சேதம் வரினும் கொடுத்த வாக்கைத் தவிரலாகாது. பிரகலாதன் இந்திரனிடமிருந்து திரிலோகங்களையும் கிரஹித்து ராஜ்ஜியபாரம் செய்துவந்தபொழுது இந்திரன் பிராமணனாக மாறுவேடங்கொண்டு அவனிடம் சிஷ்யனாகிச் சிசுரூஷை செய்துவந்தான். கடைசியாய் அவனது சிசுரூஷைக்கு மிகவும் திருப்தியடைந்து பிரகலாதர் அவன் எந்த வரங்கேட்பினும் அதைத் தருவதாய் வாக்களித்தார். இந்திரனுடனே பிரகலாதருடைய சீலம் அல்லது நடையுடைபாவனையைக் கேட்டார்; பிரகலாதரும் இவற்றைக்கொடுப்பதால் தனது சகலமேன்மையையும் போய்த்தான் நாசமே யடையவேண்டி வருமென்பதை யறிந்து, தான் கொடுத்த வாக்கு மாறாது கொடுத்துவிட்டார்.

தன் மாற்றாந்தாயாகிய சத்தியவதி ராஜ்ஜியத்தை ஏற்றுக்கொண்டு விவாகம் செய்து கொள்ளும்படி தன்னை வேண்டியபொழுது அவளுக்கு பீஷ்மர் சொன்ன மறுமொழியையார்தான்மறப்பர்? "இத்திரிலோக

த்தையும், சுவர்க்கராஜ்ஜியத்தையும் இன்னுமிவற்றிற்கு மேலாய் எதையும் நான் இழந்துவிடுவேன். சத்தியத்தைமட்டும் நான் தவிரேன். பிருதிவியானது தன்னியற்கைக்குணமாகிய கந்தத்தையும் அப்பு தனது சீதகுணத்தையும் தேஜஸ் ரூபங்களை திருஷ்டிக்குக் கோசரப்படுத்துவிக்கும் குணத்தையும் வாயு தன் ஸ்பர்ஸகுணத்தையும், சூரியன் தன் காந்தியையும், அக்கினி தன் உஷ்ணத்தையும், சந்திரன்தனது குளிர்ந்தகிரணங்களையும், ஆகாசம் தன் சப்தகுணத்தையும், தர்மராஜன் தனது நியாயந்தீர்க்கும் தன்மையையும் இழந்துவிடினும் விடலாம். நான் மட்டும் சத்தியத்தை விடேன்.'' என்றனரன்றே?

கர்வம் அல்லது அகங்காரம் நிறைந்தவனும் முன்பின் பாராது யதார்த்தம் பேசுபவனுமாகிய கர்னன் எவ்வாயுதமும் ஊடுருவமுடியாத ஒரு கவசம் இயற்கைபிற்றன் சரீரத்திலமைந்தவனாய்ப்பிறந்தவன் எனமாஹாபாரதம் கூறுகின்றது. தேவர்கள் சர்வகாலமும் பாண்டவர் காரியமேமுடியும்படி வேலைசெய்துவந்தபடியால்இவ்விதமான கர்னனது கவசத்தைக்கண்டு அர்ஜ்ஜுனனுக்கு மிவனுக்கும் பின்னர் நேரப்போகிற யுத்தத்தில் அந்தக்கவசத்தின் மஹிமையால் அர்ஜ்ஜுனன் தோல்வியடைவானென்றுமிகவுங்கவலைகொண்டார்கள். கர்னன் தினந்தோறும் காலையில் சூரியனுச்சி திரும்பும் வரைகிழக்கேநோக்கியுட்கார்ந்து வேதாத்தியயனம்செய்துவருவது வழக்கம். பிரதிதினமும் இந்தச்சமயத்தில் தான் கொடுக்கக்கூடியது எதையாயினும் ஒரு பிராமணன் கேட்டால் அதைத் தவறாது கொடுப்பதாய்ப்பிரதிக்ஞை செய்திருந்தான். இப்படி இவன் நடத்திவரு

கையில் ஒருநாள் தேவாதிபதியாகிய இந்திரன் வேறு வழியொன்றுங் காணுதவனுய் ஒரு கிழப்பிராமண வடிவங்கொண்டு இச்சமயத்தில் கர்னன் முன்தோன்றித் தனக்கு ஒரு வரம் தேவையென்றுன். அதைக்கேட்டு கர்னனும் அது தன்னுலாகக்கூடியதாயின் அவசியம் தான் தருவதாயுரைத்தான். அப்பொழுது இந்திரனும் "பிறப்பிலேயே உமது சரீரத்திலமைந்த இந்தக்கவசத்தை எனக்களியும்" என்றுன். அதற்குக் கர்னன் மறுமொழியாக நானிப்பொழுதுன்னை யறிந்தேன். நீ வஞ்சகமற்ற பிராமணனன்று. பின்னைத் தேவர்களின் அதிபதியாகிய இந்திரனே. ஆயினும் என் வார்த்தை ஒரு அக்ஷரமும் பொய்யாய்ப்போதல் கூடாது. நீ கேட்டதை எடுத்துக்கொள். நீ கேட்டதான இந்தக் கவசத்தை நான் கொடுத்துவிடுவதால் என் ஆயுளையும் அதினும் பெரிதாய் நான் மதித்திருக்கும் இச்சையான என் சத்துருவான அர்ஜ்ஜுனனை யுத்தத்தில் வெல்லுவதற்கு எனக்கிருந்த ஒரே வழியையும் இழந்தேன் என்பது எனக்குத்தெரியும்;" எனச்சொல்லிப் பிறகு தன் கையாயுதத்தால் அந்த வுயிருள்ள சதையிலொட்டிய கவசத்தைத் துண்டுதுண்டாய்ச் சிதைத்து முழுவதையும் இந்திரனுக்களித்தான். இதனுல் அவன் தீர்க்காயுளையும் அர்ஜ்ஜுனனை ஜயித்திருந்தா லடையக்கூடியதைவிடப் பன்மடங்குயர்ந்த கீர்த்தியையும் பெற்றுன்.

சூரிய வம்சத்தைச்சேர்ந்த தசரதமகாராஜன் அசுரர்க்கு விரோதமாய்த் தேவர்களால் சகாயத்திற்கழைக்கப்பட்டபொழுது க்ஷத்திரிய ஜாதியிற் பிறந்தவன் எப்பொழுதும் சத்துருக்களின்மீது போர்புரியவேண்

டியவனுதலால் அவ்வசுரர்களுடன் சண்டை செய்தான். யுத்தத்தில் இவனது கடைசி மனைவியான கைகேயி என்பவள் இவனுக்கு ரதத்தை நடத்தினுள். சத்துருக்களின் ஆயுதங்களால் தேகத்தில் காயம் பட்டு அரசன் மூர்ச்சையடையவே கைகேயியும் உடனே சாமர்த்தியத்துடன் ரதத்தைநடத்தித் தூரத்தில் பத்திரமான ஒரு ஸ்தலத்திற்கு அவனைக்கொண்டுபோய்ச் சேர்ப்பித்து அவனுடைய உயிரைக்காப்பாற்றினுள். இதற்காக அரசன் நன்றியறிதலுள்ளவனுய்அவளுக்கு இரண்டுவரங்களைத் தருவதாய் வாக்களித்தான். இவற்றைச் சமயத்திற்காமென்று அவள் உடனே கேட்கவில்லை. வெகு காலத்திற்குப்பின் அரசனும் முதுமையடைந்து தன் ஜ்யேஷ்டகுமாரனுகிய ராமனுக்கு இளவரசுப்பட்டம் கட்ட யத்தனித்தபொழுது இக்கைகேயி அவ்விரண்டு வரங்களையும் நினைந்து மிகவும் இரக்கமின்றிவிருத்தாப்பியமடைந்த வரசனுக்கு மிகப்பிரியனும் அவன் ஜ்யேஷ்டகுமாரனுமான ராமன் நாட்டைவிட்டுக்காட்டுக்குச் செல்லவேண்டியதென்றும் இரண்டாவது கைகேயியின் குமாரனுகிய பரதன் முடிசூட்டப்பட வேண்டியதென்றுமாகிய இவ்விரண்டு வரங்களையும் கேட்டனள். இவற்றைக் கேட்டுத் தசரதனும் இவற்றைக் கொடுத்தால் தான் இறந்தேபோகவேண்டுமென்பதை யறிந்தும் அவ்வாறே இவற்றைத்தந்து பின்னிறந்தான். ராஜ்ஜியமாளுமரசன் வாக்கு தவரினுனென ஏற்பட்டிராமல்அவன் இறந்தது மிகவும் மேன்மையன்றோ! ஏனெனில் அரசன் உண்மை தவறுவானுகில் உண்மைக்குவேறு ஆதாரமின்மையால் அதுவும் இறந்ததென்று கூறவேவேண்டும்.

தைத்தியவரசனுகிய பலிச்சக்கிரவர்த்தி சுவர்க் கத்தையுஞ் ஜெயித்துத்திரிலோகத்திலும் எதிரியற்று அரசாளுபவனுயினுன். அசுவமேத மகாயாகமொன்று செய்ய அவனுடைய வுத்தரவால் ஆக்ஞாபிக்கப்பட் டது. விஷ்ணுவும் வாமனனுகிய குள்ளனுய் மாறு வேடந்தரித்து யாகத்திற்குவந்து தன் காலின் மூன்றடி களால் அளக்கக்கூடிய பூமியைத்தானங்கேட்டார். பலி யின் குலகுருவான சுக்கிரன் இதைக்கேட்டு வாமனனை விஷ்ணுவென்றறிந்து தானத்தைக் கொடுக்கக்கூடா தென்று தடுத்தார். அதற்குப் பலிச்சக்கிரவர்த்தி "பிர கலாதனுடைய பேரன் ஒருபொழுதும் பொய்யைச் சொல்லான். ஆதலால் இந்தப் பிராமணச் சிறுவன் விஷ்ணுவும் எனக்கு நேர் சத்துருவாயினும் சரி, அவ னுக்கு நான் கொடுப்பதாய் வாக்குறுதி செய்தபடி அவன் கேட்டதை நான் அவனுக்குக் கொடுப்பேன்" என்று கூறினுன். பின் வாமனரும் தன்னிரண்டடிக ளாலும் திரிலோகங்களையும் மூடிவிட்டு மூன்ருமடிக் கிடங் கேட்டபொழுது பலி தன் சிரசைக் காட்டித் தனது ராஜ்ஜியமுழுவதும் போனுலும் தன் பிரதிக்ஞை நிறைவேறினதை மிகப் பெரிதாய்க்கொண்டான். இத ற்காக விஷ்ணு அவனைப்பார்த்துத் தன் ஐசுவரியம் முற்றிலும் போய்த் தனது மஹா பதவியையுமிழந்து, தானும் சத்துருக்களுக்கு வசப்பட்டு அவர்களால் கட் டுண்டும், மித்திரர்களாலும் கைவிடப்பட்டும் சொந்த ஆசாரியனுலிகழ்ந்து சபிக்கப்பட்டும் நிற்கும் காலத் திலும் பலி தன் சத்தியத்தைக் கைவிடவில்லை யென்று புகழ்ந்து கூறி ஆசீர்வதித்தார். இவ்வுண்மை விளங் கிய நடத்தைக்காகப் பலிச்சக்கிரவர்த்தி விஷ்ணுவின்

கிருபையால் இப்பொழுது இந்திரனுயிருக்கும் புரந்தரன் என்னும் பெயருடைய தேவன் இந்திரஸ்தானத்தைவிட்டு நீங்கும் பொழுது, அந்தப்பதவிக்கு வருவார் என்று புராணங்கள் கூறுகின்றன. (இந்திரன் என்பது ஓர் பதவியின் பெயரேயன்றி ஒருவன் பெயரன்று.)

சத்தியம் பிர்ம்மத்தின் ஸ்வரூபமாதலால் பிர்ம்மத்தை நாடுவோர் உண்மையேபேசிவரல்வேண்டும். ஆதலால் மற்றெல்லா நற்குணங்களைக் காட்டிலும் உண்மையையே எச்சிறுவனும் கடைப்பிடிக்கவேண்டும்.

ஒரு பிராம்மணன் பிறக்கும் பொழுதே மூன்று கடன்களால் கடனாளியாகப்பிறந்திருக்கிறான். யக்ஞத்தால் தேவர்க்கும், பிரஜையால் பிதிர்களுக்கும், ஸ்வாத்தி யாயத்தால் ரிஷிகளுக்கும் கடன் பட்டவனாகிறான்.

விஷ்ணுபாகவதம் Viii. XV. XXiii.

மூன்று கடன்களையும் தீர்த்துக்கொண்டபின் மனதை மோக்ஷத்தில் திருப்பவேண்டும். அவற்றைத் தீர்க்காமல் மோக்ஷத்திற்குழைப்பவன் அதோகதியை யடைகிறான்.

விதிப்படி வேதங்களை யத்தியயனம் செய்து, தர்மப்படி புத்திரர்களை யுற்பத்திபண்ணி, தன் சக்தியின்பிரகாரம் யக்ஞங்களையும் செய்து பின்னர் மனதை மோக்ஷத்தில் செலுத்தவேண்டும்.

மனுஸ்மிருதி Vi. 35. 36.

இவ்விதம் ஒருவருக்கொருவர் உபகரித்துக்கொண்டு மேன்மையை யடைவீர்களாக.

ஓ! பார்த்தா! இவ்விதம் ஏற்படுத்தியிருக்கிற சக்கிரத்தை எவன் அனுசரிக்காம லிருப்பானோ, இந்திரியவாழ்க்கையி லழுந்தியவனும் பாபத்தைச் செய்பவனுமாகிய அவன் வாழ்வு வீணேயாகும்.

பகவத்கீதை iii. 11. 16.

சத்துக்களினிடத்தில் சத்தியமே எப்பொழுதுங் தர்மமாகும். சத்தியமே சாசுவதமானதர்மம். சத்தியத்தையே வணங்கவேண்டும். ஏனெனில் சத்தியமே உத்தமமான கதியாகும்.

சத்தியமே தர்மமும், தபஸும், யோகமுமாகும். சத்தியமே யழிவில்லாத பிர்ம்மம். சத்தியமே மேலான யக்ஞமென்று கூறப்பட்டிருக்கின்றது. ஆதலால் சகலமும் சத்தியத்தில் அமைக்கப்பட்டிருக்கின்றது.

சத்தியமென்பது என்றும் அழிவில்லாதது, விகாரமற்றது, சகலதர்மங்கட்கும் அவிரோதமான யோகத்தால் அது அடையப்படுகின்றது.

அனுசாசன பருவம் மஹாபாரதம் cl Xii.

உண்மை, சமதிருஷ்டி, தன்னடக்கம், மாற்சரியமின்மை, க்ஷமை, லஜ்ஜை, பொறுமை, அசூயையின்மை, தியாகம், தியானம், ஔதாரியம், தைரியம், தயை, அஹிம்சை இவை பதின்மூன்றும், ஓ! ராஜேந்திரா! சத்தியத்தின் (உருவங்கள்) பிரகாரங்கள்.

ஸாங்கோபாங்கமாய் விஸ்தாரத்துடன் அங்கோபாங்கங்களுடன் படிக்கப்பட்ட வேதங்கள் அவ்வளவும் ஓர்புறத்திலும் சத்தியமட்டும் ஓர்புறத்திலும் வைத்து ஆராய்ந்தால் சத்தியமே மேலோங்கும்.

மஹாபாரதம். வனபருவம்.
LXiii.

சத்தியவான்களிடத்தில் தங்களிடத்திற் காட்டிலும் அதிகமான நம்பிக்கையை ஜனங்கள் கொள்ளுகிறார்கள். ஆதலால் சத்தியவான்களிடத்தில் எவரும் சிநேகத்தை விரும்புகிறார்கள்.

மஹாபாரதம், வனபருவம்.
ccXci.

ஸத்துக்களின் பிரவிர்த்தி எப்பொழுதும் சநாதனமான தர்மத்தின்படியே யாகும். ஆதலால் சத்துக்கள் துக்கப்படுகிறது மில்லை, துன்பத்தையடைகிறதுமில்லை. சத்துக்களுள் ஒருவரோடொருவர் சேருதல் ஒருபொழுதும் நிஷ்பலமாகாது. சத்தியசீலர்கள் ஒருவரிடமொருவர் பிரீதியடைவார்கள். சத்துக்கள் சத்தியத்தால் சூரியனை நடத்துகிறார்கள். தபவில் பூமியைப் போஷிக்கிறார்கள். ஓ! அரசனே! சென்றதற்கும் இனிவருவதற்கும் சத்துக்களே ஆதாரபுருஷர்கள். சத்துக்கள் மத்தியில் துன்பமடைகிறதில்லை.

கோபம், காமம் சோகம், மோஹம், கடுகடுப்பு, துஷ்டகிருத்தியம், லோபம், மாற்சரியம், பொறாமை, அழுக்காறு, ஆழ்ந்த பகை, நிந்தை, வஞ்சனை இப்பதின்மூன்றும் ஓ! அரசனே! ஜீவஜந்துக்களுக்குக் கொடுஞ் சத்துருக்களாகும்.

மஹாபாரதம். சாந்திபருவம். xxxiii.

சகலத்தையும் அறிந்துகொள்ளும் சாக்ஷியான க்ஷேத்திரக்ஞன் எவன் பேசும்பொழுது சந்தேகிக்கிறதில்லையோ அவனைக்காட்டிலும் வேறொருவனை மேலானவனென்று இவ்வுலகில் தேவர்கள் அறியார்கள்.

மனுஸ்மிருதி viii. 96.

உனக்குக் கருமத்திலேமட்டும் அதிகாரமுண்டு; அதன்பலத்தில் கிடையாது. ஆதலால் கருமபலத்திற்கு ஹேதுவாக, அக்கருமத்தில் உனக்குச் சங்கமும் வேண்டாம்.

பகவத்கீதை ii. 47.

நிருசிம மோத்தரதாபினி யுப நிஷத் i. 6. | சத்தியமே பரப்பிரம்மம், நியர்யமே பரப்ம்மம்.

---

# அதிகாரம் 6.

## ஆநந்தமும், மனோபாவமும்.

ஈசுவரன் ஆனவன் சங்கல்பம், சக்தி, ஆனந்தம் ஆகிய மூவிததன்மைகள் பொருந்தியவன் என்று முன்னமேவிசாரித்தோம். மனிதன் இவ்வீசுவரனது பிரதி பிம்பமேயாதலால்இவனிடத்திலுமிக்குணங்கள் உண்டு. ஜீவாத்மா ஸ்தூலப்பிரகிருதியால் மூடப்பட்டு நிற்கும் பொழுது ஆனந்தமாகிய இவனது குணம் எப்பொழுதும் தனக்குத் திருப்த்தியைத்தேடிவெளியுலக பதார்த்தங்களோடுந் தன்னை ஐக்கியப் படுத்திக்கொள்ளுவதால் தன்சுபாவமாகிய வானந்தத்தைபடைய விருப்பங்கொண்டு சதாகாலமும் பஹிர்முகப்பட்டுப் பிரகாசிக்கின்றது. இவ்விதம் பஹிருலகத்தைநோக்கிப் பிரவிர்த்திக்கும் வாஸனைகளுக்கு இச்சைகள்என்றுபெயர். இவை ஜீவனைப் பாஹிய பதார்த்தங்களோடு சேர்ப்பித்து அதனால் அவன் மறுபடியும் இவ்விதபதார்த்தங்களையடைய விரும்பும்படி செய்யும்பொழுது, இவற்றால் ஏற்படும் (அநுராகம் அல்லது) மனோபாவத்திற்குப்பிரீதியென்று பெயர். இவ்விதமின்றி இவை ஜீவனைத் துன்பத்தை

த்தருமொரு பதார்த்தத்தோடு சேர்ப்பித்து அதனாலவன் அப்பதார்த்தத்தோடு சேராமலிருக்கவேண்டுமென்றிச்சிக்கும்பொழுது உண்டாகும் மனோபாவத்திற்குத்துவேஷம் அல்லது வெறுப்பு என்றுபெயர். முன்னது ஜீவாத்மாவுக்கும் பாஹியபதார்த்தங்கட்கும் மத்தியில் ஏற்படும் கவர்ச்சி. பிற்சொன்னது அவை இரண்டிற்கு மத்தியிலுள்ள வெறுப்பு ஆகும்.

விருப்பு, வெறுப்பு இவ்விரண்டையும் ஜீவன் ஆலோசனைசெய்து நாளடைவில் அவற்றின் பலாபலன்களையுணர்ந்து சரியான மனோபாவங்களை ஏற்படுத்திக்கொள்ளக் கற்றுக்கொள்ளுகிறான். இவ்விதம் யோசனையில் ஈசுவரசங்கல்பத்துக்கு அனுகுணமாகச் சீரவிருத்திகொள்ளப்படும். மனோபாவங்களே காலக்கிரமத்தில் சீலங்கள் அல்லது நற்குணங்களாகப்பக்குவமடைகின்றன. ஆதலால் மனோபாவங்களைச் சீர்படுத்திக்கொள்ளலே நன்னடக்கையை வருவித்துக்கொள்ளும் வழியாகும். பிரீதியாகும் மனோபாவத்தை ஜீவன்விருத்திசெய்துகொண்டு வருவானாகில் முதலில் தன் குடும்பத்தோடும், பிறகுத்தன் ஜாதி, தேசம், வர்க்கம் ஆகிய நாளுக்குநாள் அதிகமாகும் ஜீவசமூகத்தோடும் தன்னை ஐக்கியப் படுத்திக்கொள்ளுவான். அவர்களனைவரையும் தன்னைப்போலநேசிக்கும்தன்மையையுமடைவான். இதனால் இவனது ஆனந்தமாகிய குணம் காலக்கிரமத்தில் விசேஷப் பிரகாசம்பொருந்தி யோங்கி இவ்விதமிவன் சகல ஜீவர்களோடும் ஐக்கியமடைவதில் இவனுக்குத் திருப்தியாகின்றது.

ஜகத்தின் உருவு திரிதலின் பரிபாகமானது இப்பொழுது நம்மை ஐக்கியத்தைநோக்கிச் செலுத்தி

வருகின்ற தென்பதை முன்னமே கூறினோம். அதாவது ஈசுவர சங்கல்பமானது சகல ஜீவர்களையும் ஒருவரோ டொருவரையும் தன்னோடும் ஐக்கியமடையும்படி செய்துவருகிறது. இவ்வைக்கியத்தில் தான் ஆனந்தம் உண்டாகின்றது. ஆதலால் நன்னடத்தையுள்ளவர்களும் ஆனந்த முடையவர்களும் ஒருவரைவிட் டொருவர் வேறுபடுகிறதில்லை. பலமுறையும் ஸநாதனதர்மமானது இந்த ஒரு முடிபையே வற்புறுத்திவிளக்குகின்றது. 'பிரம்மம் ஆனந்த சொரூபம், ஆதலால் பிரம்மத்தின் சுபாவத்தையேயுடைய ஜீவாத்மாவும் உண்மையில் ஆனந்தஸ்வரூபமேயாவன். இவன் துக்கமடைவதற்குக்காரணமாவது ஜகத்தின் உருவு திரிதலின்பரிபாகத்திற்கு அல்லது ஈசுவரனுடைய மஹா சங்கல்பத்திற்கு விரோதமாய் நடத்தலாகிய துர்நடத்தையாலேயேயாம்.

---

## பிரமாணங்கள்.

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑍇𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌸𑌚𑍍𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌰𑍂𑌪𑌂 𑌸𑌚𑍍𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌰𑍂𑌪𑌮𑌿𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑍍 ।

நிருசிமமோத்தரதாபினியுபநிஷத் 7.

இந்த சச்சிதானந்தரூபமாகிய சர்வமும் பிரம்மமே! இஃதவ்வளவும் சச்சிதானந்தஸ்வரூபமே!

பராஂசிகாநிவ்யத்ருணத்
ஸ்வயம்பூ: தஸ்மாத் பராங் பஸ்யதி
நாந்தராத்மந் ।

கடோபநிஷத் iv. 1.

ஸ்வயம்பூ வானவர் இந்திரியங்களைப் பஹிர் முகங்களாக ஏற்படுத்தினர். ஆதலால் இவை வெளியிலுள்ளதைப்பார்க்கின்றன. அந்தராத்மாவைத் தரிசிக்கின்றதில்லை.

யதாவை ஸுகம் லபதே அத
கரோதி நாஸுகம் லப்த்வா கரோதி ஸுகமேவ லப்த்வா கரோதி ।

ஜீவன் சுகமடையும்பொழுது தான் கிரியையில் பிரவேசிக்கிறான். சுகமடையாவிடில் கிரியையில்பிரவேசிக்கிறதில்லை. சுகமடைந்துதான் கிரியை செய்கிறான்.

யோவை பூமா தத் ஸுகம்
நால்பே ஸுகமஸ்தி பூமைவ
ஸுகம் ।

ஏது சாசுவத வஸ்துவோ அதுவே (உண்மையான) சுகம்; அழிவுள்ளதில் சுகமில்லை. அழிவற்றதுதான் சுகம்; எப்பதவியில் தனக்கு அன்னியமான பிறிதொன்றையும் (ஜீவன்) பார்க்கிறானில்லையோ, கேட்கிறானில்லையோ, அறிகிறானில்லையோ, அப்பதவியேசாசுவதமானது. எங்கு அவன் (தனக்கு) வே

யத்ர நாந்யத் பஸ்யதி, நாந்யச் ச்ருணோதி, நாந்யத் விஜாநாதி ஸ பூமா ; அத யத்ராந்யத் பஸ்யத்யந்யச் ச்ருணோத்யந்யத் விஜாநாதி ததல்பம் யோ வை பூமா ததம்ருதமத யதல்பம் தந் மர்த்யம் ।

...ருகியவற்றைப் பார்க்கிருனே, கேட்கிருனே, அறிகிருனே, அது அநித்தியம்; எது சாசுவதமோ அது அழிவற்றது, எது அநித்தியமோ அது அழிவுள்ளது.

சாந்தோக்கியோபநிஷத் vii. xxii. I; xxiii. I. and xxiv. I.

ஸுக²மயசைதந்யஸ்வரூபோऽபரிச்சி²ந்நாநந்த³ஸமுத்³ரோऽவிஶிஷ்டஸுக²ஸ்வரூபஶ்சாநந்த³ இதி ।

ஆனந்தமென்பது சுகம்நிறைந்த சைதன்னியஸ்வரூபமும் அளவிடப்படாத ஆனந்த சமுத்திரமுமாம். தன்னிலுமுயர்ந்த தொன்றில்லாத ஒரு சுக ஸ்வரூபம்.

சர்வசாரோபநிஷத்.

இஷ்டவிஷயபு³த்³தி⁴: ஸுக²பு³த்³தி⁴:, அநிஷ்டவிஷயபு³த்³தி⁴: து³:க²பு³த்³தி⁴: ।

தனக்கு இஷ்டமான விஷயத்தின் ஞானமே சுகபுத்தியாகும். தனக்குப் அபிரியமானவற்றின் ஞானமே துக்கபுத்தியாகும்.

சர்வசாரோபநிஷத்.

ஸர்வாணி பூ⁴தாநி ஸுகே² ரமந்தே ஸர்வாணி து³:க²ஸ்ய ப்⁴ருஶம் த்ரஸந்தே ।

சகல பூதங்களும் சுகத்தில் ஆநந்திக்கின்றன, துக்கத்தைக் கண்டு மிகவு நடுங்குகின்றன.

மஹாபாரதம் சாந்திபருவம் cc. XXXI. 27.

𑌇𑌚𑍍𑌛𑌾𑌦𑍍𑌵𑍇𑌷𑌸𑌮𑍁𑌤𑍍𑌥𑍇𑌨 𑌦𑍍𑌵𑌂𑌦𑍍𑌵
𑌮𑍋𑌹𑍇𑌨 𑌭𑌾𑌰𑌤 ।

𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌸𑌂𑌮𑍋𑌹𑌂
𑌸𑌰𑍍𑌗𑍇 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌪𑌰𑌂𑌤𑌪 ॥

இச்சை துவேஷங்களினின்றுமுண்டாகும் துவந்துவாதிகளின் மோஹத்தால் ஓ அர்ஜுனா ! சர்வபூதங்களும் சிருஷ்டியில் மோஹிக்கப்படுகின்றன. இச்சை, துவேஷம், சுகம், துக்கம், (அங்கங்களின் சேர்க்கையாகிய) சரீரம், பிரக்ஞை, உறுதியிவையனைத்தும் சேர்ந்து இவற்றின் விகாரங்களுடன் க்ஷேத்திரம் என்று கூறப்படுகிறது.

𑌇𑌚𑍍𑌛𑌾 𑌦𑍍𑌵𑍇𑌷𑌃 𑌸𑍁𑌖𑌂 𑌦𑍁𑌃𑌖𑌂
𑌸𑌂𑌘𑌾𑌤𑌶𑍍𑌚𑍇𑌤𑌨𑌾 𑌧𑍃𑌤𑌿𑌃 ।

𑌏𑌤𑌤𑍍𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌸𑌮𑌾𑌸𑍇𑌨
𑌸𑌵𑌿𑌕𑌾𑌰𑌮𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌮𑍍 ॥

பகவத்கீதை xiii. 6.

𑌕𑌾𑌮 𑌏𑌷 𑌕𑍍𑌰𑍋𑌧 𑌏𑌷
𑌰𑌜𑍋𑌗𑍁𑌣𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌃 ।

பகவத்கீதை xiii. 87.

இக் காமமும், குரோதமும் ரஜோ குணத்திலிருந்து உண்டானவை.

𑌇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯𑍇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯𑌾
𑌰𑍍𑌥𑍇 𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑍌 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿
𑌤𑍌 ।

𑌤𑌯𑍋𑌰𑍍𑌨 𑌵𑌶𑌮𑌾𑌗𑌚𑍍𑌛𑍇𑌤𑍍𑌤𑍌
𑌹𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰𑌿𑌪𑌨𑍍𑌥𑌿𑌨𑍌 ॥

பகவத்கீதை iii. 34.

ஒவ்வொரு இந்திரியத்தின்விஷயத்திலும் ராக துவேஷங்கள் தங்கிக்கிடக்கின்றன. ஜீவன் இவைகளின் வசம் அகப்பட்டுக்கொள்ளப்படாது; இவைகளே அவனுக்கு இடையூறுகள்.

𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑌵𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑍈𑌸𑍍𑌤𑍁 𑌵𑌿𑌷
𑌯𑌾𑌨𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍈𑌶𑍍𑌚𑌰𑌨𑍍 ।
𑌆𑌤𑍍𑌮𑌵𑌶𑍍𑌯𑍈𑌰𑍍𑌵𑌿𑌧𑍇𑌯𑌾𑌤𑍍𑌮𑌾
𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌮𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥

பகவத்கீதை ii. 64.

பரிபாகமடைந்த ஒருவன் தனக்கு வசப்பட்டவைகளும் ராக துவேஷாதி களற்றவைகளுமான இந்திரியங்களால் விஷயங்களை யனுபவித்துக்கொண்டு பிரஸாதமடைகிறான்.

𑌯𑌶𑍍𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌿𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌵𑌰𑍍𑌤
𑌤𑍇 𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑌤𑌃 ।
𑌨 𑌸 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨 𑌸𑍁
𑌖𑌂 𑌨 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍 ॥

பகவத்கீதை xvi. 23.

எவன் கேவலம் இச்சையின் போக்கால் சாஸ்திர விதிகளைக் கைவிட்டு நடக்கிறானோ அவன் சித்தியையாவது சுகத்தையாவது பரகதியையாவது அடைகிறதில்லை.

𑌏𑌕𑍋 𑌵𑌶𑍀 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑍍
𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 𑌏𑌕𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌬𑌹𑍁𑌧𑌾
𑌯𑌃 𑌕𑌰𑍋𑌤𑌿 ।
𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌥𑌂 𑌯𑍇𑌽𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿
𑌧𑍀𑌰𑌾𑌸𑍍𑌤𑍇𑌷𑌾𑌂 𑌸𑍁𑌖𑌂 𑌶𑌾
𑌶𑍍𑌵𑌤𑌂 𑌨𑍇𑌤𑌰𑍇𑌷𑌾𑌮𑍍 ॥

எவன் சகல பூதங்களுக்கு மந்தராத்மாய், ஸ்வயம் வசியாய், சகலத்தையும் அடக்கி நடத்துகிறானோ, சத்தியமாயுள்ள ஒரே ரூபத்தை அநேக ரூபங்களாக்குகிறானோ, அவ்வஸ்துவைத் தம்முள்ளந்தத் தீரர்கள் காண்கிறார்களோ அவர்களுக்கே சாசுவதமான சுகம்; மற்றவர்கட்கில்லை.

# அதிகாரம். 7.

## ஒருவன் தன்னை நோக்கி நடந்துகொள்ளவேண்டிய நன்னடக்கை.

ஜீவாத்மாவுக்கு உலகிலுள்ள பிராணிகள் முதலிய யாவற்றோடும் நெருங்கிய சம்பந்தமுண்டென்றும், பிறரோடும் தனக்குள்ள சம்பந்தங்களை ஒழுங்கு பெறச் செலுத்துவதற்குள்ள வழியைக்காட்டுவதே தர்மாதர்ம விசாரம் என்றும் முன்னமே கண்டோம். இவ்விதம் பிறரோடு தனக்குள்ள சம்பந்தங்களைச் சீர்திருத்திக் கொள்ள முயலுவதவசியமாயினும் ஜீவன் தன்னோடு இணைத்துக் கொண்டிருக்கும் அநாத்மாவின் விபாகங்களாகிய தனது கோசங்களோடும் மிகவும் விசேஷமாய் நெருங்கிய சம்பந்தமுடையவன் என்பதையும், இச்சம்பந்தங்களை முதலில் சீர்திருத்திக்கொண்டாலொழிய இவன் அப்பாலுள்ளவைகளான அன்னியர்களின் சரீரங்களோடு ஒழுங்குடன் சம்பந்தித்துவருவது முடியாதென்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது. இவன் சிறுவயதாயிருக்கையில் இவனது சரீரங்கள் இவனை யடைக்கியாண்டு பலவித துன்பத்திற்குள்ளாக்கி வந்தன. நாளடைவில் வயதுவரும்பொழுது இவனிவற்றை யடக்க முயலுகிறான்; எத்தனையோ முறை இக்கோசங்களோடு இவன் யுத்தம்பண்ணித்தான் அவற்றையொருவாறு தனக்கு வசப்படுத்திக்கொள்ளத் தகுதியடைகிறான். இப்பொழுது அசுத்தமனது சுத்தமனதால் ஜயிக்கப்பட்டு இவனும் தன்னடக்கமாகிய நற்குணத்தை யடைந்தவனாகிறான்.

இதர ஜீவர்களோடும் நேரும் சம்பந்தங்களை விலக்கி ; 'மேற்கூறியபடி' ஒரு ஜீவனுடைய சொந்தமாகிய கோசங்களைமட்டும் சம்பந்திக்கும் நற்குணங்களைத் தற்காலத்தவர் "ஒருவன் தன்னையே நோக்கி யனுஷ்டிக்கவேண்டிய நற்குணங்களென" விபாகித் தழைக்கிறார்கள். ஆயினும் இந்நற்குணங்கள் வாய்ந்த ஒருவன் அவையில்லாத ஒருவனைக் காட்டிலும் விசேஷமாய்ப பிறரோடும் சம்பந்தங்களை வொழுங்குபெறச் செலுத்தி வருவானென்று எவரும் ஒப்புக்கொள்ளத்தடையிராது.

ஸ்மிருதி கர்த்தாவாகிய மனுவானவர் இவ்வித மாகிய தன்னடக்கத்தை மிகவும் வற்புறுத்திக்கூறி இதைப்பற்றிச் சில விசேஷ உபயோகமுள்ள புத்திமதிகளைக் கூறுகின்றனர். ஒவ்வொரு காரியத்திற்கும் முன்னிகழும் காரணங்கள் அல்லது ஆதாரங்கள் மூன்றுண்டென அவர் மொழிகின்றனர். "காரியமாவது மனோவாக்கு காயங்களால் பிறக்கின்றது.

மனோரதங்களல்லது மனோபாவங்கள் அடங்கிய மனது அல்லது மனோமயகோசமானது ஜயிக்கப்படவேண்டியது. இதுவே எல்லாவற்றிலும் கடினமான வேலை, ஏனெனில் மனதானது சுகத்தைத்தருவனபோற் றோன்றும் பதார்த்தங்களை யடையவேண்டு மென்னும் விருப்பத்தின் வசமாகி அதனால் அலைக்கப்பட்டு சதா காலமும் இப்பதார்த்தங்களை நோக்கிப் பகிர்முகப்பட்டு ஓடிக்கொண்டேயிருக்கின்றது. மனோரதங்கள் எப்பொழுதும் தாம் திருப்தியடைவதில் நாட்ட முடையனவாதலால் அவற்றிற் கடிமையாகிவிடும். மனது அத்திருப்தியைச் சம்பாதித்துத்தருவதே தொழிலாகி விடுகின்

றது. ஆதலால் ஜீவாத்மா தன்னுபயோகத்திற்காக மனதை இவ்வடிமையினின்றும் விலக்குவித்துக் கொண்டு பத்திந்திரியங்களுக்கும் அவற்றின் அங்கங்களுக்கும் அதை அதிபதியாக்கிக் கொள்ளவேண்டும். மனுஸ்மிருதி : "மனது ஜயிக்கப்பட்டால் ஈரைந்து இந்திரியங்களும் ஜயிக்கப்படுகின்றன." எனக்கூறுகின்றது. இவ்வீரைந்திந்திரியங்களாவன ஞானேந்திரியங்கள் 5-ம் கர்மேந்திரியங்கள் 5-மே.

ஆதலால் சிறுவன் மனதையடக்குவதில் கருத்து வைக்கவேண்டும். அது கெடுதலான விஷயங்களைத் தொடர்ந்துசெல்லுமாயின் உடனே அதையடக்கி நிறுத்தவேண்டும். நல்லவிஷயங்களில் மட்டும் அது செல்லும்படி யிடங்கொடுத்து வரல்வேண்டும். இதுவே தன்னை யடக்கிக்கொள்ளுவதில் முதற்படியும் மற்றெல்லாவற்றையும்விட அனுஷ்டிப்பதற்கு கடினமானதும் எல்லாவற்றிலும் முக்கியமானதுமாம்.

அடுத்தபடியாவது வாக்கை வசப்படுத்தல்; நாம் எப்பொழுதும் பேசுவதற்கு முன் யோசனை செய்தல்வேண்டும். யோசனையற்றவார்த்தை அளவற்றசங்கடங்களை வருவிக்கின்றது. அர்ஜுனன் யோசனையின்றிவசனத்தைச்சொல்லுங்குணமுடையவனுயிருந்தான். அதனுல் அவன் அநேக சங்கடங்களுக்குட்பட நேர்ந்தது. உதாரணம் :—தன்குமாரனைக் கொன்ற ஜயத்திரதனைச்சூரியன் மறைவதற்கு முன்கொன்றுவிடுவதாயும் தவறினுல் தன்னையே கொலைசெய்து கொள்ளுவதாயும் யோசனையின்றிப் பிரதிக்ஞைசெய்தானன்றே ! இதனுல் ஸ்ரீகிருஷ்ணனும் சூரியனைப் பொழுதிருக்கும்போதே தனது சக்கிராயுதத்தால் மறைத்து ஜயத்திரதனைத் தான் மறை

ந்த விடத்தைவிட்டு வெளியேவரும்படி செய்யவேண்டி வந்தது. இவ்விதமே இவ்வர்ஜுனன் யுதிஷ்டிரருடன் கலகம் செய்தபொழுது அவரது இகழ்ச்சி வசனத்தால் கோபமூட்டப்பட்டுப்பதட்டத்துடன் பேசினன். இன்னு மிவ்விதமான அநேக சந்தர்ப்பங்களில் இவன் முன் யோசனையின்றிப்பேசிய வசனங்களால் இவன் பல ஆப த்துக்களை யடையநேர்ந்தது. இம்மட்டோ! முடிவில் சுவர்க்கயாத்திரையில் யோசனையின்றி இவன் செய்து கொண்ட பிரதிக்ஞையே இவன் மரணத்திற்கு ஹேது வாகியது. அர்ஜுனன் தன் சத்துருக்களனைவரையும் ஒரேநாளில் வென்று விடுவதாய்க்கூறினன். தன் பரா க்கிரமத்தால் அவன் மிகுந்த கர்வங்கொண்டான். தான் கூறியபடி செய்து முடிக்க அவனல் ஏலவில்லை. ஆத லால் அவன் அப்பாற் செல்ல வியலாமல் கீழே விழுந் தான் ஆதலால் நாவை யடக்கினவன் சீக்கிரத்தில் ஜிதே ந்திரியனுதவற்கையமில்லை.

மூன்ருவது ஸ்தூல சரீரத்தையும் வசப்படுத்திக் கொள்ளல்வேண்டும். அதன் கோரிக்கைகளை நிறைவே ற்று நிமித்தம் நாம் பாபங்களைச் செய்யும்படி யதனல் தூண்டப்படுவது கூடாது. "தேவதைகள், பிராமணர் கள்,குருக்கள்,ஞானிகள் இவர்களைப் பூஜிப்பதும்,தேகத் தைச் சுத்தமாய் வைத்துக்கொண்டிருப்பதும், நேர்மை, பிர்ம்மசரியம், அஹிம்சையும் ஆகிய இவைகளே சரீ ரத்தின் தபசு என்று சொல்லப்படுகின்றன" என ஸ்ரீ கிருஷ்ணன் கூறுகின்ருர். இளமைப்பருவம் தான் சரீர த்தை வசப்படுத்திக் கொள்ளுவற்கு தகுந்த காலம். ஏனெனில் இச்சமயத்தில் அதை லகுவாய் ஜயித்து நன் மார்க்கத்தில் நிலைநிறுத்தலாம். சரீரத்தின் வியவஹார

முழுவதும் பழக்கத்தால் ஏற்பட்டதேயன்றி வேறன்று. இப்பழக்கங்களில் ஏதேனும் சிலவற்றை நாம் திருத்த முயலும் பொழுது ஆரம்பத்தில் சரீரம் மிக வூக்கத்துடன் நம்மை எதிர்த்துப் போராட்டம் செய்வது வாஸ்தவமேயாயினும், சின்னாள் இடைவிடாது விடாமுயற்சியுடன் மட்டும் நாம் முயற்சி செய்துவருவோமாயின் சரீரம் ஊக்கம் தளர்ந்து முன்னிருந்த தன்போராட்டத்தை விட்டு நம்மிச்சைக்கு வசமாகி முன்னேற்பட்ட வழக்கங்களைப் போலவே இப்பொழுது ஏற்படுத்தும் நூதன வழக்கத்தையும் சமாதானத்துடன் அனுட்டித்துவர ஆரம்பிக்கின்றது.

பாபம், துக்கம் இவற்றிற்குப் பீஜங்களாய் நம்மால் நீக்கிக்கொள்ளப்பட வேண்டியவற்றுள் முதன்மையானது ஸ்வார்த்தமான ஆசை அதாவது தனம், சம்பத்து உலக வின்பம் இவைகளை யடைய எண்ணும் சுயநல விருப்பமாம். ஒருநாளும் தீர்த்துக்கொள்ள முடியாத இவ்வாசையினின்றும் எழும் துன்பங்களுக்கு அளவு இல்லை. இவைகளை யறவொழிப்பதாலன்றி இவற்றைப் பெற முயன்று பெற்றுக்கொள்ளுவதால் ஒருபோதும் நமக்கு சாந்தி ஏற்படாது. இது முற்காலத்தில் மன்கியென்பவர் கண்டறிந்த விஷயம். அவர் கதை யடியில் வருமாறு. சமீபத்தில் பேராசை கொண்டவரான மன்கி யென்பவர் வெகுகாலம் அவ்வாசைக்கு விஷயமான பொருளைச் சேகரிப்பதில் உழைத்தார். சமயத்துக்குச் சமயம் அவருக்கு நஷ்ட முண்டாகி அவர் எண்ணம் நிறை வேறாமலே சென்றது. அவர் சொத்தில் எல்லாம் போனபின் மிகுந்த அற்ப திரவியத்தைக் கொண்டு உழவுக்காக இரண்டு கன்று

களை வாங்கினர். விதியின் கொடுமையால் அவர் இக்கன்றுகளை ஒன்றோடொன்றாய்க் கயிற்றால் பிணைத்து ஓட்டிக்கொண்டுவரும் மார்க்கத்தில், ஒட்டகமொன்று கன்றுகளின் மத்தியில் திடீரென்று செல்லக் கயிறு அதன் முதுகின் மீது மாட்டிக் கொண்டு இருகன்றுகளும் ஒட்டகத்தின் இருபுறத்திலும் கயிற்றின் நுனிகளில் தொங்கித் தூக்குண்டனபோலிறந்தன. கடைசியான முதலும் இவ்விதம் சேதமானபொழுது மன்கியென்பவருடைய ஹிருதயத்து அறிவு விளங்கி அதன் கண்ணிதுகாறும் தங்கிநின்ற ஆசையும் தங்குமிடமற்று வெளியேறிச்சென்றது. உடனே மன்கியும் பெரும் பார நீத்தவராய்ப் பேரானந்தங்கொண்டு;

"ஆனந்தம் வேண்டுவோன் ஆசையை யொழிக்கவேண்டும். தன் இச்சையின்படி சகலத்தையும் பெறுபவனைக் காட்டிலும் யாதொரு இச்சையும் கொள்ளாதவனே மேலானவனென்று பூர்வத்தில் சுகர்சொல்லியது சரியே ! ஏனெனில் ஒருவன் தன்னுடைய மனோபீஷ்டங்களின்படி சகலத்தையும் முட்டின்றியடைதல் கூடாத காரியமே. ஆதலின் ஓ ! எனது ஹிருதயமே ! இந்நாள்வரை நீ பேராசைக்கு அடிமையாயிருந்தனையே அதுபோதும், இப்பொழுது முதல் முதல் இவ்வடிமை நீங்கிச் சாந்தியின் பரமானந்தங்களை யனுபவிப்பாயாக. வெகுகால முண்மையறியா துறங்கி விட்டேன். ஓ ! ஆசையே! இனியென்னை நீமயக்கிவிடமுடியாது. பாழும் ஆசையே ! இந்நாள்வரை நீ என்னைவருத்தினது கொஞ்சமோ! எப்பேர்ப்பட்ட விஷயத்திலாயினும் என் ஹிருதயத்தை, நீ கையூன்றுவித்துச் செலுத்தினும் அதுலகுவில் என்னாலடையத்தகுந்ததா அல்லவா என்பதைக்கூட

நான் ஆலோசியாமல், அதை எவ்விதத்திலாயினும் சம்பாதிக்கும் பொருட்டு உழைக்கும்படி யடித்து வந்தனையே! உனக்கு அறிவென்பதில்லை! நீ யொருமுட்டாள்! எவ்விதத்தாலும் திருப்தியடையாது சதா மென்மேலும் விறகை யபேக்ஷிக்கும் ஓர் அணையாதநெருப்பன்றோ! நீ. கேவலம் ஆகாசத்தைப்போல் உன்னை நிறைப்பதற்கு யாவராலு முடியாது. உனது ஒரே கருத்தாவது என்னைத்துக்கத்தில் அமிழ்த்துவதேயன்றி வேறன்று. இன்று உன்னை விட்டு நான் பிரிந்தேன். ஓ! ஆசையே! இனியுன்னோடு கூடிச்செல்லேன். உன்னையாகிலும் உன்னைச் சேர்ந்தவைகளையாகிலும் இனியொருநாளும் சேரவிரும்பேன். இதோ என் ஹிருதயத்திலுள்ள சகல பற்றுக்களோடும் உன்னை யொழித்தேன். பூர்வம் செய்வதின்னதெனவறியாது பெரும் துக்கத்திலாழ்ந்திவருந்திய நான் இப்பொழுது பூர்ணமான சாந்தியை யடைந்தேன். இனி எனது ஹிருதயம் முழுமையும் திருப்தியோடும் இந்திரியங்கள் யாவும் பரபரப்பற்றும் விளங்கும்படி நான் காலங்கழிப்பேன். ஓ! எனது சத்துருவே! எனக்குக்கிடைப்பதில்திருப்தியடைந்து வாழ்வேனேயொழிய உன்னைத் திருப்திபண்ணும்பெருட்டு விஷயதிருஷ்டியால் உழைக்கமாட்டேன். உன்னையும் உன் கூட்டத்தையும் ஒழிக்கும் எனக்குச் சாந்தி, நிலையில் நிற்றல், க்ஷமை, காருண்யம் சகல பந்த நிவிருத்தியு மிதோ கிடைத்தன பார்!" என்று சந்துஷ்டியாய்க் கானஞ்செய்துகொண்டு அற்பமாகிய உலக இன்பத்தை மறந்து பரிபூரணமான மஹா சம்பத்தாகிய சாந்தியையடைந்தார்.

யயாதி மகாராஜன் சரிதத்தையும் கேளுங்கள்: இவர் அடங்கா ஆசையால் மெய்ம்மறந்தவராய் எந்நா

ளும் திருப்தியடையாமையே குணமாகவுடைய ஆசை யை முற்றிலும் தீர்த்துக்கொள்ளக்கருதித் தனது சுந்தர முள்ள இளங் குமரனிடமிருந்து அவனுடைய இளமைப் பருவத்தைக் கிரஹித்துக்கொண்டார். இவரது சரித்திர வரலாறு அடியில்வருமாறு காண்க.

சந்திரவம்சத்தைச் சேர்ந்த நகுஷ சக்கிரவர்த்தி யின் குமாரனுகிய யயாதி என்பவர் இந்திரிய இன்பங்க ளில் தலைதெரியாத விருப்பங் கொண்டவராகிப் பாபத் தில் வீழ்ந்தார். இதனாலவருக்குத் தைத்திய அரசர்க ளின் குலகுருவும் தன் மாமனுமான சுக்கிர மஹாரிஷி யின் சாபம் கிடைத்தது. சுக்கிருடைய சாபத்தால் இவ ருக்குக் கம்பீரமான பிரௌடதசையில் தாங்கித் தள்ளா டித் தோல் சுருங்கும் முதுமைப்பருவம் இருந்தாற் போ லிருந்து வந்து சேர்ந்தது. சுக்கிரபகவானைத் திரும்பியு மிவர் மிகவும் வணங்கித் திருப்திசெய்து இரந்து கேட்ட பொழுது, அவர் இவர்மீது கருணைகொண்டு இவரது புத்திரர்களில் எவனுவது மனதுடன் இவருடைய முது மைப்பருவத்திற்கு வதிலாகத் தன்னிளமையைத் தானம் செய்யச் சம்மதிப்பானுகில், ஓர் 1000 வருஷகாலத்திற்கு இவர் அம்முதுமையை நீக்கிக்கொண்டு இளமையை யனுபவிக்கலாமென்று விதித்தனர். உடனேயயாதி தன் குமாரர்கள் ஐவர்களையும் வரவழைத்து இச்சாபவரலாற் றைக்கூறித் தனக்கு இளமையை ஓராயிரவருஷகாலத் திற்குத் தரும்படி அவர்களில் தனித்தனி யொவ்வொ ருவரையும் வினவினன். அவர்களில் ஐந்தாவானும் இளை ஞனுமாகிய புரூ என்பவன் தன் தந்தையிடத்தில் தான் வைத்த அன்பு, விசுவாசங்களால் தன்னிளமையைத் தந்து, ஆயிரவருஷகாலத்திற்கு அவருடைய முது

மையைத்தான் ஏற்றுக்கொண்டனன். இவ்வாறு இளமையடைந்த யயாதியும் அவ்வாயிரவருடகாலம் விடாப்பிடியாய் இம்மாயாவுலக விஷயங்களை யாசைதீர அவனுபவித்து முடித்துக்கொள்ளக் கருத்துகொண்டு, சிற்றின்பங்களை அனுபவிப்பவராயினர். ஆயினுமிவற்றை யனுபவிக்குந் தோறும் இந்திரியங்கள் வெறுப்படையும் காலையிலும் ஆசைமட்டும் மேன்மேலும் ஓங்கியே வருவதைக்கண்டார். இவ்வுலகின் விஷய விருப்பம் எவ்விதமாயினும் அனுபவித்து முற்றுவிக்கவேண்டுமென்று அவர் கொண்ட கருத்து வீணனதேயன்றி வேறல்ல. ஒரு சக்கிரத்தின் குத்துக்கால்களில் ஒன்றையொன்று தொடர்ந்து பின்பற்றிச்செல்லுமாயினும் முன்னுள்ள குத்துக்காலைப் பின்னுள்ளது ஓர் காலத்திலும் தொட்டுப்பிடிப்பதுகூடாததுபோல் இவ்விந்திரிய வின்பங்களை யனுபவித்துத் தீர்ப்பது முடியாதகாரியமே. கடைசியில் அவ்வாயிர வருஷ காலத்தின் முடிவில் யயாதிக்கு மனதில் ஒரு மஹாவைராக்கியம் பிறந்து ஆசையானது நீக்குதலாலல்லது யனுபவித்தலால் தீராது என்று கண்டார். உடனே புரூவை வரவழைத்து அவனிடமிருந்த தமது முதுமையை மிகவும் சந்தோஷத்துடன் ஏற்றுக்கொண்டு அவனுக்கு அவன் இளமையையும் இராஜ்ஜியத்தையுங்கொடுத்துத் துறவு பூண்டு வனத்துக்கு ஏகினர். அச்சமயத்தில் தமது ஆயுள்முழுதும் செலவழித்துக் கண்டறிந்த வுண்மையைத் திரட்டியமைத்து,

"ஆசை விஷயங்களை அனுபவித்தலால் அணையாது ; ஆச்சியயாகுதியால் அக்நி ஜ்வலித்து ஓங்குவது போல் ஆசையும் பலவாருக விருத்தியடையுமே தவிர வேறன்று" எனத்தீர்மானித்தார்.

இனி மேற்கூறிய ஸ்ரீ கிருஷ்ண வசனத்தில் உள்ள அஹிம்சையைச் சற்று ஆலோசிப்போம். "அஹிம்சையே பரம தர்மம்" எனப்பீஷ்மரும் கூறினார். நாம் எதையும் ஹிம்சித்தல் கூடாது. நமது வாழ்க்கை முழுவதும் பிறர்க்குபகாரத்திற்கு ஹேதுவாகவேண்டுமே யொழிய அபஹாரத்திற்காகலாகாது. சரீரேந்திரியங்களை அடக்குவதினாலேயே பிறர்க்குத் தீங்கு செய்யாமையும் தங்கியிருக்கின்றது. பிருகஸ்பதி ஆனவர் "சர்வபூத தயையே தர்மமாக அனுஷ்டிப்பவன் பரகதியை யடைகிறான். ஆதலின் தனக்குக் கெடுதலெனத் தோன்றும் எதையும் ஒருவன் பிறர்க்கு எக்காலத்திலும் செய்யலாகாது. இதுவே சுருக்கிச் சொல்லில் தர்ம்மமார்க்கத்தின் ஆட்சியாகு" மெனக்கூறியுள்ளார்.

ஜனங்கள் பெரும்பாலும் அறியாமையால் யோசனையின்றிப் பிறர்க்கு ஹிம்சைபுரிந்து தமக்குப் பிற்காலத்தில் வருத்தத்தைத் தேடிக்கொள்ளுகிறார்கள். உதாரணம்:—யுதிஷ்டிரனும், துரியோதனனும் மற்றைய சகோதரர்களும் சிறுவர்களாயிருந்தபொழுது ஒரேயிடத்தில் சேர்ந்து வாசித்துக் கல்விகற்று வந்தார்கள். அப்பொழுது அவர்கள் யாவரினும் மிகுந்த பலவானான பீமன் தன்னினு மிளைஞர்களும் பலங்குறைந்த வர்களுமான சகோதரர்களிடம் தனது மேம்பட்டபலத்தைக் காட்டி யநேகஞ்சமயங்களில் முரட்டுத்தனமாய்ப் பல விளையாட்டுகளைச் செய்து வந்தனன். இவர்களில் சிலர் ஒரு சமயத்தில் பழம் பறிக்க ஒருமரத்தின் உச்சியில் ஏறியபொழுது பீமன் அடிமரத்தை தன்னிருகைகளாலும் பிடித்து ஆட்டி மேலிருந்த சிறுவர் யாவரும் பழு [illegible] பாத்தென்று விழுவதுபோல் கீழே

விழும்படி மரத்தை யசைக்குவான் ; பீமனுமிதைப்பார்த்துப் பெரியவிளையாட்டாக பாவித்துப் சிரிப்பான். பின்னோர் தடவை அவர்கள் வெளியேறி ஹஸ்திநாபுரத்தின் கோட்டை மதிலருகிலோடும் நதியில் நீந்தி ஸ்நாநம்செய்யும்பொழுது பீமன் மற்றப்பிள்ளைகளுக்கு அடியில் நீந்திச் சென்று அவர்களில் அநேகரைப் பிடித்துக் கொண்டு ஆழத்தில் மூழ்கி அவர்களை யமிழ்த்தி மூச்சடங்கிப் பிராணனை போனற்போலாகும்படி செய்வான். பீமனுக்கிருந்த சுவாஸ வலிமையால் இச்சமயங்களில் அவனுக்கு எள்ளளவும் சங்கடம் உண்டானதில்லை. இப்படி மற்றவர்கள் கஷ்டமடைந்தபொழுது அவனுக்குக் கொண்டாட்டமா யிருந்தது. அவர்களுக்கோ மனது புண்ணாயிற்று. இதனால் உண்டான பலன் என்ன ? துவேஷமும் வெறுப்பும் உள்ளுக்குள்ளேயே கனிந்து வரும் நெருப்பைப் போல் நிலைபெற்றுப் பிற்காலத்தில் கௌரவர், பாண்டவர் இருதிறத்தாரையுமே பூர்ணமாய் விழுங்கிய ஓர் பெரும் போராய் முடிந்தது. சிறுவனாகிய பீமன் யோசனையின்றிச் செய்துவந்த முரட்டுத்தனமான விளையாட்டு மகாபாரதப்போரை விளைவித்த பல காரணங்களுள் ஒன்று. விறகிருந்தாலன்றித் தீப்பற்றாது என்பதும் சரீரத்தின் பாகம் கெட்டிருந்தாலொழிய விஷாங்குரக்கிருமி வியாதியை ஏற்படுத்தாது என்பதும் வாஸ்தவமே. ஆயினும், தீப்பற்றச்செய்யும் நெருப்புப்பொறி விறகினிட மணுகாமலும் மரணத்தைத்தரும் விஷாங்குரக்கிருமி சரீரத்துட்செல்லாமலும் நம்மால் கூடியவரை பாதுகாத்து வருவது நமது கடமையன்றோ ! ஒருவன் ஞானமின்றிப் பலத்தை யுபயோகித்து எதிர்க்கமுடியாத பலங்குறைந்

தவர்களைத் துன்புறுத்தினுல், பலங்குறைந்தவர் மனதி னுதிக்கும் கோபம் வெளியிடப்படமுடியாததால் உள் ளடக்கப்பட்டு விருத்தியடைந்து நாளடைவில் உல கத்தாரால் இகழ்ந்துரைக்கப்படும் துவேஷம், மாத்ஸரிய மிவைகளாக மாறி விடுகின்றது. உண்மையில் பலங் குறைந்தவரைப் பலமிகுந்தவர் யோசனையின்றித் துன்பு றுத்தலே மாத்ஸரியாதிகளைக்காட்டிலும் அதிக மிக ழத்தக்கது. தன்னந்தரங்கத்தில் குரூர சிந்தனைகளையே யுடைய மானிடரது மேலெழுந்த திருஷ்டிக்கு மட்டும் இவ்வித நடத்தை குற்றமற்றதாயும், மிகவுயர்ந்ததாயுங் காணக்கூடுமே தவிர உத்தமமான வீரியமுடையவர்க ளுடைய யதார்த்த திருஷ்டிக்கு அவைஉண்மையில் இழிவும் குரூரமும் பொருந்தியதாகவே விளங்குமென் பதில் தடையுண்டோ? மாபாரத சரிதத்தை மிக்க கவ னத்துடன் விசாரிப்பவர்க்குப் பாண்டவர்கள் முற் றிலும் குற்றமற்றவர்களென்பதும் கௌரவர் முற்றி லும் குற்றமே நிறைந்தவரென்பதும் நிச்சயமாய்த் தெரி யும்.

மனோவாக்கு காயமிம்மூன்றின் ஐயமும் தர்ம சுபாவம் கொடுக்கின்றது. முதலில் நற்சீலமும் பின்னதற்கேற்ற நன்னடக்கையுமிஃதால் ஏற்படுகின் றது. தனக்குச் சமீபத்திலுள்ளவைகளான தன் மனோ பாவம், தன் மனது, சரீர மிவற்றோடும் சம்பந்தங்களை யொழுங்குபெற அமைத்துக்கொண்டு, அதனுல் மேற்றி சைத் தர்மாதர்மவிசாரப் புத்தகங்களில் "தன்னையே நோக்கியவை" அல்லது "தன்னைச்சேர்ந்தவை" களென க் குறிக்கப்படும் நற்குணங்களைச் சம்பாதித்துக் கொ ண்டவொருமனிதன் மிகச்சுலபமாய் அப்புத்தகங்களில்

கூறப்படும் மேற்பட்ட தர்மங்களான "பரோபகார மானவை" அதாவது இதர மானிடர்க்கும் தனக்குஞ் சம்பந்தப்பட்டவைகளை யனுஷ்டிக்கத் தகுதியடைகிறான்.

இனி இதர மனிதர்களோடும் நாம் பழகுங்கால் ஏற்படும் தர்மாதர்மங்களை விசாரிப்போம். அவற்றை அடியில்வரும் மூன்று விபாகங்களாய்ப் பிரிக்கலாம். அவையாவன:—

(1) நம்மிலும் மேலோரிடம் நாம் பழகும் பொழுது ஏற்படும் தர்மங்களும் அதர்மங்களுமெனவும்.

(2) நமக்குச் சமானர்களிடம் நாம் பழகும்பொழுது ஏற்படும் தர்மங்களும் அதர்மங்களுமெனவும்.

(3) நம்மிலுங் கீழோரிடம் நாம் சம்பந்திக்கும் பொழுது உண்டாகும் தர்மங்களும்தர்மங்களுமெனவும்.

இவ்வித விபாகத்தில் நம்மைச் சூழ்ந்திருக்கும் சகலரோடும் நாம் ஒழுங்குபெற நமது விவஹாரங்களை யேற்படுத்திக் கொள்வதற்கு வேண்டிய தர்மங்களை நாம் தெரிந்துகொள்ளலாம். அவையின்னவையென விசதமாயறிந்து கொண்டபின் நாமவற்றையடைய முயற்சியும் செய்யலாம். அன்றியும் நமது விவஹாரங்களில் ஒழுங்கின்மை யல்லது ஒற்றுமையின்மையை வருவிப்பனவாகிய அதர்மங்களையும் நாமிவ் விபாகத்தாலறிந்துகொண்டு அவற்றை விலக்குவதற்கு முயற்சியும் செய்யலாம். சகல தர்மங்களும் அன்பு அல்லது பிரீதியையே யாதாரமாக வுடையன. ஆநந்தத்தையே பலமாக வுடையன. சகல அதர்மங்களும் ஒருவனது துவேஷத்தினின்றுமே ஜனிக்கின்றன. பின் துக்கமாகவே முடிகின்றன.

## பிரமாணங்கள்.

[illegible]

........................................

[illegible]

[illegible]

சுபமும் அசுபமுமானபலன்களைத்தரும் கருமமானதுமனது, வாக்கு, தேகமிவற்றிலுண்டாகின்றது. ஆதலின் மானிடரின் கதிகள் அவரவர் கருமத்திற்குத்தக்கபடி உத்தமாதமமத்திமமாகின்றன.

பத்து லக்ஷணங்கள், மூன்றதிஷ்டானங்கள் மூவித சுபாவங்கள் இவைகளையுடைய தேகிக்கு மனதே யாட்டுவிக்கும் கருவியாயிருக்கின்றதென்று அறி.

இந்த ஜீவன், மனதாலாகியதை மனதாலேயேயனுபவிக்கிறான். அப்படியேவாக்காலாகியதை வாக்காலும், காயத்தாலாகியதைக் காயத்தாலுமனுபவிக்கிறான்.

வாக்கின் தண்டம் (தண்டித்த லென்றால் அடக்கம்), மனதின் தண்டம், கருமத்தின் தண்டம், இம்முத்தண்டங்களையும் எவன் தன் புத்தியில் ஸ்திரமாய் அமைத்துக்கொள்ளுகிறானோ அவனே திரிதண்டியாவான்.

இத்திரிதண்டத்தைச் சர்வபூதங்களிடத்திலும் பிரயோகித்துக் காமக்குரோதத்தை யடக்கி ஜீவன் சித்தியை யடைகிறான்.

மனுஸ்மிருதி. XII, 3, 4, 8, 10, 11.

𑌦𑍇𑌵𑌦𑍍𑌵𑌿𑌜𑌗𑍁𑌰𑍂𑌣𑌾𑌞𑍍𑌚 𑌦𑍇-
𑌵𑌤𑌾𑌤𑌿𑌥𑌿𑌪𑍂𑌜𑌨𑌮𑍍 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑌮𑌹𑌿𑌂𑌸𑌾 𑌚 𑌶𑌾-
𑌰𑍀𑌰𑌂 𑌤𑌪 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥
𑌅𑌨𑍁𑌦𑍍𑌵𑍇𑌗𑌕𑌰𑌂 𑌵𑌾𑌕𑍍𑌯𑌂 𑌸-
𑌤𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌹𑌿𑌤𑌂 𑌚 𑌯𑌤𑍍 ।

தேவர், பிராம்மணர், குரு, தேவதை, அதிதி, இவர்களைப் பூஜிப்பதும், பிர்ம்மசரியமும், அஹிம்சையும், சரீரத்தினாலே செய்யத்தகுந்த தபசென்று சொல்லப்படுகின்றன.

𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌾𑌭𑍍𑌯𑌸𑌨𑌂 𑌚𑍈𑌵
𑌵𑌾𑌙𑍍𑌮𑌯𑌂 𑌤𑌪 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

பிறர் மனதைப்புண் படுத்தாத்தும், நிஜமானதும், இன்பந்தரத் தக்கதும், பிரயோஜனகரமானதுமான வார்த்தையும், வேதசாஸ்திரங்களுடைய அப்பியாசமும் வாக்கின் தபஸென்று சொல்லப்படுகின்றது.

𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌃 𑌸𑍌𑌮𑍍𑌯𑌤𑍍𑌵𑌂
𑌮𑍌𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ।

𑌭𑌾𑌵𑌸𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍
𑌤𑌪𑍋 𑌮𑌾𑌨𑌸𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

மனதின் தெளிவும், குரூரமின்மையும், மௌனமும், தன்னடக்கமும், சுத்தமான சுபாவமும், மனதினலனுஷ்டிக்கத்தக்க தபஸென்று சொல்லப்படுகின்றது.

பகவத்கீதை : 14, 15, 16, XVII.

𑌨𑌜𑌾𑌤𑍁𑌕𑌾𑌮𑌃 𑌕𑌾𑌮𑌾𑌨𑌾𑌮𑍁𑌪
𑌭𑍋𑌗𑍇𑌨 𑌶𑌾𑌮𑍍𑌯𑌤𑌿 ।

𑌹𑌵𑌿𑌷𑌾 𑌕𑍃𑌷𑍍𑌣𑌵𑌰𑍍𑌤𑍍𑌮𑍇𑌵
𑌭𑍂𑌯 𑌏𑌵𑌾𑌭𑌿𑌵𑌰𑍍𑌧𑌤𑍇 ॥

காமங்களின் விஷயங்களை யனுபவித்தலால் காமம் ஒருபொழுதுசமனத்தையடையாது ; அக்கினியானது ஹவிஸினல் எப்படியோ அப்படியே அது (காமம்) மென்மேலும் அபிவிர்த்தி யடைகிறது.

மஹாபாரதம் அனுசாசன பர்வம் (cxvi. 37.)

𑌅𑌸𑌂𑌶𑌯𑌂 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌮
𑌨𑍋 𑌦𑍁𑌰𑍍𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌂 𑌚𑌲𑌮𑍍 ।

𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌨 𑌤𑍁 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇
𑌯 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑍇𑌣 𑌚 𑌗𑍃𑌹𑍍𑌯
𑌤𑍇 ॥

𑌯𑌤𑍋 𑌯𑌤𑍋 𑌨𑌿𑌶𑍍𑌚𑌰𑌤𑌿 𑌮𑌨
𑌶𑍍𑌚𑌞𑍍𑌚𑌲𑌮𑌸𑍍𑌥𑌿𑌰𑌮𑍍 ।

𑌤𑌤𑌸𑍍𑌤𑌤𑍋 𑌨𑌿𑌯𑌮𑍍𑌯𑍈𑌤
𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵 𑌵𑌶𑌂 𑌨𑌯𑍇𑌤𑍍 ॥

பகவத்கீதை VI. 35. 26.

𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌽𑌪𑍍𑌯𑌸𑌮𑌰𑍍𑌥𑍋
𑌽𑌸𑌿 𑌮𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌪𑌰𑌮𑍋 𑌭𑌵 ।

𑌮𑌦𑌰𑍍𑌥𑌮𑌪𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌕𑍁𑌰𑍍𑌵
𑌨𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 ॥

பகவத்கீதை XII. 10.

புஜபலமுள்ள அர்ஜுநா! மனது அடக்குவதற்குப்பிரயாசமென்பதிலும், சஞ்சலமான தென்பதிலும், சந்தேகமில்லை. ஆயினும் பழக்கத்தாலும் வைராக்கியத் தாலும் அதையடக்கலாம்.

நிலையற்றதும், சஞ்சலமுமான மனது எங்கெங்கு செல்லுகிறதோ ஆங்காங்கிருந்து அதைத்திருப்பி ஆத்மாவினிடத்தில் வசப்படுத்தவேண்டும்.

அப்பியாசத்திலும் அசமர்த்தனுயிருப்பாயாகில் எனக்குப் பிரீதியை யுண்டுபண்ணும் வேலைகளைச்செய், எனது பிரீதிக்காக வேலைகளைச்செய்து வருவதாலும் நீ சித்தியடைவாய்.

𑌨𑌿𑌤𑍍𑌯𑍋𑌽𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌚𑍇𑌤𑌨𑌶𑍍𑌚𑍇𑌤𑌨𑌾𑌨𑌾𑌮𑍍 ।
𑌏𑌕𑍋 𑌬𑌹𑍂𑌨𑌾𑌂 𑌯𑍋 𑌵𑌿𑌦𑌧𑌾𑌤𑌿 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 ।
𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌥𑌂 𑌯𑍇𑌽𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌧𑍀𑌰𑌾𑌸𑍍𑌤𑍇𑌷𑌾𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍀 𑌨𑍇𑌤𑌰𑍇𑌷𑌾𑌮𑍍 ॥

நித்தியவஸ்துக்களுக்கெல்லாம் நித்தியமாயும், சேதனவஸ்துக்களுக்கெல்லாம் சேதனமாயும், தான் ஏகமாய்நின்று சகலபிராணிகளுக்கும் கர்மாதிகளையுண்டு பண்ணுவதாயும், இருக்கிற பரவஸ்துவைத் தம்முள்ளே தரிசனம் பண்ணும் பெரியோர்க்கல்லாமல் அழியாத சாந்தியானது பிறர்க்குக்கிட்டாது.

கடோபநிஷத் V. 13.

[illegible]

தனலோபத்தால் கெட்டுப்போன புத்தியுள்ளவர்களுக்குச் சுற்றத்தார் பிறவிசத்துருக்கள் என்னும் நினைவுண்டாகின்றது. அறிவையே தனமாகக் கொண்டவர்க்குப் பெரியோர், சமானர், தாழ்ந்தோர் ஆகிய இம்முத்திறத்தோர் நிறைந்தவுலகமுழுவதும் பெற்றோர், புத்திரர், மித்திரர்களால் நிறைந்திருப்பதாகவே தோன்றுகின்றது.

மகாபாரதம் உத்தியோக பருவம் ii. 17.

ஸ்வபாவமேகே கவயோவ
தந்தி காலம் ததாந்யே பரி
முஹ்யமாநா: |

தேவஸ்யைஷ மஹிமா து லோ
கே யேநேதம் ப்ராம்யதே
ப்ரஹ்மசக்ரம் |

சில பெரியோர்கள் இதைச் சுவபாவமென்றும், வேறுசிலர் மயங்கினவர்களாய்க் காலமென்றும் சொல்லுகிறார்கள்:—இந்த பிரபஞ்சமாகிய பிரம்ம சக்கிரம் சுழன்று வருவது ஈசுவரனது மஹிமையாலேயே யன்றி வேறன்று.

தமீஶ்வராணாம் பரமம் மஹே
ஶ்வரம் தம் தேவதாநாம் பர
மம் ச தைவதம் |

பதிம் பதீநாம் பரமம் ப
ரஸ்தாத் விதாம தேவம் புவநே
ஶமீட்யம் ||

அவன் ஈசுவரர்களிலும் பரமனுனமகேசுவரனென்றும், தேவதைகட்குள்ளும் பரமமானதேவதை யென்றும், சகலவதிபதிகளுக்கும் மேலான வதிபதியென்றும் புவனங்களுக்கு ஈசனென்றும் (நாங்கள்) அறிவோம்.

ந தஸ்ய கார்யம் கரணம் ச வித்ய
தே | ந தத்ஸமஶ்சாப்யதிகஶ்ச த்ரு
ஶ்யதே | பராஸ்ய ஶக்தி
ர்விவிதைவ ஶ்ரூயதே |
ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச

அவனுக்குக் காரியமாவது, கருவியாவது இல்லை. அவனுக்குச் சமானமானவனுவது உயர்ந்தோனுவது கிடையாது. அவனுக்கு

ந தஸ்ய கஶ்சித் பதிரஸ்தி லோகே। ந சேஶிதா நைவ ச தஸ்ய லிங்கம்। ஸ காரணம் கரணாதிபாதிபோ। ந சாஸ்ய கஶ்சிஜ்ஜநிதா ந சாதிப:॥

ஞானம், பலம், கிரியை இவற்றையடக்கிக்கொண்டதும், எண்ணிறந்தவிதங்களாய்ப் பிரகாசிக்கக் கூடியதுமான மகாசக்தியியற்கையில்உண்டு. உலகில் அவனுக்கு அதிபதியாவது, யஜமானாவது அடையாளமாவது கிடையாது. அவனே சகல வுலகிற்கும் காரணன், இந்திரியங்களினதிபதிகளுக்கு மதிபதி, அவனைப்பிறப்பிப்பவனும், அடக்கியாளுபவனும் கிடையாது.

ஏகோ வஶீ நிஷ்க்ரியாணாம் பஹூநாம் । ஏகம் பீஜம் பஹுதா ய: கரோதி। தமாத்மஸ்தம் யே(அ)நுபஶ்யந்தி தீராஸ் தேஷாம் ஸுகம் ஶாஶ்வதம் நேதரேஷாம்॥

கிரியையற்றவரநேகர்க்கும் ஒரேநாதனாய், ஒரே பீஜத்தை (உலகமாகும்படி) பலவிதங்களாய்ச் செய்பவனாயும் விளங்குகிறான். எந்ததீரர்கள் அவனைத் தம்முள் தரிசிக்கிறார்களோ அவர்களுக்கேசாசுவதமான சுகம். மற்றவர்கட்குக் கிட்டாது.

𑌨𑌿𑌤𑍍𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌚𑍇𑌤𑌨
𑌶𑍍𑌚𑍇𑌤𑌨𑌾𑌨𑌾𑌂। 𑌏𑌕𑍋 𑌬
𑌹𑍂𑌨𑌾𑌂 𑌯𑍋 𑌵𑌿𑌦𑌧𑌾𑌤𑌿 𑌕𑌾
𑌮𑌾𑌨𑍍। 𑌤𑌤𑍍𑌕𑌾𑌰𑌣𑌂 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯
𑌯𑍋𑌗𑌾𑌧𑌿𑌗𑌮𑍍𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌦𑍇
𑌵𑌂 𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵 𑌪𑌾
𑌶𑍈𑌃॥

சாசுவதங்களுக்கெல்லாம் சாசுவதமும், சேதனங்கட்குள்ளெல்லாம் உன்னதமான சேதனனும், அநேகர்க்குள்ளேகனும் எவன் சகலரின் விருப்பங்களையு மளிக்கிருனே சாங்கியயோகங்களாலடையக் கூடிய அந்தக் காரணனாகிய தேவனையடைந்து மனிதன் சர்வசங்கத்தினின்றும் விடுபடுகிறுன்.

𑌅𑌰𑌾𑌜𑌕𑍇 𑌹𑌿 𑌲𑍋𑌕𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍। 𑌸
𑌰𑍍𑌵𑌤𑍋 𑌵𑌿𑌦𑍍𑌰𑍁𑌤𑍇 𑌭𑌯𑌾𑌤𑍍।
𑌰𑌕𑍍𑌷𑌾𑌰𑍍𑌥𑌮𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯
𑌰𑌾𑌜𑌾𑌨𑌮𑌸𑍃𑌜𑌤𑍍𑌪𑍍𑌰𑌭𑍁𑌃।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌨𑌿𑌲𑌯𑌮𑌾𑌰𑍍𑌕𑌾𑌣𑌾𑌮𑌗
𑌗𑍍𑌨𑍇𑌶𑍍𑌚 𑌵𑌰𑍁𑌣𑌸𑍍𑌯 𑌚। 𑌚𑌨𑍍
𑌦𑍍𑌰𑌵𑌿𑌤𑍍𑌤𑍇𑌶𑌯𑍋𑌶𑍍𑌚𑍈𑌵𑌮𑌾𑌤𑍍𑌰𑌾
𑌨𑌿𑌰𑍍𑌹𑍃𑌤𑍍𑌯 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍀𑌃। 𑌤
𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂

அரசனற்ற இந்தவுலகில் பயத்தால் ஜனங்கள் நாற்புறமும் சிதறியோடியபொழுது, இந்திரன், வாயு, யமன், அருக்கன், அக்கி, வருணன், சந்திரன், குபேரன், இவர்களிடமிருந்து (ஸ்திரமான) (அழிவற்ற) பாக்கியமான அம்சங்களைக் கிரஹித்து அரசனை

𑌗𑍋𑌪𑍍𑌤𑌾𑌰𑌂𑌧𑌰𑍍𑌮𑌮𑌾𑌤𑍍𑌮𑌜𑌮𑍍 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌤𑍇𑌜𑍋𑌮𑌯𑌂𑌦𑌣𑍍𑌡𑌮
𑌸𑍃𑌜𑌤𑍍𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌃 ॥

சுவரன்சிருஷ்டித்தார். அதற்காக சகலபூதங்களையும் ரக்ஷிப்பதுவும் பிரம்ம தேசுகள்நிறைந்ததுவுமான தனது குமாரனாகியசெங்கோலை (அதிகாரத்தை) பூர்வத்தில் ஈசுவரன் சிருஷ்டித்தார்.

𑌦𑌣𑍍𑌡𑌃𑌶𑌾𑌸𑍍𑌤𑌿𑌪𑍍𑌰𑌜𑌾𑌃𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 । 𑌦𑌂
𑌡𑌏𑌵𑌾𑌭𑌿𑌰𑌕𑍍𑌷𑌤𑌿 । 𑌦𑌂𑌡𑌃𑌸𑍁
𑌪𑍍𑌤𑍇𑌷𑍁𑌜𑌾𑌗𑌰𑍍𑌤𑌿, 𑌦𑌣𑍍𑌡𑌂𑌧
𑌰𑍍𑌮𑌂𑌵𑌿𑌦𑍁𑌰𑍍𑌬𑍁𑌧𑌾𑌃 । 𑌤
𑌸𑍍𑌯𑌾𑌹𑍁𑌃𑌸𑌂𑌪𑍍𑌰𑌣𑍇𑌤𑌾𑌰𑌂
𑌰𑌾𑌜𑌾𑌨𑌂𑌸𑌤𑍍𑌯𑌵𑌾𑌦𑌿𑌨𑌮𑍍 । 𑌸
𑌮𑍀𑌕𑍍𑌷𑍍𑌯𑌕𑌾𑌰𑌿𑌣𑌂𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌂 𑌧
𑌰𑍍𑌮𑌕𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌕𑍋𑌵𑌿𑌦𑌮𑍍 । 𑌤𑌂
𑌰𑌾𑌜𑌾 𑌪𑍍𑌰𑌣𑌯𑌨𑍍𑌸𑌮𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌰𑌿 𑌵
𑌰𑍍𑌗𑍇𑌣𑌾𑌭𑌿𑌵𑌰𑍍𑌧𑌤𑍇 । 𑌕𑌾
𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌵𑌿𑌷𑌮𑌃𑌕𑍍𑌷𑍁𑌦𑍍𑌰𑍋 𑌦𑌂
𑌡𑍇𑌨𑍈𑌵𑌨𑌿𑌹𑌨𑍍𑌯𑌤𑍇 ।
𑌦𑌂𑌡𑍋𑌹𑌿𑌸𑍁𑌮𑌹𑌤𑍍𑌤𑍇𑌜𑍋
𑌦𑍁𑌰𑍍𑌧𑌰𑌶𑍍𑌚𑌾𑌕𑍃𑌤𑌾𑌤𑍍𑌮𑌭𑌿𑌃 ।
𑌧𑌰𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌿𑌚𑌲𑌿𑌤𑌂𑌹𑌨𑍍𑌤𑌿 𑌨𑍃𑌪
𑌮𑍇𑌵𑌸𑌬𑌾𑌨𑍍𑌧𑌵𑌮𑍍 ॥

(அரசனது) செங்கோலே சகலபிரஜைகளையும் ஆளுகின்றது. செங்கோலே அவர்களை ரக்ஷிக்கின்றது. செங்கோலே அவர்கள் உறங்கும் பொழுதும் விழிப்புடனிருந்து வருகின்றது. செங்கோலையே தர்மமென்று பெரியோர் கூறுவர். அச்செங்கோலை நடாத்துவோனை, நன்மையைச் செய்பவனும், சத்தியம்பேசுவோனும், புத்திமானும், தர்மம், காமம், அர்த்தமிம் மூவர்க்கத்தையு மறிந்தவனுமாகிய அரசன் என்று பெரியோர் கூறுவர்.

அஃதை யொழுங்குடன் செலுத்திவரும் அரசன் மேற்கூறிய மூவர்க்கத்திலும் விருத்தியடைவன். அப்படியில்லாமல் காமத்துக்காட்பட்டவனாய் அநியாயம், இழிவுடையோனாயின், அவன் செங்கோலாணையாலேயே நாசமடைகிறான்.

செங்கோலென்பது ஒரு பெரு நெருப்பு; ஆத்மாவை யடையாதவர்களால் தரிப்பதற் கசாத்தியமானது; தர்மத்தைவிட்டொதுங்கின அரசனையும் பந்துக்களுடன் அழித்துவிடும்.

மனுஸ்மிருதி Vii. 3, 4, 14, 18. 26-28.

𑌤𑍇𑌨 𑌧𑌰𑍍𑌮𑍋𑌤𑍍𑌤𑌰𑍇𑌣𑌾𑌯𑌂 𑌕𑍃-
𑌤𑍋 𑌲𑍋𑌕𑍋 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 ।
𑌰𑌂𑌜𑌿𑌤𑌾𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌜𑌾 𑌸𑌰𑍍𑌵𑌾𑌸𑍍
𑌤𑍇𑌨 𑌰𑌾𑌜𑍇𑌤𑌿 𑌶𑌬𑍍𑌦𑍍𑌯𑌤𑍇 ।

மஹாபாரதம் சாந்திபருவம் Lix. 145.

அம்மஹானுபாவரால் உலகம் தர்மம் நிறைந்ததாக்கப் பட்டது. சகல பிரஜைகளும் ரஞ்சிக்கப்பட்டார்கள். (அவ்வித ரஞ்சனத்தால்) அதனால் ராஜா என்று அவருக்குப் பெயர் கிடைக்கின்றது.

𑌰𑌾𑌜𑌾 𑌪𑍍𑌰𑌜𑌾𑌨𑌾𑌂 𑌹𑍃𑌦𑌯𑌂 𑌗𑌰𑍀𑌯𑍋 𑌗𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾 𑌸𑍁𑌖𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌂𑌚 । 𑌸𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾 𑌲𑍋𑌕𑌮𑌿𑌮𑌂 𑌪𑌰𑌂𑌚 । 𑌜𑌯𑌨𑍍𑌤𑌿 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾 𑌨𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑍍 ॥

அரசன் பிரஜைகளின் அந்தரங்கமான ஹிருதயமே. அவர்களுக்கு கதியும் ஆதாரமும் உத்தமமான சுகமும் அவனே. ஆதலால் அவனை நம்பினால் மனிதர் இவ்வுலகம் மறுவுலகங்களை செவ்வையாய் அடையலாம்.

𑌨𑌰𑌾𑌧𑌿𑌪𑌶𑍍𑌚𑌾𑌪𑍍𑌯𑌨𑍁𑌶𑌿𑌷𑍍𑌯 𑌮𑍇𑌦𑌿𑌨𑍀𑌂 𑌦𑌮𑍇𑌨 𑌸𑌤𑍍𑌯𑍇𑌨 𑌚 𑌸𑍌𑌹𑍃𑌦𑍇𑌨 । 𑌮𑌹𑌦𑍍𑌭𑌿𑌰𑌿𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌕𑍍𑌰𑌤𑍁𑌭𑌿𑌰𑍍𑌮𑌹𑌾𑌯𑌶𑌾 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌷𑍍𑌟𑌪𑍇 𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑍁𑌪𑍈𑌤𑌿 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌮𑍍 ॥

மஹாபாரதம் LXViii. 59. 60.

அரசன் லோகத்தைத் தன்னடக்கம், சத்தியம், காருண்யநிறைந்த சிந்தை யிவற்றுடன் ஆண்டு மகாயக்ஞங்களையும் செய்து பெருங்கீர்த்தியையும் ஸ்வர்க்கத்தில் சாசுவதமான ஸ்தானத்தையு மடைகிறான்.

𑌉𑌪𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌾𑌨𑍍𑌦𑌶𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌨𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌶𑌤𑌂 𑌪𑌿𑌤𑌾 ।

𑌸𑌹𑌸𑍍𑌰𑌂 𑌤𑍁 𑌪𑌿𑌤𑍄𑌨𑍍𑌮𑌾𑌤𑌾 𑌗𑍌𑌰𑌵𑍇𑌣𑌾𑌤𑌿𑌰𑌿𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

ஆசார்யன்பத்துஉபாத்தியாயர்களுக் கதிகமாகிறான். ஆசாரியர்களில் நூற்றுவர்க்கு பிதாவதிகம்; மாதா நூறுபிதாக்களுக்கும் மதிப்பில் அதிகமாவ

ஆசார்யஶ்ச பிதா சைவ மாதா
ப்ராதா ச பூர்வஜ꞉ । நா
ர்த்தேநாப்யவமந்தவ்யா
ப்ராஹ்மணேந விஶேஷத꞉ ॥

தேஷாம் த்ரயாணாம் ஶுஶ்ரூ
ஷா பரமம் தப உச்யதே ।
த ஏவ ஹி த்ரயோ லோகா꞉ த
ஏவ த்ரய ஆஶ்ரமா꞉ ।
த ஏவ ஹி த்ரயோ வேதா꞉ த
ஏவோக்தாஸ்த்ரயோ(அ)க்நய꞉ ।

ஸர்வே தஸ்யாத்ருதா தர்மா ய
ஸ்யைதே த்ரய ஆத்ருதா꞉
அநாத்ருதாஸ்து யஸ்யை
தே ஸர்வாஸ்தஸ்யாபலா꞉
க்ரியா꞉ ॥

மனுஸ்மிருதி ii. 225, 229, 230, 234.

ள் ; ஆசாரியன், பிதா மாதா, மூத்தசகோதரன் இவர்களைப் பிராமணன் தான் துன்பமடைந்தபொழுதும் அவமதிக்கப்படாது. அம்மூவர்க்கும் சேவை புரிதல் உயர்ந்த தபசெனக் கூறப்படுகின்றது.

அவர்களே மூன்று லோகமும் ; அவர்களே மூன்று வாசிரமங்களும், அவர்களே மூன்று வேதங்களும், அவர்களே மூன்று அக்நிகளுமென்று கூறப்பட்டிருக்கின்றது.

இம்மூவர்களையும் எவன் ஆதரிக்கின்றானோ அவன் சகல தர்மங்களையும் செய்துமுடித்தவன். எவன் அவர்களை யாதரிக்கின்றானில்லையோ அவனுக்கு சகல தர்மங்களும் பயனற்றவைகளாகின்றன.

𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾 𑌹𑍍𑌯𑍁𑌤𑍍𑌕𑍍𑌰𑌾𑌮𑌂
𑌤𑌿 𑌯𑍂𑌨𑌃 𑌸𑍍𑌥𑌵𑌿𑌰 𑌆𑌯𑌤𑌿 𑌪𑍍𑌰
𑌤𑍍𑌯𑍁𑌤𑍍𑌥𑌾𑌨𑌾𑌭𑌿𑌵𑌾𑌦𑌾𑌭𑍍𑌯𑌾𑌂
𑌪𑍁𑌨𑌸𑍍𑌤𑌾𑌨𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌤𑍇

மூத்தவர் ஒருவர் எதிர்நோக்கி வரும்பொழுது ஒரு சிறுவனுடைய பிராணன்கள் வெளிச்செல்லுவதற்கு உயரக் கிளம்புகின்றன; அவரை யெதிர்சென்று வந்தனை செய்வதால் அவன் அப்பிராணன்களைத் திரும்பி யடைகிறான்.

𑌅𑌭𑌿𑌵𑌾𑌦𑌨𑌶𑍀𑌲𑌸𑍍𑌯 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑍃
𑌦𑍍𑌧𑍋𑌪𑌸𑍇𑌵𑌿𑌨𑌃॥ 𑌚𑌤𑍍𑌵𑌾𑌰𑌿
𑌤𑌸𑍍𑌯 𑌵𑌰𑍍𑌧𑌨𑍍𑌤𑍇 𑌆𑌯𑍁𑌃
𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌯𑌶𑍋 𑌬𑌲𑌮𑍍॥

பெரியோரை எப்பொழுதும் வணங்குவதும் சேவை புரிவதுமாகிய பழக்கமுடையவனுக்கு, ஆயுள், புத்தி, கீர்த்தி, பலமிவை நான்கும் விருத்தியடைகின்றன.

---

## அதிகாரம் 8.

### நமக்குச் சமானர்களிடம் நாம் காட்டக்கூடிய நற்குணங்களும் துற்குணங்களும்.

இனி நமது குடும்பத்துள்ளும், வெளியிலுமுள்ள ஜனங்களோடு நமது சம்பந்தங்களை ஒழுங்குடனும் சந்தோஷமுண்டாகும்படிக்கும் செய்துகொள்வதற்கு, நம்மை நாற்புறத்திலும் சூழ்ந்திருக்கும் நமக்குச் சமானமான மனிதரிடம் நாம் பழகும்பொழுது எவ்வித நற்குணங்களை யப்பியசித்து விருத்தி செய்துகொள்ள

வேண்டும், எவ்விததுற்குணங்களை நீக்கிக்கொள்ளவேண்டுமென்று யோசிப்போம். முதலில் குடும்பத்தைச் சேர்ந்த நற்குணங்கள் துற்குணங்களை விசாரிப்போம். ஏனெனில் அவைகளே முதன்மையானவைகள். சகல குடும்ப தர்மங்களு மனுஷ்டிக்கப்பட்டுவருகிற பரிசுத்தியும் சந்தோஷமுநிறைந்த குடும்பங்கள் க்ஷேமம்பொருந்திய நாட்டிற்கும், மிகுந்த க்ஷேமம் கீர்த்திகளையுடைய ஜாதியார்கட்கும் அஸ்திவாரங்களாகின்றன. பெற்றோர்க்கும் புத்திரக்குமுள்ள சம்பந்தகளின்னவையென்று நாமறிந்தோம். இப்பொழுது ஸ்திரீ புருஷர், சகோதரர், சகோதரிகள் இவர்க்குள் நிலைபெறவேண்டிய சம்பந்தம் யாதென விசாரிப்போம்.

ஹிந்து புஸ்தகங்களில் ஸ்திரீ, புருஷரிருவரையும் சேர்க்கவேண்டிய அன்பைப்பற்றிய கதைகள் நிரம்பியிருக்கின்றன. மனு கூறுகிறதாவது: புருஷனும் ஸ்திரீயும் ஒருவரே தவிர யிருவரன்று என்றேயாம். அன்பு அவ்விருவரையும் ஒன்றாக்குகின்றது. புருஷனிடத்தில் இவ்வன்பு ஸ்திரீயை ரக்ஷிப்பதும் இரக்கம்பாராட்டுவதுமாயிருக்கவேண்டும். ஸ்திரீயினிடத்தில் புருஷனுக்குதணிவதும், பிரீதி பக்தியிவற்றை யவனிடம் பாராட்டுவதுமாயிருத்தல்வேண்டும். ஆதலின் இவ்விருவருக்குள் பரஸ்பரானுராகம் மரணபரியந்தம் நிற்கவேண்டும். ஸ்ரீராமச்சந்திரனும் சீதையுமே ஸ்திரீபுருஷர்களுக்கு பிரமாணமாகிய திருஷ்டாந்தம். அவ்விருவரும் உலகவாழ்க்கையின் சகல சுகங்களையும் சேர்ந்தே யனுபவித்தார்கள். அவ்விதமே துக்கங்களையும் சேர்ந்தே யனுபவித்தார்கள். எவ்வித சங்கடத்திலும் இருவருமே யோசனைசெய்துகொண்டு கஷ்டங்களை யிருவருமே சேர்ந்து அனுபவித்

துவந்தார்கள். ஆரம்பத்தில் அவர்கள் கலப்பற்ற வானந்தத்தை யனுபவிப்பதைக் காண்கிறோம். ராஜகுமாரனும், ராஜபுத்திரியுமாய்ப் பொழுதுள்ளளவும் பரமானந்தத்தில் மூழ்கிவந்தார்கள். பின், ராமச்சந்திரனுக்கு பட்டாபிஷேகம் சமீபித்தபொழுது இருவரும் விரதமாதிகளைச் சேர்ந்தனுஷ்டிக்கக் காண்கிறோம். கடைசியில் வனவாசதண்டனையை முதலில் கேள்விப்பட்டபொழுது சீதை லக்ஷியமில்லாமல் அதைக்கிரஹித்தனள்; அவள்கருத்து புருஷன் சமீபத்திலிருக்கவேண்டுமென்னபதுமட்டு மாதலால் அவன் எங்குசென்றாலும் தனா அங்கு செல்லலாமென எண்ணங்கொண்டனள். அவள் இத்தருணத்தில் கூறியதாவது "எனது ஹிருதயம்முழுமையு முன்னுடையதேயன்றோ! அஃது வேறொருவரையுமறியாது. உன்னையே யடைக்கலமாயுடையது, நீ கைவிடின் மரணமடைய வுறுதிகொண்டது. காட்டிலுள்ள முட்கள் எனக்கு மிருதுவான பஞ்சுபோன்றிருக்கும். தூசி சந்தனப்பொடியாகும், புல் போர்வையாயுதவும், என்னுடையபுருஷனாகிய நீ மட்டு மண்டையிலிருப்பாயாகில். ஓ! ராமா! உனது சன்னிதியேசுவர்க்கம், நீ யப்பாற்சென்றா லதுவே நரகம்." என்றேயாம். சீதையை வீட்டிலேயே இருத்தவேண்டுமென ராமன்வாதாடும்பொழுது அவள்நெஞ்சம் தளர்ந்தது. பின் அவளும்கூடவரலாமென ராமன் கூறியபொழுது மிகுந்த சந்தோஷத்துடன் அவள் தன்னுயர்ந்த ஆடைகள் விலையற்றவாபரணங்க ளிவற்றைத் தன் தாதியர்க்குக்கூசாமலளிப்பதையும் ஸ்திரீகள் பிரியம்வைத்திருக்கும் சகலபதார்த்தங்களையும்சுலபமாய்ச்சற்றேனும் வருத்தமின்றித்துரப்பதையும் பாருங்கள். அவள் நாட்டைவிட்டுச் சென்

றபொழுதும் நாயகனை விட்டகலாதபாக்கியம் தனக்குக் கிடைத்ததென்ன மகிழ்வு கொண்டாளன்றோ! காட்டிற் சென்றபொழுது இரவும் பகலும் ராமன் அருகிலிருப்ப தால் வனபூமிகளில் ராஜரீகத்தின் கவுரவம், மஹிமை இவற்றை யிழந்தோமென்ற விசாரமின்றி ஓர் சிறுமி யைப்போல் விளையாடிக்கொண்டிருந்ததாகக் கூறப்படு கின்றது. இவ்வளவு சந்தோஷமும் விளையாட்டுமுடைய வளாயினும் அவள் மிகுந்த யோசனையுடையவளே. தண் டகாரண்யத்தின் பிராந்தியங்களுக்கு சமீபித்தபொழுது தனது புருஷனுக்கு மிகவும் ஆழ்ந்தவசனங்களால் தக்க புத்திமதிகளைக் கூறினாள். பிற்பாடு அவளை மகாராக்ஷ தனாகிய ராவணன் எடுத்துச் சென்றபொழுது புருஷ னாகிய ராமன் விடாதுதேடி ஓ! சீதாய்! சீதாய்! நீ ஒளித்துக்கொண்டிருக்கின்றனையோ! அல்லது என் னோடு விளையாடுகின்றனையோ! ஐயோ வந்துவிடு, இவ் விதவிளையாட்டு எனக்கு மரணமாயிருக்கின்றது என்று நொந்தோலமிட்டழுதனன். இவனிவ்விதமலைந்து தே டிவரும்பொழுதெல்லாம் சீதையோ ராவணனிடமகப் பட்டு ராமனை மறந்துவிடும்படி செய்துவிடக்கூடிய கணக்கற்றதூண்டுதல்களுக்குள்ளாகிப் பல கொடுமை கள், பீதி யிவற்றையனுபவித்தனள். ஆயினு மிவற்றிற் கெல்லாமசையாதவளாகித் தன்பதிவிரதத்தைக் காப் பாற்றிவந்தனள். அன்றியும் "யான் ஒரேபுருஷனுக்கு வசப்பட்டவள். அவனுக்கு எந்நாளும் துரோகம்செய் யேன். திரவியமுதலியவற்றால் என்னை நீ ஏமாற்றி விடுவது முடியாது. சூரியனது கிரணங்கள் அவனுக் கே சொந்தமானவைபோல் யானும் ராகவனையே சேர்ந் தவள்" என்று சீதைகூறினள்.

மரணத்திற்கதிபதியான யமதர்மராஜனிடமிருந்து தன் கணவனை மீட்டவளான சாவித்திரியின் சரித்திரத்தைக் கேளுங்கள். மதுராதேசத்தின் அதிபதியாகிய அசுவபதியென்பவன் வெகுகாலம் தேவர்களைவணங்கி யொருபுத்திரியை பெற்றான். அவளுக்கு சாவித்திரியென்று பெயரிட்டார்கள். பசும்பொன்போன்றழகியமேனியும் மல்லிகையினது நறுமணமும் அவளுக்கிருந்தன. நாட்டிலுள்ள ஜனங்கள் யாவரும் தம் புண்ணியவசத்தால் தம்மத்தியில் தோன்றிக் காட்சிதரும் தேவதையாக அவளைப் பாவித்தனர். அவளுக்குத் தக்கவயது வந்தவுடன் பிதா அவளைப்பார்த்து நீ யுனக்குத் தக்க பர்த்தாவைத்தேடிக் குறிப்பிட்டுக்கொள், என்றனன். உடனே சகலராஜரீகபரிவாரங்களாலும் சூழப்பட்டுப் பர்த்தாவைத் தெரிந்தெடுக்கும்பொருட்டு சஞ்சாரம் செய்தனள். பின் அநேக மாசங்கள் கழிந்தபிறகு திரும்பி தனதுநகரம் வந்துசேர்ந்தனள். அப்பொழுது நாரதபகவானும் தன் பிதாவுடன் வீற்றிருக்கக் கண்டு "சாலுவதேசங்களுக் கதிபதியாகிய த்யுமத்ஸேனரென்பவர் தன் சத்துருக்களால் ராஜ்ஜியத்தைவிட்டுத் துறத்தப்பட்டு மூப்படைந்து கண்ணிழந்து காட்டில்வந்து சேர்ந்து தபசியாய்க் காலங்கழித்து வருகிறரென்றும் அவருடைய குமாரன் சத்தியவான் என்பவரை யான் நாயகனகக் குறிப்பிட்டிருக்கிறே" னென்றும் வெளியிட்டாள். அப்பொழுது நாரதர் இதைக்கேட்டு "ஐயோ! அரசனே! குழந்தை சாவித்திரி இந்தவிஷயத்தில் மோசம்போனாள்" எனக்கூற உடனே அரசன் நாரதரைப்பார்த்து ஐயா சத்தியவான் என்பவன் சாவித்திரிக்கு தக்க கணவனல்லவோ? மனது, சரீச

மிவற்றில் பலஹீனனோ? க்ஷமை தைரிய முதலிய குண ங்களில் குறைவுள்ளவனோ? என வினவினர். அதற்கு நாரதரும் "இல்லை இவற்றில் ஒன்றிலுமவன் குறைவுள் ளவனன்று, சத்தியவான் சூரியனைப்போல் பலம் தேஜஸ் உள்ளவன்; ரந்திதேவரைப்போல் தயாளு; சிபிச் சக்க ரவர்த்தியைப்போல் நீதியுள்ளவன்; யயாதியைப்போல் மாட்சிமை பெற்றவன்; சந்திரனைப்போல் அழகுள்ள வன். ஆயினும் இந்நற்குண வைசுவரிய முழுமையும் இன்னுமொருவருஷத்தில் போய்விடும். சத்தியவானு க்கு ஆயுள் மிகச் சொற்பமே மிகுந்திருக்கின்றது." எனக்கூறினர்.

இதைக்கேட்டு இருதயத்தில் மிகுந்த துக்கம் குடி கொண்டவளாயினும் சாவித்திரி தைரியத்துடன் "ஒரே யொருதடவைதான் ஒருவன் எதையும் தியாகம்செய்து கொள்ளக்கூடும். அப்படியே நானும் சத்தியவானை வரித்துக்கொள்ள எண்ணி நிச்சயஞ் செய்துவிட்டபடி யால் இனி வேறோர் நாயகனை நான் கோரிக்கொள்ளல் அமையாது எனக்கூற இதைக்கேட்டு நாரதபகவானும் அரசனைப்பார்த்து "ஓ! அரசனே உன் குமாரி சலியா மலிருப்பதால் இவ்விவாஹத்திற்கு நான் ஆசீர்வாதம் தந்தேன்" என்றார்.

பிறகு விரைவுடன் செல்லத்தக்க தூதர் தியுமத் ஸேந ராஜனிடத்திற்கு அனுப்பப்பட்டார்கள். அங்கி ருந்து அவர்களும் திரும்பி அசுவபதி மஹாராஜனிடம் வந்துசேர்ந்து "அசுபதி ராஜனாகிய உம்முடன் சம்பந் தஞ்செய்ய தான் முன்னமே கோரியிருந்தவ ரென்றும் ஆயினும் தனது தற்காலத்திய ஹீனஸ்திதியில் உம்மை எவ்வாறு பெண் கேட்பதென்றிருந்ததாகவும் இப்பொ ழுது சௌபாக்கியவதியாகிய சாவித்திரியே அவர்களு

டைய குடிபுகத்துணிந்தமையால் சாக்ஷாத் லக்ஷ்மியே தங்களுடைய புராதான குடும்பத்திற்குப் பழயபடியே வருகிறதாய்ப் பாவிப்பதாயும் தெரிவிக்கதியுமச் ஸேந ராஜன் சொன்னரென்று கூறினர்கள்.

பிறகு விவாஹமும் கிரமமாய் நடந்தது. சாவித்திரி மிகுந்த சந்தோஷத்துடன் தனது மாளிகைகளை விட்டுக்காட்டில் தழைக் குடிலுக்குச் சென்றாள். அங்குத்தனது மூப்படைந்த மாமன் மாமி-க்கு மிகச்சிரத்தையுடன் பணிவிடை செய்பவளாகி அவர்களுடைய வேண்டுகோளையும் நிறைவேற்றிவருபவளாகிக் குடும்பத்தொழில்கள் சகலத்தையும் செய்வதில் சந்தோஷங்கொண்டு தனது வணக்கம்பொருந்திப நடத்தையாலும், மிருதுவான வசனங்கனாலும் புருஷனது ஹிருதயத்தை வசப்படுத்தினள். இவ்விதம் சகலசந்தோஷங்களையுமடைந்து வரும்பொழுதும் நாரதர் முன்சொன்ன வார்த்தையால் வருவது தெரிந்துகொண்டு மனதில்மட்டும் ரஹஸியமாய்ப்பெருங்கவலை யொழியாதவளாயிருந்தனள். அவர் கூறியவிஷயத்திற்கு நாட்களை மிகக்கவனத்துடன் எண்ணிக்கொண்டுவந்தனள். கடைசியில் சத்தியவான் மரணமடைவதற்கு ஏற்பட்டிருந்த காலத்திற்கு இன்னும் நான்குநாளே மிச்சமானசமயம் வந்துசேர்ந்தது. அப்பொழுது ஸ்தோத்திர விரதாதிகளால் தேவர்களின் சகாயத்தைப்பெறத் தீர்மானித்தாள். முதல் மூன்றுநாளும் உபவாசம் செய்தனள். ஒரு துளி ஜலமேனுமுட்கொள்ளவில்லை. குறிப்பிட்ட நான்காம் நாளில் அதிகாலையிலெழுந்து காலைக்கடன்களை நிறைவேற்றிக்கொண்டு பெரியோர்களாகிய மாமன்மாமியின்பாதங்களைப் பணிந்தனள். பிறகு அவ்வனத்திலிருந்த தபோ

தனர்கள் சகலரும் அன்று அவ்விடம் வந்து சாவித்திரி யைப்பார்த்து நீ வைதவ்வியதுக்கத்தை எப்பொழுது மடையாமலிருப்பாயாக வென வாசிர்வதித்துச் சென்ற னர். பிறகுசத்தியவான் வழக்கம்போல் காட்டிற்குள்வே லைக்குக் கோடாரி யெடுத்துக்கொண்டுசெல்லும் சமயம் வந்தபொழுது, அவள் தன் மனதைத் தைரியப்படுத்திக் கொண்டு அவனைப்பின்தொடர்ந்தாள். அவனதைக்கண் டாச்சரியமடைந்து ஏன் நீ ஒருநாளுமென்னோடு வரா மல் இன்று வர முயலுவதென அவளை வினவினன். அதற்கு இன்றுமட்டும் நான் உன்னுடன் வருவ தற்கு விரும்பினேனெனக் கூறினள். பின்பு இருவரும் சென்றார்கள். வழியில் பர்வதங்கள், ஜலப்பிரவாஹங் கள், செடிகொடி விருக்ஷங்கள், மிருகங்கள் பக்ஷிகள் இவைகளின் காக்ஷிகளைக் கண்டாநந்தித்தார்கள். பிறகு சத்தியவான் முதலில் தனது வேலையைச்செய்ய வாரம் பித்தனன். காய்கனிகளால் தன்மூட்டையை நிரப்பிக் கொண்டு பின் விறகுக்காக உலர்ந்த கட்டைகளை வெட் டினன். அப்பொழுது திடீரென அவனுக்கு ஓர் மயக்க முண்டாய்த்தலை மிகநோவடைந்தது. அவனிதைச்சாவித் திரிக்குக் கூறிப்பூமியிற் படுத்துக்கொண்டனன். சாவித் திரியுடனே அவன் தலையைத்தன்மடிமீது வைத்துப்பூமி யிலுட்கார்ந்துகொண்டு நெஞ்சம் புழுங்கித்தானின்ன தெனவறியாது வருவதை யெதிர்பார்த்து நின்றனள். அப்பொழுது இருந்தாற்போலிருந்து ஒரு கம்பீரமும் பயங்கரமும் பொருந்திய ரூபம் கருநிறமுடையதாயி னும் மிகுந்த காந்திபொருந்தியதும் செவ்வாடை தரித்த துமாய் அவள் முன் தோன்றிக்குறிப்பாய் மிகுந்த பள பளப்புடைய தன்திருஷ்டியைச் சத்தியவான் மீதுநாட்டு

வதைக் கண்டாள். உடனே யவள் தன் புருஷன் தலையை மெதுவாய்ப் பூமியில் வைத்துவிட்டு எழுந்துநின்று அவ்வுருவத்தை வணங்கினாள். அதற்கந்த வுரு "சத்தியவானது நாட்களின்றோடு முடிந்தன. நான் மரணாதிபதியாகிய யமன், சத்தியவான் மிக நற்குணசாலியாகையால் எனது தூதர்களை யனுப்பாமல் யானேயவனைக் கொண்டுபோக வந்தேன்" என்றது. உடனேயஃது சத்தியவானது சூட்சுமசரீரத்தை அவனது மாம்சமய சரீரத்தினின்றும் வேறுபடுத்திக்கிரஹித்துக்கொண்டு தென்றிசைநோக்கிச் சென்றது! சாவித்திரியும் பின் தொடர்ந்தனள் அதைக்கண்டு யமனும் "ஓ சாவித்திரி நில்லு, திரும்பிச்சென்று உன் நாயகனது உத்தரகிரியைகளை நிறைவேற்றுவாயாக, நீ செய்யவேண்டிய சகல கடமைகளையும் முடித்துவிட்டனை. மனிதர் செல்லக் கூடியவரை உனது நாயகனைக் கைவிடாது பின் சென்று வந்திருக்கின்றனை" யென்றனன். சாவித்திரி "ஐயோ எனது நாயகன் செல்லும் விடமெல்லாம் யானும் செல்வேன் இதுவேயன்றோ ஸ்திரீ புருஷர்களுக்கு ஏற்பட்ட சாசுவதமான தர்மம். நான் எனது நாயகனைப் பிறிதோரிடம் செல்லாத மனதுடன் நேசித்து வந்திருப்பது வாஸ்தமாயின், என் மூத்தோர்க்கு மிகுந்த பக்தியுடன் பணிவிடை செய்து வந்திருப்பதுண்மையாகில், தபோவிரதங்களில் ஏதேனும் சக்தியுமிருக்குமாகில், ஓ! யமனே உனதுகிருபையால் எனது சஞ்சாரத்திற்கு ஒரு தடையும் வராமலிருக்கட்டும்" என்றனள். பின்னும் ஒரு சிறுகுழந்தையைப்போல் வஞ்சகமற்றுத்தன் பெரியோரிடம் கேட்டதும் தனது சுத்தமானஹிருதயத்தில் தோன்றியதுமான தர்மத்தை

எடுத்துக் கூறத்தொடங்கி “ஐயா வெகுகாலம் சிரத்தையுடன் பணிவிடைசெய்து கிருஹ கிருத்தியத்தையநுஷ்டித்து இந்தஞானத்தையும் புண்ணியத்தையும்சம்பாதித்தேன். மிகக் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த விவற்றின்பலனாகிய இவ்வித சஞ்சாரத்தைத்தயவுடன் தடைசெய்யாதேயும்” என அதற்கு யமன், “ஓ! சாவித்திரி! நீ புத்தியும் யுக்தியுமுடையவளாயிருக்கின்றனை, உன் வசனங்கள் மிகவின்பம் பயக்குகின்றன. ஆதலால் உன் கணவன் பிராணனைத்தவிர வேறெதை நீ கேட்பினும் நானதை யுனக்குத்தருவேன்” என்றனர். “ஆனால் என் கணவனுடைய பிதா ஆகிய மகாராஜன் கண்ணிழந்தவராய் இருட்டிலேயே வசிக்கிறார். நின் கிருபையால் அவரது கண்கள் வெளிச்சத்தைக் காணட்டும்” என்றனள். அதற்கு யமன் பூலோகப்பெண்களில் சிறந்தவழகுடையாளே! நீ கேட்ட வரத்தைக்கொடுத்தேன். இப்பொழுது நீ திரும்பிச்செல். உலகிலேயே வெகுவாய் அலைந்து அலுப்படைந்த நீ பாழும் மரணலோகத்திலுமலுப்படையவேண்டாம்” என்றனர். அதற்கு சாவித்திரியும், அதோ நிற்கும் எனது கணவன் எங்கு செல்வாரோ அங்கு நானும் செல்லவேண்டு மன்றோ! சத்துக்களின் சஹவாசம் விசேஷபலனுடையது. ஓ! மரணத்திற்கதிபதியே! உன்போன்ற பெரியோனை யடுத்து வசிப்பது வீண்போகாது. இவ்வித வாசம் நற்பலன்களைத்தரு மென்பதற்குச் சந்தேகமுண்டோ? என்றனள். அப்போது யமன் “ஓ! ஒப்பற்றபெண்மணியே! இன்னுமொருவரத்தையும் பெற்றுக்கொள். உன் கணவன் ஆயுளைமாத்திரங் கேளாதே” என “அப்படியானால் மிருத்தியுலோகங்களுக்கெல்லாம் அதிபதியே! என் கணவ

னது பிதாவுக்கு அவரிடமிருந்து துஷ்டர்களால் பிடுங்கப்பட்ட ராஜ்ஜியம் பழையபடி திரும்பிக் கிடைக்கட்டும்” என யமன் “அப்படியே யவன் தனது ராஜ்ஜியத்தை யடைவானாக அதிலவன் ராஜ்ஜியபாரமும் தாங்குவன். நீ இனித்திரும்பிச் செல்வாய்பெண்மணி” யென்றனர். அவள் பின்னும் மதுரவசனங்களையும் தேன்கலந்த ஸ்தோத்திரங்களையும் மொழிந்துகொண்டே யமதர்மராஜனைப் பின்தொடர்ந்து சென்று தன் பிதாவுக்கு நூறுபுத்திரர்களும் தனக்கு நூறுபுத்திரர்களும் வேண்டுமென்னுமிவ்விருவரத்தையும் பெற்றுக்கொண்டனள். கடைசியான நான்காம்வரம் அளிக்கப்பட்டபொழுது சாவித்திரி தர்மவாழ்க்கையும் அவரவர்க்கேற்பட்ட வருணாசிரமாதி கடமைகளைத் தவறாது நிறைவேற்றி முடிப்பதையும் பற்றிப் புகழ்ந்துபேச வாரம்பித்தனள். முடிவில்யமனும் அவளது ஞானம் வசனசாதுரியமுதலியன கண்டு வியப்படைந்து இன்னுமோர் வரத்தை யவளுக்கீந்தனன். சாவித்திரியும் இதுகண்டு தனக்கு யமன் நூறு புத்திரர்களை யளித்திருக்கின்றன ராதலால் தன் கணவனைத்தவிர அப்புத்திரர்க்குவேறு பிதா ஏற்படின் தர்மம் பாழாகுமாதலால் தன்கணவன் உயிர்க்கவேண்டுமென்று பிரார்த்தித்தனள். இவ்விதம் புருஷனிடம் விசுவாசமுள்ள பத்தினி தன்கணவனை மரணத்தினின்றும் மீட்டுத், தன்குடும்பத்திற்கு ஐசுவரியம், க்ஷேமம், தீர்க்காயுள் இவற்றைச் சம்பாதித்துக்கொண்டனள். மரணத்திற்கதிபதியாகிய யமனும் பதிவிரதையின் விசுவாஸமுள்ள அன்புக்கு முன்னிற்கமாட்டாது அபஜயமடைந்தனன்.

இன்னும், நளமகாராஜனது மனைவியாகிய தமயந்தியின் சரித்த்னை மறக்கும் ஹிந்துச் சிறுவனுமுண்டோ? வீரசேனன் குமாரனும் நிஷததேசத்திற் கரசனுமாகிய நளன் விதர்ப்பதேசங்களுக் கதிபதியாகிய பீமனது மகளாகிய தமயந்தியைக் காதலித்தனன். அப்படியே தமயந்தியும் நளன் மீது காதல்கொண்டனள். ஆயினும் இவ்விருவரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டவரல்ல. உலகில் நிகரற்றவரெனக் கேள்விகளால்மட்டும் ஒருவரையொருவர் தெரிந்து கொண்டனர். ராஜகுமாரியின் ஸ்வயம்வரம் சாட்டப்பட்டது. நளனும் அங்கு சென்றனன். அதில் இந்திரன், அக்நி, வருணன், யமன் முதலான தேவர்களும் அவள் பாணிக்கிரஹணத்தை யபேக்ஷித்தும் தமயந்தி நளனையே நாயகனுக வரித்தாள். பிறகு விவாகமாகிய நளனும் தமயந்தியும் மிகு சந்தோஷத்துடன் 11 வருஷகாலம் சௌக்கியமாய் வாழ்ந்துவந்தார்கள்; இரண்டு குழந்தைகளுமவர்களுக்குண்டாயின. 12-ம் வருஷத்தில் புஷ்கரன் என்னு மரசன் ஒருவன் நளனிடம் வந்து சேர்ந்து தன்னைச் சூதில் நளனுல் ஜெயிக்கமுடியாது என்று பந்தயம்போட்டான். உடனே நளனுமவனுடன் சூதாடி அநேகம் தடவை தோல்வியடைந்து கடைசியில் புஷ்கரனுக்கு ராஜ்ஜியமுதலிய சகலசம்பத்துகளையும் தான் உடுத்திருந்த ஆடையாபரணங்களோடு தோற்று, ராஜ்ஜியத்தைவிட்டுப் பராரியாகிச் சரீரத்தைப் பாதி மூடிய ஒரே ஒரு வஸ்திரத்துடன் வெளியேறினுன். அப்பொழுது தமயந்தி சூதாட்டம் போகும் போக்கை யறிந்து முன்னமே தன் குழந்தைகளைத் தன்னுடைய தந்தையண்டைக்கு அனுப்பிவிட்டு, தானுடுத்திருந்த வொரே

வஸ்திரத்துடன் நளனைப் பின்பற்றிச்சென்ருள். பிறகு இருவரும் நகரத்தின் அருகில் ஆகாரமின்றித் தாகத்துடன் அலைந்து திரிந்தார்கள். இதுவும்போதாமல், நளன் அங்கு பறந்துகொண்டிருந்த சில பறவைகளை ஆகாரத்தின் பொருட்டுப் பிடிப்பதற்காகத் தன்னுடைய வஸ்திரத்தையெறிந்தபொழுது அப்பறவைகள் அவ்வஸ்திரத்தையும் எடுத்துக்கொண்டு சென்றன. ஆதலால் தன்னுடைய வஸ்திரத்தையுமிழந்தவனுகி, மனதழிந்து வகை ஒன்றும் தெரியாதவனுய், தமயந்தியை யவள் பிதாவிடம் சென்று இக்கஷ்டங்களை யடையாது சுகத்தோடிருக்கும்படி பன்முறை வேண்டினன். அதற்குத் தமயந்தியுடன்படாதவளாய் அவனைவிட்டு நீங்காமல் விம்மி அழுதுகொண்டு தன்னை யெவ்விதத்திலும் விட்டு நீங்கி விடாமலிருக்கும்படி கெஞ்சினள். அவன் களைப்படையும் பொழுதெல்லாம் தானண்டையிலிருப்பதால் அவனுக்குச்சகாயஞ் செய்யக்கூடுமென்றும் எவ்வித துக்கத்திலும் அன்புடைய மனைவியைக்காட்டிலும் உயர்ந்த மருந்து கிடையாதென்றும் கூறினள். சில நேரம் கழிவதற்குள் அவள் மிகக்சோர்வடைந்து வெறும்தரையில் விழுந்துறங்கினள். இதைக்கண்டு நளனும் இவளைத் தன்னேடு மிகுந்த கஷ்டமனுபவித்துக்கொண்டு திரியும்படி கூட்டிச்செல்வதைவிட அவளை தன் பந்துக்களைத் தேடிச்செல்லும்படி தனியே விட்டு விட்டுத் தான் மறைந்துவிடுவதே தர்மமென்று தனக்குள்ளே யோசனை செய்தான். இவ்விதம் நினைந்து அவளுடுத்தியிருந்த வஸ்திரத்திற் பாதியை அருகிற்கிடந்த வொரு கத்தியால் கிழித்து அதனுல் அவளை மூடும்விட்டு விட்டு, மறுபாதியால் தன்னை மூடிக்கொண்டு அவளை

விட்டுவிட்டுத் துக்கத்தால் மதிமயங்கி யோடினன். தீர்க்கநித்திரையினின்று தமயந்தியும் விழித்துக்கொண்டு தான் தனியே யிருப்பதைக்கண்டாள்; தன்னைப்பற்றி யல்லாமல் நளன் தனிமையாயிருப்பதையே நோக்கி அவள் பட்ட துயரம் சற்றல்ல. அவள் புருஷனை வெகு ஆவலுடன் தேடிச்சென்றும் அவன் கிடைக்கவில்லை. மத்தியில் ஒரு பெரும்பாம்பு இவளைச் சுற்றிக்கொண்டது. இவ்வாபத்தினின்றும் அவள் தப்பித்துக்கொண்டதும், முடிவில் சேதிராஜ குமாரத்தியின் தாதியாகி ஆதரவடைந்ததுவரை மத்தியில் அவள் அடைந்த அநேகம் சங்கடங்களையெல்லாம் விஸ்தாரமாய் நளோபாக்கியானத்தில் கூறப்பட்டிருக்கின்றது. இதற்குள் நளன் தான் செல்லுமார்க்கத்தில் நெருப்பிலகப்பட்ட பாம்பொன்றைத் தப்புவிக்கப்புக அப்பாம்பின் சக்தியால் அவன் ரூபம்மாறி பிறராலறிந்துகொள்ள முடியாததாயிற்று. அவன் இங்குமங்கு மலைந்து முடிவில் ரிதுபர்னராஜன் நகரம்வந்து சேர்ந்து அவ்வரசனிடம் தேர்ப்பாகனுகினன். இவ்விதம் மிகப்பிரீதியோடும் நன்ருய் ஒருவரை யொருவர் நேசித்து வந்த புருஷனும் மனைவியும் பிரிக்கப்பட்டார்கள். பிறகு பீமராஜன் தன் மகளையும் நளனையும் தேடும்படி சில பிராமணர்களை விடுத்தான். அவர்களில் ஒருவராகிய சுதேவன் என்பவர் சேதிராஜனது அரண்மனையில் விசனத்துடன் உட்கார்ந்திருந்த தமயந்தியைக் கண்டுபிடித்தபின் அவளது சிறியதாயாராய் ஏற்பட்ட சேதிராஜன் மனைவியாகிய இராணியினிடத்தில் துக்ககரமான அவள் விருத்தாந்த முழுவதையும் செப்பினுள். பிறகு தமயந்தி இராணியாகிய சேதிராஜன்

மனைவி மிகுந்த உபசாரம் செய்ததையும் பாராட்டாமல் தன் தகப்பன்வீடு நோக்கிப் புறப்பட்டனள். அவள் விதர்ப்பநகரம் வந்து சேர்ந்தபின் பீமராஜன் மறுபடியும் நளனைத் தேடும்படி தூதர்களை ஏற்படுத்தி அவர்கள் தேசங்களெங்கும் சென்று மனிதர் கூடியிருக்குமிடத்திலெல்லாம் மறைபொருளானதும் நளன் மாத்திரம் உட்கருத்தை யறிந்துகொள்ளும்படி யானதுமாகிய சில சமாசாரங்களைக் கூறி வரும்படி யனுப்பினான். இச்சமாசாரங்களின் கருத்து நளனைப்பார்த்து, தூக்கிக்கும் அவனது அன்புடைய மனைவியண்டை திரும்பிவந்து சேரும்படி யழைப்பதாயிருந்தது. இவ்விதம் பலவிடங்களை நோக்கிச்சென்ற தூதுவர் வெகுநாள்வரை நளனைத் தேடியலைந்தார்கள். முடிவில் ஓரேயொருவன் இத்தூதர்களிலொருத்தன் பேசிய வசனத்தைக்கேட்டு புருஷர்கள் அநியாயமாய் தம்மனைவியைக் கைவிட்டுச் சென்றிருப்பதுமுண்டெனப் பதிலுரைத்தான். இவன் அயோத்தியிலரசாண்ட ரிதுபர்னராஜனது தேர்ப்பாகனாகிய பாஹுகன் என்பன். இவனிவ்விதம் சொல்லியதைக்கேட்ட 'பார்ணதன்' என்னும் தூதன் திரும்பி தமயந்தியினிடம் சென்று அதைத் தெரிவித்தான். அதைக்கேட்டுத் தமயந்தியும் அவ்வாறு மறுமொழி கூறியவன் நளனேயென்று தீர்மானித்துக்கொண்டு பெண்பாலுக்குரிய கூர்மையான யுக்தியால் அவனைத் தன்பக்கம் வருவிக்கவுபாயம் தேடினாள். தூதனைப்பார்த்து அவள் சொன்னதாவது நீ "ரிதுபர்ணனிடம் சென்று நீ அயோத்தி சேர்ந்ததினத்திற்கு மறுநாளே தமயந்தியின் இரண்டாம் சுவயம்வரம் விதர்ப்பபுரியில் நடக்கப்போகின்றதென்று தெரிவி"

என்றேயாம். இவளிவ்விதம் ஏற்படுத்தியதின் கருத்தாவது தன் பிதாவின் அரண்மனைக்கு ஒரேநாளில் அயோத்திபிலிருந்து வந்து சேரும்படி ரதத்தை நளனைத்தவிர வேறொருவராலும் நடத்த மாளாதென்பதை அவள் அறிந்தவளாதலால் நளனே யவ்விதம் ரிதுபர்ணனை ஏற்றிக்கொண்டு ரதத்தை நடத்தி விதர்ப்பநகரம் சேருவன் என்றெண்ணங்கொண்டதேயன்றி வேறல்ல. அவள் உத்தேசித்தபடியே நடந்தது. ரிதுபர்ணராஜன் தன்னை விரைவில் விதர்ப்பநகரம் சேர்ப்பிக்கும்படி பாஹுகனைத் தூண்ட பாஹுகனும் தமயந்தியினிரண்டாம் சுவயம்வரத்தைக்கேட்டு மனம்வாடி அதிவிரைவுள்ள அசுவங்களைத் தெரிந்தெடுத்து ரிதுபர்ணனைத் தேரேற்றி வேறெவராலும் ஆகாதபடி யவ்வளவு விரைவுடன் தேரை நடாத்தி அன்று சாயந்திரமே விதர்ப்பபுரிவந்து சேர்ந்தனன். பின் அங்கு தமயந்தியின் சாமார்த்தியமான யுக்தியால் பாஹுகன் நளனென்பதற்கு அநேக வடையாளங்களைக் காட்டிக் கொள்ளும்படி செய்யப்பட்டான். அவையாவன: தன் குழந்தைகளைக்கண்ட பொழுது அவர்களைப்பார்த்தழுதான். பிறகு நளனைப் போல் சமயல்செய்தான். இவற்றைக்கண்டு தமயந்தியும் உறுதியடைந்து பாஹுகனைத்தன்முன் கொணர்ந்து சேர்ப்பிக்கும்படி தன் ஜனங்களை விடுத்தனள். பாஹுகன் அவ்விதம் வந்து சேர்ந்தவுடன் புருஷனும் உண்மையான மனைவியுமொருவரை யொருவர் அறிந்து கொண்டார்கள். பிறகு இருவரும் நெடுங்காலம் இணைபிரியாதவர்களாய் ராஜ்ஜியத்தைத் திரும்பியடைந்து தம்முடைய புத்திரர் சூழ ஆனந்தமனுபவித்து வந்தார்கள்.

அன்றியும் தன் கணவனை உண்மையுடன் நேசித்து அவனுக்குச் சிசுரூஷை புரியும் ஸ்திரீ யானவள் வெகுகாலம் உக்கிரமான தபசுகளாலடையக்கூடியதை விட அதிகமாய் ஆத்மபரிபாகமும் ஞானமு மடைகின்ருள். இவ்வுண்மை கௌசிகனென்னும் பிராமணச்சிறுவனுக்குக் கோபமுண்டுபண்ணின பிராமணப் பெண்மணியின் சரிதத்தில் விளங்குகின்றது. அச்சரிதமடியில் வருமாறு காண்க. சிகனென்னுமொரு பிராமணன் விசேஷ தபசுபண்ணினன். ஒருநாள் அவர் ஒருமரத்தினடியில் நிஷ்டையிலிருக்கும்பொழுது ஒரு கொக்கானது மரத்தின் கிளையிலொன்றி லுட்கார்ந்துகொண்டு அவர்மீது தன் மலத்தைச் சொட்டி யாபாஸப்படுத்தியது. இதைக்கண்டு அவர் கண்களைவிழித்து அந்த கொக்கைக் கோபத்துடன் பார்த்தார். அவருடைய தபவின் மஹிமையால் ஏற்பட்ட சக்தியினல் அந்த கொக்கானது அவரது கோபப்பார்வையால் மின்னலாலடிபட்டாற்போலச் சடுதியிற் கொல்லப்பட்டது. கௌசிகர் கொக்கிறந்ததைப்பற்றித் துக்கிப்பவராயினும் தான் பரீக்ஷித்தறிந்து கொண்டதன் சக்தியைக்கண்டு சந்தோஷங்கொண்டார். பிறகு நாள்தோறும் செல்வது போல் அடுத்த கிராமத்திற்குச் பிச்சைக்குச் சென்றபொழுது முதலில் தனக்கெதிர்ப்பட்ட ஒரு கிருஹிணியைப் பிச்சைக்கேட்டார். அதற்கப்பெண்மணி தன்னுடைய வீட்டில் நுழைந்து பிச்சையை எடுத்துக்கொண்டு வரும்பொழுது தன்னுடைய கணவன் தன் வேலையைச்செய்து முடித்தபின் களைப்படைந்து தூசி மூடியவுடம்புடன் வீட்டிற்கு வந்துசேரக் கண்டு கௌ

சிகப்பிராமணனைச் சற்று காத்திருக்கும்படி சொல்லி விட்டு களைப்புடன் வந்த தன் கணவனைக் கவனிக்க வாரம்பித்தனள். கணவனுக்கு வேண்டிய காரியங்களைச் செய்து முடித்துவிட்டு வருவதற்கு சிலநேரம் சென்றது. இதனால் கௌசிகப்பிராமணனுக்குப் பொறுமை நீங்கியது. கடைசியில் அவருக்கு வேண்டிய பிச்சையுடன் அந்தப் பெண்மணி அவரை நோக்கி வந்தவுடன் முன் கொக்கைப்பார்த்ததைவிட மிகுந்த கோபத்தோடுங்கூடிய கண்களால் அவளை நோக்கிப் பிராமணனாகிய தன்னை அத்தனைநாழிகைவரை யவள் எவ்வாறு அலக்ஷியம்செய்யத் துணிந்தனள் எனவினவினன். அதற்கப்பெண்மணி மிகவமரிக்கையுடன் "உமக்கு நான் செய்யவேண்டியதைக் காட்டிலும் என்கணவனுக்குச் செய்யவேண்டிய கடமையே எனக்குப் பெரிது ஓ! பிராமண! உமதுகோபத்தை யடக்கிக்கொண்டு பொறுமையைக்கற்றுக்கொள்ளும். உமக்கே முடிவில் அபாயத்தை தரக்கூடிய விக்கோபத்துடன் என்னை நோக்காதேயும். நான் கொக்கல்ல."—எனக்கூறினள். இவ்வசனத்தைக்கேட்டுத் திடுக்கிட்ட கௌசிகன ஆச்சரியமடைந்து தான் கொக்கை முன்னம் திருஷ்டியாலெரித்ததை யெவ்வாறு அவளறிந்தனள் என வினவினன். அதற்கு அவள் "சித்திகளைச் சம்பாதிக்கும் பொருட்டு யாதொரு தபசுகளையும் நான் செய்தவளல்ல; என் கணவனைமட்டும் ஒரேமனதாய்ச் சேவித்து வந்திருக்கிறேனே யன்றி வேறல்ல. எம்போலியரின் கிருஹஸ்தாசிரமத்திற்குரிய சாமானியமான தர்மங்களைப்பற்றி விஸ்தாரமாய் நீர் அறிந்துகொள்ள விரும்பினால்வெகுதூரமுள்ள மிதிலைநகரத்தில் வசிக்கும் வேட

னிடம் செல்லும்" என்றனள். கௌசிகன் இதைச் செவியுற்று கர்வமடங்கினவனாய்மிதிலைமாநகர்சென்று அங்கோர் கசாப்புக்கடையில் இறைச்சி வாங்கவந்த கூட்டத்தின் ஓர் புறத்தில் நின்றனன். கடையிலிருந்த வேடன் இவனைப்பார்த்துச் சமீபித்து மிகவும் தாழ்மையுடன் வணங்கி "ஐயா பதிவிரதாசிரோமணியாகிய அவ்வம்மணி உம்மை யென்னிடமனுப்பிவித்ததற்குக் காரணம் நானறிவேன். அப்படியே உமது சந்தேகங்களையும் தீர்ப்பேன்; அவ்விதம் உமது சந்தேகங்களை நான் தீர்க்கக்கூடியதற்குக் காரணம் யாதென்றும் காட்டுவேன்" என்றான். பிறகு முன்னமே கூறியபடி அப்பிராமணனை வேடன் தன் கிருஹத்திற்கழைத்துச்சென்று தனது மூப்படைந்த தாய் தந்தையரைக்காட்டியவனுக்கு வேண்டிய புத்திமதிகளைக் கூறினான்.

அண்ணன் தம்பிகள் ஒருவருக்கொருவர் எவ்விதம்சகோதரவாஞ்சையைக்காட்டிவரவேண்டுமென்பது ராமாயணத்தில் அடிமுதல் முடிவுவரை காட்டப்பட்டிருக்கின்றது. லக்ஷ்மணன் ராமனுக் குயிராயிருந்ததாய்க்கூறப்பட்டிருக்கின்றது. அவர்களுடைய சகோதரவாஞ்சை யவ்வளவு நெருங்கியதும், அன்பு பொருந்தியதுமாயிருந்தது. அவர்கள் ஒருவரைவிட்டு ஒருவர் தனியே வேறிடத்தில் நித்திரைசெய்கிறதில்லை. வேட்டை முதலியவற்றிற்கும் தனியே யொருவரைவிட்டொருவர்மட்டும் செல்கிறதுமில்லை. லக்ஷ்மணன் ராமனைப்பின்பற்றி காட்டிற்குச்சென்றதையும், அங்கு ராமன் தூங்கும்பொழுதெல்லாம் அருகில் தான் துயில்

கொள்ளாமல், காவல் காத்துவந்ததையும் பாருங்கள். ராமன் சீதையையிழந்து தேடிச் செல்லும்பொழுது லக்ஷ்மணன் மிகுந்த அன்புமிரக்கமும் பொருந்தி வேண்டிய சமயங்களில் தக்க யோசனைகளைச்சொல்லிக் கொண்டு கூடவேசென்றான். பின்னர் லக்ஷ்மணன் லங்கையின்முன் ராமராவண யுத்தத்தில் அம்புபட்டு மூர்ச்சையாகிப் பிரக்ஞையற்றுத் தரையில் வீழ்ந்து கிடந்தபொழுதுராமன் ஓலமிட்டு அலறியதைக்கேளுங் கள். அஃதாவது " இனி என் உயிரிருந்தென்ன, யான் சண்டைசெய்தென்ன, லக்ஷ்மணன் ரணகளத்தில் காயமடைந்து கிடக்கின்றானன்றோ ! ஓ ! லக்ஷ்மணா ! என்னைத் தனியேவிட்டு ஏன்மறுவுலகங்களில் சஞ்சரிக் கின்றனை ? நீயில்லாமற்போனால், என் உயிரும், யுத்தத் தில் ஜயமும், சீதையுங்கூட எனக்கு நிஷ்பிரயோச னமே !" என்றேயாம்.

மகாபாரத முழுவதுமே சகோதரர்கள் ஒரு வரோடொருவர் அன்பும் ஐக்கமத்தியமும் பொருந்தி வாழ்வதால் பெருமையுங் கீர்த்தியுமடைவார்கள் என் பதை விளக்கிக்காட்டுகின்றது. ஏனெனில் பாண்டவர் கள் சண்டை சச்சரவு போராட்டம் செய்துகொண் டார்களில்லை. ஒருவரைவிட்டொருவர் பிரிந்து வாசம் செய்ததுமில்லை. யுதிஷ்டிரர் குடும்பத்திற்குப் பிரதிநிதி யாகவும் மற்றைத் தம்பியர்கள் பாடுபடுவது முழுவதும் யுதிஷ்டிரனது பாக்கியத்திற்கும் பெருமைக்கும் கீர்த் திக்கும் என்றும் பாவிக்கப்பட்டது. யுதிஷ்டிரருக் காகவே மற்றவர்கள் யுத்தம் பண்ணினார்கள். யுத்தங் களில் ஜயத்தால் சகோதரர்கள் அடைந்த திரவிய சம்

பத்துக்கள்யாவும் யுதிஷ்டிரருக்காகவே சேகரிக்கப்பட்டன். யுதிட்டிரருக்காகவே அர்ஜுனன் கடுந்தபசிஞுலும், கொடும் போராட்டங்களிஞுலும், வெகு காலம் நீண்டதும் அலுப்பைத் தருவதுமான சஞ்சாரங்களாலும், திவ்விய ஆயுதங்களைச் சம்பாதித்தான். இதே மாதிரி யுதிஷ்டிரரும் அவர்களைப் பாராட்டி, அவர் சுகதுக்கங்களைத் தன்னுடைய சுகதுக்கங்களாகவே பாவித்து வந்தனர்.

யுதிஷ்டிரர் சுவர்க்கம்வந்து சேர்ந்து தன்னுடைய சகோதரர்களையும், மனைவியையுங் கண்டுபிடிக்கும் பொருட்டு நாற்புறமும் சுற்றிப்பார்த்தார். "என் தம்பிமார்கள்சென்ற விடத்திற்கு நானும் செல்வேன்" எனப் பன்முறை இவர் கூறியதைப்பாருங்கள். இப்படித்தேடியும் திவ்யதேஜஸ் பொருந்திய தேவர்களையும், பிரதாபமுடைய மகாராஜர்களையும், கண்டாரே பொழியத் தம்பியரைக் காணவில்லை. "ஓ! தேவர்களே' என் தம்பிமார்களில்லாத பொழுது உங்கள் சுவர்க்கத்தாலெனக்கு என்ன பிரயோஜனம்? என் தம்பிமாாகளிருக்குமிடமே எனக்கு சுவர்க்கம். இது எனக்கு சுவர்க்கமன்று, என்று கடைசியாய் அலறினர். இதைக் கண்டு தேவர்கள் ஒரு தேவதூதனை யனுப்பி யுதிஷ்டிராஜன் நேசங்கொண்ட தம்பிமார்கள் வசிக்கும் ஸ்தானத்திற்கு அவரை யழைத்துச் செல்லும்படி ஏற்படுத்தினர்கள். அவ்விதம் யுதிஷ்டிரரும் தூதனும் சுவர்க்கத்தைவிட்டுத் திரும்பி வெளியேறி வர வர பேரந்தகாரத்துட் செல்லும் ஓர் மார்க்கத்தைப்பற்றிச் சென்றூர்கள். இம்மார்க்கத்தில் ஸ்தலம் வர வர இரு

ட்டுப் படிந்ததாயும் மார்க்கமும் மிக ரம்மியமற்றதாயும் ஆயிற்று. துர்நாற்றமுடைய வஸ்துக்களும், பயங்கரமான ரூபங்களும், அவர்கள் செல்லச்செல்ல எப்புறமும் நெருங்கிவரக் காணப்பட்டன. காலின் கீழ் பாதையும் ரத்த தாரையால் வழுக்குவதாயும், இறந்தவர்களின் சவங்கள் கண்ட விடமெங்கும் சிதறிக் கிடப்பதாயு மிருந்தது. கூர்மையுள்ள முட்களும், காலைக்குத்தத் தக்க நுனியுள்ள இலைகளும், சுடுமணலும், பழுக்கக் காய்ந்த இரும்பு கற்களும், மார்க்கத்தில் கிடந்தன. இவற்றைக் கண்டவுடன் திடுக்கிட்டவராய் யுதிஷ்டிரர் தன்னை இப்போர்ப்பட்ட வழியில் வனழைத்துவந்தனை யென்று தனக்கு வழிகாட்டும் தூதனைப் பார்த்து வினவினர். அதற்கவன் அவரையவ் வழி கூட்டிச்செல்லும்படி தனக்கு ஆக்ஞாபிக்கப்பட்டிருப்பதாயும், அவர்களைப்படைந்தால் இஷ்டப்படித் திரும்பிவிடலாமென்று முரைத்தான். யுதிட்டிரர் உடனே சந்தேகத்துடன் அவ்வளவு கெட்ட ஸ்தலங்களில் தன் தம்பிமார்கள் நிச்சயமாய் வசிக்க மாட்டார்களென்ற உறுதியுடன் மெள்ள மெள்ளத் திரும்பி வந்த வழியே செல்ல யத்தனித்தார். அப்படி திரும்பியவுடனே நாற்புறமுமிருந்து துக்ககரமான அழுகைக் குரல்களும் இன்னும் சிறிதுநேர மங்கு தங்கிச் செல்லவேண்டு மென்று அவரை பிரார்த்திக்கும் வசனங்களும் எழும்பின. நீங்கள் யாவர் என அரசன் பிரமித்து வினவவே, நான் கர்ணன், நான் பீஷ்மன், நான் அர்ஜுனன், நான் நகுலன், நான் சஹாதேவன், நான் திரௌபதி என இன்னு முலகில் இவரது நேசத்துக்குப் பாத்திரர்களான அநேகரின் குரல்

களைக்கேட்டார். இவற்றைக்கேட்டுத் தம்முடைய தம்பியருக்கு நேரிட்ட துன்பங்களைக்கண்டு கோபமுண்டவராய் யுதிஷ்ட்டிரன் தூதனைப்பார்த்து “திரும்பிவிடு, சுவர்க்கத்துக்கு நீயே போ. எனக்கு வழிகாட்டுவதற்காக உன்னை யனுப்பிவித்தவர்களிடம் நீயேசெல்லு. எனக்கு அவ்விடம் வசிக்க இஷ்டமில்லை. என் அன்பிற்குப் பாத்திரர்களான மனிதர்கள் வசிக்கும் இவ்விடமே நான் வாசம்செய்வதற்குத் தகுதியான விடம். அங்குத் தனிமையாய்ச் சுக மனுபவிப்பதைவிட இங்கு துக்க மனுபவித்துக்கொண்டாவது இவர்களுடன் வசிப்பதே மேன்மை” என்றனர். அவர் அவ்விதம் கூறியவுடன் அவ்விடத்தில் சுவர்க்கத்திலிருக்கும் நறுமணமுள்ள காற்றும் ஜ்யோதிர்மயமான பிரகாசமும் தேவர்குழாமும் தோன்றின. அவ்விடம் சுவர்க்கமேயாகியது. நரகஸ்திகளை அன்பு வென்றுவிடுமன்றோ! துக்கானுபவத்தை விசுவாசம் மாற்றிவிடவாற்றலுளதன்றோ.

குடும்பத்திற்கு வெளியிலுள்ளோரிடம் நாம் காட்டிவரவேண்டிய நற்குணங்களிலெல்லாம் அதிதிவழிபாடே முதன்மையானது. அதிதிபூஜையில் நாம் எவ்வளவு மதிப்புவைக்கவேண்டியதென்பது, யுதிஷ்டிரர்செய்த ராஜஸூயயாகத்திற்குப் போயிருந்த பாதி சரீரம் தங்கமயமான கீரிப்பிள்ளையின் கதையால் அறிவிக்கப்பட்டிருக்கிறது. அக்கதை வருமாறு: யுதிஷ்டிரரது யாகம் யாகபாத்திரங்கள், ஸ்தம்பங்கள் முதலிய சகல சாமக்கிரிகளும் தங்கத்தாலாக்கப்பட்டதும், யாகத்துக்கு வந்திருந்த சகலரும் ஸ்வர்ணம், திரவிய

முதலியவற்றை எவரும் தடுக்காமல் தமக்குவேண்டிய வற்றை யள்ளிக்கொண்டு சென்றதுமாக மிகுந்த சிறப் புடன் நடத்தப்பட்டது. இதைப்பார்த்துங்கூட அந்தக் கீரியானது இவ்வளவு திரவியத்தின் தானமும் ஒரு பிராமணன் தன் அதிதிக்குக்கொடுத்த ஒரு சொற்ப விலையுள்ள கோதுமைமாவுக் கீடாகாதென்றுரைத்து அடியில்வரும் கதையைக் கூறிற்று. ஒரு பிராம ணன் உஞ்சிவிருத்தியைக் கைக்கொண்டு தான் தன்ம னைவி, தன்புத்திரன் மருமகள் இவர்களுடன் தான் பொறுக்கிக்கொண்டுவரும் தானியத்தில் ஒரேவேளை யற்பவிகாரத்தைச் செய்துகொண்டு ஜீவனம் செய்து வந்தான். இப்படியிருக்கையில் ஒரு கொடிய பஞ்சமு ண்டாகி அந்தத் தேசத்திலுள்ள நிலங்களவ்வளவும் சாகுபடியற்றுப் பாழாய்க் கிடக்கும்படிசெய்தது. அத னால் களங்களில் போரடிப்போரால் சிந்தப்படும் தானி யம் வரவர மிகச் சொற்பமாகியது. பிராமணனும் அவன் குடும்பமும் வரவர ஆகாரக்குறைவினால் தேக மிளைத்து வெறும் எலும்புக்கூடாயினர். ஒருநாள ந்தப் பிராமணன் மிகச்சொற்பவிலையுள்ள கோதுமைத் தானியத்தைப் பொறுக்கிச் சேகரித்துக் கொண்டுவந் து தன் மனைவிகையிற் கொடுக்க, அவளுமதை மாவா க்கிக் குடும்பத்திலுள்ள நான்கு பேர்களில் ஒவ்வொரு வருக்கும் அப்பமாயாவது பாகம்கிடைக்கும்படி அம் மாவை நான்குசரிகூறுகளாக்கி யவரவர்முன் ஒவ்வோர் பாகத்தைவைத்தனள். எல்லோரும்மிகச்சந்தோஷத்து டன் போஜனம்பண்ண உட்கார்ந்தார்கள். உட்கார்ந்த பின் அந்தச்சொற்பமானவுணவைக் கைத்தீண்டுமுன் ஒரு அதிதி அந்தக் கிருஹத்தின் துவாரத்தில் நுழைந்

தார். அதைக்கண்டவுடன் கிருஹஸ்தனுகிய பிராமண ன். திடீரென எழுந்து விரைந்துசென்று அவ்வதிதியை வரவழைத்து நீருமாசனமுமளித்து அவர்முன் தனது பாகமாகிய சுவற்ப வாகாரத்தை போஜனம்பண்ணும்ப டி வைத்தார். அதிதியும் அதை உண்டபின் பசியடங்கா மலிருந்தார். அதைக்கண்டு கிருஹஸ்தனது மனைவி தன்பாகத்தை யவ்வதிதியுண்ணும்படி கொடுத்துவிடு வதற்காகத் தன்புருஷனிடம் கொண்டுவந்து கொடுத் தாள். அதைப்பார்த்துக் கிருஹஸ்தன் ஓ ! என்குமா ரனுக்கு அன்னையே ! நீ பலவீனத்தால் நடுக்கமடைந் திருக்கின்றனை. உன்னுடைய பாகத்தை வைத்துக்கொ ண்டு போஜனம்பண்ணு. இல்லாவிடின் நீ சௌக்கிய மிழந்துவிடுவதால் என்வீட்டிற்கே ஒளியில்லாமற்போ கும்' என்றனன். இதற்கு மனைவி அதிதிபூஜையின் தர்மம் எவ்விதமும் குறைவுபடாமலிருக்கவேண்டுமா தலால் தன்பாகத்தை யளித்துவிடும்படி தன்கணவனைக் கட்டாயப்படுத்தினுள். கிருஹஸ்தனும் பெருமூச்சு டன் அதையேற்று அதிதிக்களித்தனன். இதையு முண்டபின்னும் அதிதி பசியடங்கினவராகவில்லை. உடனே குமாரன் தனதுபாகத்தையும் கொணர்ந்து கொடுக்கப் பிராமணன் தன்னுடைய குமாரனது இள மையான சரீரம் ஆஹாரமின்மையால் வாடிவற்றியதை பற்றிமனம் புண்ணுகி அதையும் அதிதிமுன் வைத் தான். அந்தோ! இப்பாகத்தையுமுண்ட வதிதிக்குப் பசி யடங்கவில்லை. இவ்வொவ்வோர் சிறுபாகமும் பசியுள்ள வவ்வதிதிக்கு எம்மட்டு. பிறகு குமாரனது மனைவியா கிய சிறு பெண்ணினது பாகமும் கொணரப்பட்டு இரு

ஹஸ்தனுகிய பிராமணன்கையில் அதிதிக்குச்சமர்ப்பிக்கும்படிவைக்கப்பட்டது. கிருஹஸ்தனுகிய பிராமணன் இதைக்கண்டு நடுங்கி, மனவேதனையுடன் கைகளைப் பின்னிழுத்துக்கொண்டு யச்சிறு பெண்ணைப்பார்த்து "குழந்தாய்! உனதுபாகத்தைக்கொடுக்கலாகாது, உன் பாகத்தைதரல் ஆகாது" என்றனன். அப்பொழுது அப் பெண் மிக வினயம்பொருந்திய தீங்குரலுடன் மாமனைப்பார்த்து "ஐயா என்மைமந்தன் பிதாவுக்கும் பிதாவே! உங்களது புண்ணியத்தில் பங்கடையாமலிருக்கும்படி என்னைத் தடுக்கலாகாது. அதிதியோ தேவருக்குச் சமானமானவர். உமது சதையேயாகிய இந்த வெனது ஆகாரத்தால் அவருக்கு போஜனமளியுங்கள்" என்றாள். இதைக்கேட்டு பிராமணன் கண்ணீருடன்முகத்தில்மட்டும் புன்சிரிப்பைக்காட்டிக்கொண்டு அவ்வன்னத்தை யதிதிமுன் வைத்தனர். அதிதி மதையு மெடுத்துண்டு களித்தனர். பின்னர் போஜனமுண்டு எழுந்தவுடன் ஒரு பிரகாசமான வொளிகிளம்பிற்று. அதன் மத்தியில் கம்பீராகிருதியும் மிகுந்த காந்தியும் பொருந்தியவராய் அதிதி நின்றார். அதிதி யாரெனில் தர்மத்துக்கு அதிபதியாகிய பராக்கிரமமும் பரிசுத்தியும்பொருந்திய யமதர்மராஜனுனதேவரே. இவரே யவ்விதம் பிராமணனைப் பரிசோதிக்கு நிமித்தம் அதிதியாக வேடம்தரித்து வந்தனர். இவ்வதிதியுண்டபின் மீந்த சில பருக்கைகளின் மீது இந்தக் கீரிப்பிள்ளை புரண்டது. அந்தப் பிராமணனது தியாகத்தின் மஹிமையால் கீரிப்பிள்ளை பின்பாதியுடல் சுவர்ணமயமாகியது. ஆதலின் அதிதிபூஜையாகிய தர்மம் அவ்வளவு விலையுயர்ந்தது. அதன் சக்தியும்

அவ்வளவு தாழ்ந்ததை யுயர்ந்ததாக்கும் மஹிமை யுடையது.

ஒரு கொடியவேடன், தான் பிரதிதினமும் செய்துவரும் குற்றமற்ற பக்ஷிகள் மிருகங்களிவற்றின் கொலைகளைப்போல் கருநிறம் பொருந்திய மேனியும், அவன் ஹிம்சித்துவந்த வம்மிருகங்களின்மீது அவன் கொண்டகுரோதத்தைப்போல் சிவந்த கண்களுமுடையோனாய் ஒருசமயத்தில் ஒரு காட்டின்மத்தியில் சமுசாரம் செய்துவரும்பொழுது பெருங்காற்று மழையும் இருந்தாற்போலிருந்து பேரிடியுடனவனைச் சூழ்ந்துகொண்டது. ஒரு க்ஷண நேரத்தில் வெட்டவெளியாயிருந்த பள்ளத்தாக்குகள் மழையால் ஜலம்நிறைந்த பெரும் ஏரிகளாயின. வழிபாதைகள் யாவும் காட்டருவிகளாயின. தனக்கு முன்தோன்றின மேட்டுப்பாங்கான நிலங்களுக்கு இவன் செல்லலாமென யோசித்தபொழுது அங்கு காட்டில் வசிக்கும் கரடி, சிங்கமுதலிய சகல துஷ்டமிருகங்களும் சென்றடைவதைக் கண்டதால் அங்குசெல்லவுமுடியவில்லை. அப்பொழுது காற்றுமழையின் குளிரினால் நடுக்கமெடுத்து கொடிய காட்டுமிருகங்களின் பயத்தால் வாதனைப்பட்டிருந்தானாயினும் அவனது கொடிய பழக்கங்களைமட்டும் விட்டுவிடவில்லை. என்னவெனில் அத்தருணத்தில் ஒரு பெட்டை மாடப்புறா மழையின் ஜலப்பிரவாஹத்தால் அடித்துத் தள்ளப்பட்டு குளிரால் விரைத்துப்போய்ப் பூமியில் கிடைப்பதைக்கண்டு அவன் உடனே யதைப் பற்றியெடுத்துச் சற்றேனு மிரக்கமின்றித் தன் கையிலிருந்த கூட்டிற்குள்ளடைத்துக்கொண்டான். பிறகு

சற்றப்பாற் சென்றவுடன் அக்காட்டின் மத்தியிலிருந்த ஒரு விசாலமான விருக்ஷத்தைக்கண்டான். அது தன் பரந்த கிளைகளால் அநேகம் பறவையினங்களுக்கு நிழலையும் ஆதரவையும் தருவதாயிருந்தது. இவ்வுத்தேசத்தைக்கொண்டே கடவுள் அவ்விருக்ஷத்தைச் சகலபிராணிகளுக்கு முபகாரார்த்தமாக உலகிற்கு ஒரு நல்லமனிதனைப்போல் அவ்விடத்தில் ஸ்தாபித்தனர்போலும். இவ்விருக்ஷத்தினடியில் அதன் பரந்த கிளைகளுக்குக்கீழ் அவ்வேடன்சென்று தங்கினான். பிறகு சிறிதுநேரஞ்சென்றபின் மழையோய்ந்து மேகங்களும் சிதறி நக்ஷத்திரங்களுதயமாயின. ஆயினும் வேடனுக்கு வீடு வெகுதூரமாயிருந்ததால் அவன் வீட்டுக்குச்செல்ல முடியவில்லை. அவ்விரவை யவ்விடத்திலேயே கழிக்கத் தீர்மானித்தான். அவ்விதமவன் மரத்தினடியிற் கிடந்தபொழுது மரத்தின்மேலிருந்த ஆண்புருவானது அடியில் வருமாறு புலம்புவதைக் கேட்டான். "ஐயோ என்னருமை மனையாளே! நீயின்னும் திரும்பிவந்து சேரவில்லையே! உனக்கென்ன விபத்து நேர்ந்ததோ? ஒளியுடைய மலர்ந்தகண்களும், தேன்போலு மினியகுரலும், மிகமிருதுவான ரக்கைகளுமுடைய அந்த எனது அருமை மனையாட்டி என் கூட்டுக்கு வராளாயின் நான் ஜீவித்திருப்பதில் யாது பயன். வாசம்செய்யும் வீடு வீடன்று, பின்னை மனையாளே வீடு; யான் உண்டால் அவள் உண்ணுவாள். யான் முழுகினாலவள் முழுகுவாள். யான் சந்தோஷிக்கும்பொழுது அவள் சந்தோஷிப்பள்; யான் துக்கிக்கும்பொழுது அவள் துக்கிப்பள். அதிலும் யான் கோபங்கொண்டால் அவள் மிருதுவாகவே எப்பொழுதும் பதி

னுரைப்பள். இவ்விதமான வில்லாளில்லாத வாழ்க்கை வீணே. இவ்விதமான மனைவியில்லாதவீடு அரண் மனையாயினு மஃது பாழே. இவ்வியற்கையுடையவள் ஒருவனுக்குச் சகல தர்மாசரணைங்களிலும் (தன்வாழ்க் கையில்), சுபசந்தோஷாதி வியவஹாரங்களிலும் விசு வாசமு மன்பும் பொருந்திய தவறாத் துணைவியாவ ளன்றோ ! சகலவித மனோவியாதிகளுக்கும் சிறந்த ஔஷதமிவளே. மனைவிக்கு மிஞ்சிய மித்திரனும், ஆதரவும் கிட்டாதன்றோ !" இவ்விதமான தன்னுடைய கனவனது புலம்பலைச்செவியுற்று அந்தக்கொடியவேட னது கூண்டிலடைப்பட்டிருக்கும் பெண்புறா தனக்கு ள்ளே "என்கணவன் என்னைப்பற்றி யிவ்வாறு நினைப் பதால் இவ்வாபத்திலும் எனது பாக்கியமளவற்றது கணவன் திருப்தியடையாத மனைவியும் மனையாளாவ ளோ ? ஆயினு மிச்சமயத்தில் என் பாக்கியத்தை நினைத்து மகிழ்வது சரியன்று. இவ்வப்பாவியான வேடன் மழைக்காற்றாலடிபட்டு இங்குவந்துசேர்ந்து தன் வீட்டுக்குத் திரும்பிச்செல்ல வழியற்று விழிக் கின்றனன்றோ ! இவனிப்பொழுது நமது வசதிக்குக் கீழ் வந்தடைந்திருப்பதால் நமக்கு அதிதியாகிறான்"
எ ன விவ்வாறு நினைந்து தன் கணவனாகிய வாண்புறா
வை நோக்கி உரக்கக்கூவி அவ்வேடனிருக்கு மவஸ்
தைல ய யதற்குத் தெரிவித்தது. அதைக்கேட்டு
ஆண்பு( றவும் உடனே தனது துக்கங்களை மறந்து
விட்டு ( வேடனைப்பார்த்து "ஐயா வாரும், நீர் எமக்
குச் சிறந்த அதிதியே. உமக்கு நான் செய்யவேண்டிய
தைக் கூறி வேண்டும்" என்றது. இதைக்கேட்ட
வேடன் "இ விரினால் நான் விரைத்துப்போயிருக்கி

றேன். கூடுமானால் எனக்குச் சூடுண்டாக்கவேண்டு மென்றான். பட்சியுமுடனே காய்ந்துதிர்ந்த சருகுகள் பொறுக்கிக்கொணர்ந்து குவியலாக்கி அவற்றுளொன் றை தன் மூக்கினாற் கவ்விக்கொண்டு பறந்துபோய்ச் சமீபத்திலிருந்த ஒரு கிராமத்திலிருந்து ஒரு சிறு நெ ருப்புத்துண்டை வைத்துக்கொண்டு திரும்பிவந்தது. சற்றுநேரத்திற்கெல்லாம் குவியல் நெருப்புப்பிடித்து வேடனுக்கு வேண்டிய உஷ்ணத்தை ஈந்தது. பிறகு பட்சி மறுபடியும் வேடனைப்பார்த்து இன்னும் தான் செய்யவேண்டி சேவை யாதென வினவியது. வேடன் தனக்குணவு வேண்டுமென்றான். இதைக்கேட்டுப் பட்சி "இவனுக்கு அன்னமளிக்க என்னிடம் சாமக்கி ரிக ளில்லையே—என்னசெய்வேன் பசியோடுகூடிய வதி தியை எவ்விதத்தாலும் அன்னமின்றி யனுப்பிவிடல் கூடாதே." என இவ்விதமாழ்ந்து ஆலோசிக்கும்பொ ழுது அப்பட்சியின் மனத்தில் ஓர் சமாதானம் திடீரெ னத் தோன்றிற்று. உடனே அது வேடனைப்பார்த்துக் ஐயா! உம்மை யிதோ திருப்திசெய்கிறேன். அதிதி யைப் பூஜிப்பது மிகவும் புண்ணியமெனப் பூர்வகாலத் தில் மகானுபாவர்களான ரிஷிகள், தேவர்கள் பிதிருக் கள்சொல்ல நான் கேட்டிருக்கிறேன். ஆதலால் ஓ! மித்திரனே! நீர் என்னிடம் கருணைவைத்து இந்த வெ னது அற்ப கைங்கரியத்தை ஏற்றுக்கொள்ள வேண் டும்." என்று கூறி யுடனே அவ்வக்னியைச்சுற்றி மூன்றுதரம் வலமாய்ப்பறந்து வந்த அதிதிக்கு தனது சரீரத்தை ஆகாரமாக்கும்பொருட்டு அக்நியிற்பிரவே சித்தது.

இந்தப்பரம உக்கிரமான அதிதி பூஜாப்பிரகாரத்தைக் கண்ணுற்ற வேடனுக்குத் திடீரென அவனது பாபமே நிறைந்த சென்ற காலத்தைநோக்கி யோர் மஹாபிரீதியுண்டாகி யவன்மனதைக் கவர்ந்துகொண்டு அவனது அதமசுபாவ முழுவதையும் வேரோடு பிடுங்கி யெறிந்து அவனைச் சின்னபின்னமாகும்படி பிளந்தெறிந்துவிட்டது. "ஆ! மஹாப்பிரபாவமுடைய பட்சியே! நீயே எனக்கு மகாகுரு! எனது தர்மத்தை நீயே காட்டினாய்! இன்றுமுதல் இப்பாபத்தால் வளர்ந்த வெனது சரீரத்திற்கு வேண்டிய ஆதரவுள்ள சௌக்கியாதிகளையெல்லாம் தேடுவதை முற்றிலுமொழித்துப் பிரதிதினமும் தபசு, உபவாசங்களால் கோடைக்காலத்துச் சூரியவெப்பத்தால் சேறடைந்த சிறுகுட்டை யுலர்த்தப்படுவதுபோல் சகல பாபங்களுடனும் எனதுசரீரத்தை யுலர்த்திக் காற்றோயோடிப் போம்படிசெய்து நான் செய்திருக்கிற பாபங்களுக்குப் பரிஹாரம் தேடிவருவேன். உன் திருஷ்டாந்தத்தால் புத்தியுணர்ந்து இன்றுமுதல் தர்மத்தையே நடத்திவருவேன்." என்று கூறித் தன் தடி, வலைகள் இரும்புகூடு ஆகிய இவற்றைத் தூரவெறிந்துவிட்டுக் கூட்டிலிருந்த அன்பனிறந்த அப்பெண்புறாவையும் சிறைநீக்கி வெளிப்படுத்தினான். இவ்வாறு சிறைநீக்கப்பட்ட பெண்புறாவும் தன் கணவனிறந்த சிதாக்கினியை வலம்வந்து அலறியழுது" ஒரு ஸ்திரீயானவள் தன் தாய்தந்தையர் புத்திரனிடம் அடையும் பலன்கள் சொற்பமே! கணவன் கொடுப்பதுவோ அநந்தம்! அவன் தன்னுடைய தவ்வளவையும் தன்னையும் அவளுக்கு அர்ப்பணம் பண்ணுகிறான். ஆ! என் கணவனே! இத்தனை வருஷங்கள்

உன்னிடம் இன்புற்றுவாழ்ந்தபின் உன்னைவிட்டுத் தனித்து யான் வாழமுடியுமோ! என்று கூறி அவ்வக்கினியிலேயே தன்னையும் வீழ்த்தியது.

உடனே யவ்வேடனுக்கு சூட்சும திருஷ்டியுண்டாகி அவ்விருபட்சிகளும் திவ்விய சரீரங்களையடைந்து சுவர்க்கலோகஞ் செல்லுவதைத் தரிசித்தான். இக்காட்சியால் நல்வழியில் திரும்பிய அவனது சித்தம் மிகவுறுதியடைந்தது. அவன் அக்காட்டிலேயே வாசம்செய்வோனாகி, அதுமுதல் சகலபாபங்களையுமொழித்து நிர்த்தோஷமாய்க் காலம்கழித்துவந்தான். முடிவில் இவன் செய்துவந்த தபசு இவனது சகல பாபங்களையும் போக்கிவிட, ஒருநாள் கோடைக்காலத்தில் எழுந்து பெரும்புயற்காற்றால் காட்டில் நின்ற பெருமரங்கள் ஒன்றோடொன்றுமோதி யுண்டான அக்கினியானது அவன் சரீரத்தைச் சூழ்ந்துகொண்டு விழுங்கியது.

பிறர் தனக்குச் செய்யும் அபகாரங்களை மன்னிக்கத் தயாராயிருப்பது உண்மையான உத்தம சுவபாவத்தின் லக்ஷணம். ஸ்ரீராமச்சந்திரனைப்பற்றிக் கூறப்பட்டிருக்கிறதாவது:—நூறு அபகாரங்களாயினும் அவர் நினைவிலழுந்துகிறதில்லை. உபகாரமோ ஒன்றே யாயினும் அவ்விடம் ஸ்திரமாயமைந்து விடுகின்றது. விதுரன் தனக்குநேர்ந்த வுபகாரத்தையு மிகழ்ச்சியையும் மறந்துவிட்டு க்ஷமித்ததைக் கேளுங்கள். ஒரு சமயத்தில் திருதராஷ்டிர மகாராஜன் தன்குமாரனான துரியோதனனது துர்நடத்தை விஷயத்தில் தனக்கு யோசனை சொல்லும்படி விதுரனை வேண்டினன். விதுரனும் சரியானபடி, உறுதியுடன் தன்குமாரன் துரியோதனனைப்

பார்த்துப்பாண்டவர்களுடன் போட்டிபோடாமல் சமாதானமாயிருக்கவேண்டியது அவன் கடமையென்றும், இதுவரை யவர்களுக்கு விரோதமாய் அவனுக்கு சஹாயம்புரிந்தவர்கள் யாவரையும் நாட்டைவிட்டுத் துறத்திவிட்டுப் பல விடுக்கண்களையடைந் தனுபவித்த பாண்டவர்களை வணங்கி அவர்கள் மன்னிப்பைபெறும்படி அவன் செய்யவும் வேண்டியதென்றும், திருதராட்டிரன் கூறவேண்டியதே நியாயமென எடுத்துரைத்தான். இதைக்கேட்டுத் திருதராட்டிரன் மிகவுஞ் சினங்கொண்டு விதுரன் பாண்டவர்களிடம் பக்ஷபாதத்தால் துரியோதனதியரிடம் வெறுப்புள்ளவனாகிவிட்டதாய் அவனைக் குற்றங்கூறி நிந்தித்துக் கோபத்துடன் உத்தம சகோதரனை அவ்விதுரன் பக்கலைவிட்டுத் திடீரென எழுந்து சென்றான். பிறகு விதுரனும் மிகவும் விசனத்துடன் பாண்டவர்களிடஞ் சென்று தான் சினங்கொண்ட சொற்களால் திருதராஷ்டிரனால் திக்காரம்செய்யப்பட்டதைக் கூறி அவர்களை மிருதுசுபாவமும் மரியாதையும்பொருந்தி நடந்துகொள்ளும்படி அறிவுறுத்தினான். இங்கு விதுரன் சென்றபின்னர் திருதராட்டிரன் தன் கொடுமை நீதியவற்றை நினைந்து பச்சாத்தாபப்பட்டு அவன் தன்னிடம் திரும்பிவரும்படி வேண்டிக்கொண்டு சஞ்சயரை யவனிடமனுப்பினான். ஓ! சஞ்சயரே! நீர்சென்று என் தம்பியாகிய விதுரன் ஜீவனுடனிருக்கின்றானவென வறியும். கோபத்தால் மெய்மறந்து அவனையா துரத்திவிட்டேன். அவன் எனக்கு ஒருபோதும் எவ்வித அபசாரத்தையும் செய்தவனன்று. வேறெவ்விதக்குற்றத்தையும் செய்தவனுமன்று. அப்படியிருக்க நான் மிக வநியாயமாய் அவனுக்கு தீங்

கிழைத்தேன். என்ன செய்வேன் ? ஓ ! புத்திமானுகிய சஞ்சயரே ! எவ்வித மாயினும் நீர் அவனைக்கண்டு பிடித்து என்னிடம்கொணர்ந்து சேர்ப்பித்தல்வேண்டும்" என்றலறினன். அவ்விதமே சஞ்சயரும் சாந்தமும் பொறுமையுமுள்ள விதுரன் இவ்விதம் நிமிஷந்தோறும் மாறிவரும் சுபாவமுடைய தன் தமையனது உறுதியின்மையை மன்னித்துப்பழையபடி அவன் ராஜ்ஜியபாரத்திற்குப் பேராதரவாய் நிற்பானுமெனத்தன்னுள்ளே சந்தேகித்துக்கொண்டே சென்று காட்டையடைந்து தர்ம புத்திரனுதியர்களால் மிகவுமாதரவு, வந்தனைகள் செய்யப்பட்டிருக்கும் விதுரனைக்கண்டு திருதராட்டிரன் பிரார்த்தனையைக்கூறி ஹஸ்திஞபுரத்திற்குத் திரும்பிவரும்படி வேண்டினன். விதுரனும் இதைச் சற்றேனும் தாமதியாமல் தன் தமயன் புத்திரர்களான பாண்டவ ராஜகுமாரர்களிடம் விடைபெற்றுக்கொண்டு திரும்பித் தன் தமயன் திருதராட்டிரன் பக்கல் விரைந்து சென்றடைந்தான். திருதராட்டிரனும் தான் செய்த குற்றத்தை மன்னிக்க வேண்டுமெனவே விதுரன் மிகவுமிருதுவாய் "அரசனே ! யான் நினது குற்றத்தை மன்னித்தேன். நீ எனக்குத் தமயனும் அரசனுமாதலால் என்னுல் மிகவுமுயர்வுடன் வணங்கப்பட வேண்டியவன். உனது முகத்தைப் பார்க்கவேண்டுமென்று ஆவலுடன் யான் திரும்பிவந் திருக்கின்றேன். பாண்டவர்களிடமன்பு வைத்தவன்போல் நான் தோன்றினதற்குக் காரணம், இடுக்கண் அடைந்தவர்களை நோக்கி எவருடைய ஹிருதயமும் அவரது தீர்க்கவாலோசனையில்லாமலே கேவலம் இரக்கத்தாலேயே செல்லுவதுபோல், என் மனமும் சென்றதாலன்றி வேறன்று;

ஓ! அரசனே! அப்பாண்டவர் எனக்கு எவ்வளவு அருமையோ அவ்வளவு உனது மைந்தர்களும் அருமையே! ஆயினும் பாண்டவர்கள் படும் துயரம் என் மனத்தைக்கவர்ந்தது" என்று இவ்விதம் மிக மிருதுவுடனும் மேன்மை பொருந்தியும் தம்பியாகிய விதுரன் தான்பெற்ற சிந்தனைகளைப் பிரயோசனமற்ற விஷயமாகத் தள்ளிவிட்டுத் தமயனைநோக்கி மொழிந்தான்.

மரியாதையென்பது பூர்வகாலத்தில் ஒரு ஹிந்துவின் முக்கியமான குணமாயிருந்தது. பிரசித்தமான புராண இதிஹாசங்களில் கூறப்படும் சாதுக்கள் துஷ்டர்களான பெரியோர்கள் தமது அதிதிகள் மித்திரர், சத்துருக்களிடம் வசனத்திலும் நடத்தையிலும் மிக வற்புதமான மரியாதையையே பாராட்டிவந்திருக்கிறார்களென நாம் படித்திருக்கிறோம். ஸ்ரீ ராமச்சந்திரன் மிருதுவான வசனமும் 'பேசும்பொழுதெல்லாம் மிகுந்த வன்பைக்காட்டும் புன்சிரிப்புடைய முகமுடையவர். சௌபாக்கியத்திற்கு அதிதேவதையான லக்ஷ்மிதேவி, இன்புற்றவசனம் க்ஷமை பக்ஷமிவை யுடையதானவர்களைப்பற்றிப் பேசும்பொழுது, அவர்களது நற்குணங்களினிமித்தம் தான் அவர்களிடம் வசித்ததாக மொழிந்தாள். பிறகு அவர்கள் கோபம், கொடுமை, அக்கிரமமிவற்றிற் கிடங்கொடுத்து விட்டபோது அவள் தன்னோடு சதாகாலமும் வாசஞ்செய்யும் தேவிகளான, நம்பிக்கை சிரத்தை, புத்தி, திருப்தி, சித்தி, விர்த்தி, க்ஷமை இவர்களுடன் அத்தானவர்களைவிட்டு வெளியேறினள். இவ்விதமே நாரதபகவானும், மிருதுவசனமும், பெருமனதும், மதுரசுபாவமும், கோபமாச்ச-

ரியமின்மையும் பொருந்தியவர். அதனால் யாவராலும் பக்தி சிரத்தையுடன் பூஜிக்கப்பட்டுவந்தார்.

அவ்விதமே பீஷ்மரும், நாம் பிறரை பார்வையாலாவது துக்கப்படுத்துவது கூடாதென்றும், எவரையும் பற்றித் தீங்குபேசுவதும் தீங்குசெய்வதும், எவரிடமும் பக்ஷமின்றி ஒழுகுவதும் தகா தென்றும் உபதேசிக்கிறார். அன்றியும் பிறர் நம்மைநோக்கி நிந்தைமொழிகளைப் பேசினாலும் அவற்றை நாம் கவனியாது செல்லுதலே தகுதியென்றும், ஒருவன் வேண்டுமென்று நமக்குக் கோபமூட்ட முயலுவனாயினும் நாமவனுடன் மிருதுவாகவே பதில்மொழி கூறுதல்வேண்டுமென்றும், நாம் நிந்திக்கப்பட்டால் அதற்குப்பதிலாய் நாமும் பிறரை நிந்தித்தல் கூடாதென்றும் அவர் கூறியிருக்கிறார்.

நாரதபகவான் பத்மன் என்னும் நாகனைப்பற்றி அடியில்வருமாறு வர்ணிக்கிறார். அவன் சரியைகிரியை யோகமார்க்கத்தில் சிறந்தவன். சதாகாலமும் அதிதிபூஜை, க்ஷமை, அஹிம்சை இக்குணங்களை யப்பியசித்து வந்தான். எப்பொழுது முண்மையே பேசுவான். மாத்ஸரியமற்று யாவரிடத்திலும் பக்ஷமோடு பேசிச் சகலருக்கும் நன்மையையே கோருவோனாயிருந்தான். அவன் இவ்விதமாய்க் காலங்கழித்துவருகையில் ஒரு பிராமணன் அவனைக்கண்டு அவனிட முபதேசம் பெறவேண்டு மென்னுங் கருத்துடன் அவனிடம் சென்றான். பிராமணன் அவனது வீடு வந்து சேர்ந்தபொழுது நாகன் அத்தருணத்தில் வீட்டில் இல்லை. அவனது மனைவி பிராமணனை மரியாதையு

டன் வரவழைத்து அதிதிக்குரியவந்தனை வழிபாடுகள் செய்தனள். பிறகு பிராமணன் அவளுடன் இரண்டொரு மரியாதை வசனங்களைப் பேசினவுடன் வீட்டை விட்டு வெளியேசென்று நதிக்கரையில் அவளது கணவனாகிய நாகனது வரவைஎதிர்ப்பார்த்துக்கொண்டு பொறுமையுடன் காத்திருந்தான். பிராம்மணன் அவ்விதம் காத்துக்கொண்டிருந்த பொழுது போஜனம் பண்ணாதிருந்தான். அதைக்கண்டு தேசாந்திரம் போயிருந்த நாகனது சுற்றத்தார் மிகவு மனவருத்தத்துடன் பிராமணனிடம் வந்து, "ஐயா பால விருத்தர்கள் கூடிய எமது ஜாதியார் முழுவதும் இன்று நீர் கடுமையாய் உபவாசமிருப்பதைக்கண்டு மிகவும் நோகின்றார்கள்; ஏனெனில் நீர் போஜனம் பண்ணாமலிருப்பது நாங்கள் எங்கள் கடமையான அதிதி பூஜையைச் செய்யாது விட்டிருக்கிறோ மென்பதைக் காட்டுகிறதல்லவா". என்று கூறிப் பிராமணனை எவ்விதமாயினும் ஆகாரம் பண்ண வேண்டுமெனவேண்டினார்கள். அதற்குப் பிராமணன் மிகவுந்திருப்தியுடன்மிருதுவாய் நீங்களிவ்வித வுபாசத்துடன் தனக்கு மரியாதை பண்ணினதாலேயே தனக்கு ஆகாரமளிக்கப்பட்ட தென்பதற்குச் சந்தேகமில்லை யென்று கூறித் தான் நாகராஜன் வருமளவும் போஜனம் பண்ணுவது கூடாதென்று விடை மொழிந்தான். உடனே சற்று நேரத்திற்கெல்லாம் நாகனும் வந்து சேர்ந்தான். அவன் மனைவியுமுடனே யவனுக்குப் பிராமணன் வரவை யறிவித்தனள். அப்பொழுது அம்மனைவியும் நாகனும் பேசிக்கொண்ட சம்பாஷணையில் கிருகஸ்தனது கடமைகள் யாவும் வருணிக்கப்படுகின்றன. கிருஹஸ்தனுக்கு முக்

கிய தர்மமாவது சகலருக்கும் உபகாரம் புரிதலே. அதிதியென வருபவர்யாவரும் மரியாதையுடன் உபசரிக்கப்படவேண்டும். கிருஹஸ்தன் எப்பொழுதும் சாந்தகுணமுள்ளவனு யிருத்தல் வேண்டும். கோபம், அகங்கார மிவற்றை நீக்கவேண்டும். தயாள குணமும், சத்தியமும் பொருந்தி நிற்றல் வேண்டும். இதுவே முற்காலங்களில் நாடுநகரங்களில் மனிதன் தனைச் சூழ்ந்துள்ள பிறர் விஷயத்தில் நடந்து கொள்ளுவதற்குக் கற்பிக்கப்பட்ட வழி.

விசேஷ மபிவிர்த்தியைக்கோரும் பிதா, சகோதரன், புருஷன், புருஷனது சகோதரன், இவர்களாலும் இவர்கள் (ஸ்திரீகள்) பூஜிக்கப்படவும் வேண்டும்.

எவ்விடத்தில் நாரிகள் பூஜிக்கப்படுகிருர்களோ அவ்விடத்தில் தேவதைகள் ரமிக்கிருர்கள். எங்கு அவர்கள் பூஜிக்கப்பட வில்லேயோ அங்கு நடத்தப்படும் சகலவித கிரியை நிஷ்பலனுகின்றன:—

எங்கு ஸ்திரீ ஜனங்கள் துக்கமடைந்திருக்கிருர்களோ அக்குலம் சீக்கிரத்தில் அழிகின்றது. எங்கு அவர்கள் துக்கமடையாமலிருக்கிருர்களோ அக்குலமே எப்பொழுதும் அபிவிர்த்தியடைகின்றது.

ஸ்திரீ ஜனங்கள் பூஜிக்கப்படாமல் சபிக்கும் கிருஹங்கள் அபிசாரகிரியை களைவழிக்கப்பட்டவைகளைப் போல் பூர்ணமாய் நசித்துவிடுகின்றன.

மனுஸ்மிருதி iii 55-58.

ஒருவன் என்பது அவன், அவன் மனைவி பிரஜை யிவ்வளவே. ஒருவனும் அவன் மனைவியும் ஒன்றே யென பிராமணர்கள் கூறுகிறார்கள்.

மனுஸ்மிருதி IX. 45.

தாய்மார்களாவதற்கு ஸ்திரீகளும், பிதாக்களாவ தற்கு புமான்களும் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆதலால் வேதத்தில் சகல கிரியைகளும் பத்தினியுடன் செய்யப்படவேண்டுமென விதிக்கப்பட்டிருக்கின்றது.

மரணம்வரை பரஸ்பரம் துரோக மற்றிருக்கை இருத்தல் வேண்டும். இதுவே சுருக்கத்தில் ஸ்திரீபு மான்களுடைய உத்தமமான தர்மமென வறியத் தகுந் தது.

ஆதலால் விவாஹம் செய்துகொண்ட ஸ்திரீபு மான்களிருவரும் ஒருவரைவிட் டொருவரும் பிரியாத படிக்கும், பரஸ்பர விசுவாசத்தை மீறாதபடிக்கும் நடந்துகொள்ளக்கடவர். மனுஸ்மிருதி IX. 96. 161, 102.

புல், இருப்பிடம், ஜலம் நாலாவது பிரியவார்த் தை இவை யத்தனையும் நல்லோர்களின் கிருஹத்தில் ஒருபோதும் குன்றுகிறதில்லை.

சாயங்காலத்தில் சூரியனாலனுப்பப்பட்ட அதிதி கிருஹத்திற்கு வந்தால் அவனைத் துரத்திவிடலாகாது; அவன் தக்க சமயத்தில் வந்தாலும் சரி, சமயமில்லாத பொழுது வந்து சேர்ந்தாலும் சரி அவன் அன்ன மின்றி அக்கிருஹத்தில் வசிக்கலாகாது.

கிருஹஸ்தன் அதிதிக்கு அளிக்கப்படாத எப்பொழுதும் ஜலத்தையும் ஸ்வயமுட்கொள்ளலாகாது. அதிதியை யுபசரித்தலானது தனம், ஆயுள், கீர்த்தி, ஸ்வர்க்கம் இவற்றை யெல்லாமளிக்குந் தன்மையது. மனுஸ்மிருதி iii. 101. 105. 106.

சத்தியத்தைப்பேசவேண்டும்; பிரியத்தைப் பேசுதல் வேண்டும்; பிரீதியை விளைவிக்காத சத்தியத்தையும் பேசுதலாகாது; பிரியத்தையும் அசத்தியமாயின் பேசுதல் கூடாது; இதுவே சாசுவதமான தர்மம். மனுஸ்மிருதி iv. 138.

எவனது வாக்கும் மனதும் பரிசுத்தமானவையாயும் செம்மையாய் அடக்கப்பட்டனவாயு மிருக்கின்றனவே அவனே வேதாந்தத்தில் பேசப்படுகிற சகல பலன்களையு மடைவான்.

துன்பமுறுத்தப்பட்டபொழுது பிறரை (வசனத்தால்) நோகச் செய்பவனாதலாகாது. பிறருக்குத் துரோகமான காரியங்களைச் செய்யும் புத்தியும் படைத்தலாகாது. எதனால் கேட்போன் நோவடைவானோ அவ்வித உலகத்திற்குத் தகாத வார்த்தைகளை யுச்சரிக்கலாகாது. மனுஸ்மிருதி ii. 160, 162.

நாஸ்தீகம், வேதநிந்தை, தேவதைகளை யவமதித்தல், துவேஷம், பிடிவாதம், கோபம், கொடுமை இவற்றை யொழித்தல்வேண்டும். மனுஸ்மிருதி ii. 163.

பிறர் நெஞ்சைப் புண்ணாக்கும் வசனங்களைப் பேசுதலாகாது; கொடுஞ் சொற்களைச் சொல்லலும் கூடா

து. பிறர்க்குக் கலக்கத்தைத்தரும் பாபலோகங்களைச் சேர்ந்த வசனங்களையும் பேசலாகாது.

பிறனை நோவுறப் பேசுபவனையும், துஷ்டவசனம், கொடுஞ்சொல் லிவை பேசுபவனையும், பிறனை முட் போன்ற வசனங்களால் வருத்துவோனையும், மானிடருள் மிகவும் பாக்கியமிழந்தவனென்றறி. வாயில் பிசாசமொன்று கட்டப்பட்டவனென்றறி.

இவ்வசனங்கள் அம்புகளே. ஏனெனில் அவற்றாலடியுண்டவர்கள் இராப்பகல் வருத்தமடைகின்றனர். பிறருடைய மர்மங்களில் இவை பிரஹாரம் பண்ணுகின்றன. ஆதலாலிவற்றைப்பண்டிதன் பிறர்மேல் அனுப்பான்.

பூதங்களினிடத்தில் தயை, மைத்ரம், ஈகை, காருண்யம். இவற்றைப்போன்ற சம்பத்து திரிலோகத்திலும் வேறு கிடையாது.

ஆதலால் எப்பொழுதும் சமாதானமாகவே எப்பொழுதும் பேசுதல் வேண்டும். எவ்விடத்தும் கொடுஞ்சொற் சொல்லலாகாது. பூஜிக்கவேண்டியவர்களைப் பூஜிக்கவேண்டும். எவருக்கும் ஈதல்வேண்டும், பிறரிடத்தில் யாசித்தல் கூடாது. மஹாபாரதம் ஆதிபருவம் XXX. VII. 8. 9. 11. 12. 13.

கோபங்கொண்டால் மனுஷியன் பாபத்தைச் செய்கிறான். கோபமடைந்தால் பெரியோர்களையுங் கூட கொடுஞ் சொற்களால் அவமதித்து விடுகிறான். இம் மட்டோ! கோபம் வரின் தன்னையும் கூட யமாலயத்

திற்கு அனுப்பிவிடுகிறான். இத்தோஷங்களைக்கண்டு தான் பெரியோர்கள் கோபத்தை ஜயித்தார்கள். மஹா பாரதம். வனபருவம். XX IX. 4. 6.

ஓ! விப்பிரா! எந்த ஓரே நிலைமையை நன்றாய் அனுஷ்டித்தால் மனிதன் சகல ஜனங்களுக்கும் ஓர் உதாரணமாகிப் பெருங் கீர்த்தியையு மடைவான் (என்று இந்திரன் தன் குருவான பிருஹஸ்பதியைக் கேட்டான்.) சாந்தி யொன்றை மனிதன் செவ்வையா யனுஷ்டிப்பானாகில் சகல மானிடர்க்கும் பிரமாணமா யும் பெருங் கீர்த்தியையு மடைவான். மஹாபாரதம் சாந்திபருவம் XXVIX. 2. 3. 4.

எவன் கோபம் கிளம்பிய பொழுது அதை அறி வால் தடுத்தடக்குகிறானோ, அவனையே வீரியமுள்ள புருஷனென்று தத்வதர்சிகளான பெரியோர்கள் மதிக் கிறார்கள்.



## நம்மிலுந் தாழ்ந்தோரிடம் நாம் பாராட்டக்கூடிய நற்குணங்களும் துற்குணங்களும்.

நாம் உலக வியவஹாரங்களிற் செல்லும் பொ ழுது, வயதிலும் படிப்பு அனுபவங்களிலும், கீழ்ப்பட் டோர், வறுமையில் தாழ்ந்தோர், குலம் மதிப்பு இவற் றில் அந்தஸ்து குறைந்தவர், இவ்விதமானவர் பலருட னும் பழகுகிறோம். இவ்விதம் பொதுப்படவாவது அல்லது ஏதேனுமோர் விஷயத்திலாவது, நம்மிலுந் தாழ்ந்தோரிடம் நாம் சம்பந்திக்கிறோமாதலால் அச்சம் பந்தங்கள் ஒழுங்கு ஒற்றுமையுடன் நிறைவேற வேண்

டுமாயின், எவ்வித நற்குணங்களை நாம் அபிவிர்த்தி செய்துவர வேண்டியது என்றும், எவ்வித துர்க்குணங் களை நீக்கிக்கொள்ள வேண்டியது என்றும், நாமறிய வேண்டிய தவசியமாகின்றது.

இவ்விதப் பழக்கங்களில் எல்லாம் நமது குழந் தைகளுடன் நமக்கு ஏற்படுவனயாவையோ அவைதாம் முதலில் உண்டாகின்றன. தாய் தந்தையர்க்கும் சிறு வர்க்குமுள்ள சம்பந்தங்களில் சகல நற்குணங்களும் காணப்படுகின்றன. அன்பு, இரக்கம், சாந்தம், பக்ஷம், இவை யன்புள்ளதாய் தந்தையரிடம் எவ்வளவு விசேஷ மாய்ப் பிரகாசிக்கின்றன! இந்நற்குணங்கள் விளங்கும் குடும்பமானது எவ்வளவு பாக்கியமுடையதாகின்றது! இக்குடும்பத்தில் தந்தையர், தாய்மார்கள் தம் குழந்தை களை நேசிக்கிறார்கள். அவர்கள் வருத்தப்படும்பொ ழுது தாமும் வருத்தப்படுகிறார்கள். சுகிக்கும்பொழுது சுகிக்கிறார்கள் அவர்களது சகல வியவஹாரங்களிலும் ஆதரவு வைக்கிறார்கள்.

இவ்விஷயம் அடியில்வரும் சுரபி தனது குழந்தை களின் வருத்தங்களைக்கண்டு துக்கமுற்ற கதையில் அழகாய்க் காட்டப்பட்டிருக்கின்றது. முற்காலங்களில் பசு காளை மாடுகளின் வம்சங்களுக்குத் தேவமாதாவா கிய சுரபியானவள் ஒருகாலத்தில் தேவேந்திரன் முன் கண்ணீர் சொரிந்துகொண்டு நின்றது. அதைக்கண்டு தேவேந்திரன் பரபரப்புடன், ஓ! பசுக்களின் புண்ணிய மாதாவே! நீ யேன் அழுகின்றனை, உனக்கு என்ன தீங்கு சம்பவித்தது, என வினவினான். அதற்கு சுரபி எனது இந்த சரீரத்திற்கு யாதொரு தீங்கும் சம்பவிக்க

யில்லே, நான் என் குழந்தைகளினிமித்தம் வருந்துகி றேன். ஓ! உலகங்களுக்கதிபதியாகிய தேவேந்திரா அதோ ஒரு கொடிய வுழவன் கலப்பையை யிழுத்துச் செல்லும் எனது துர்ப்பலமான குமாரனையடிப்பதையும், சக்தியில்லாமல் அது அடிக்கடி கீழேவிழுவதையும் பார்; கலப்பையிற் கட்டியிருக்கும் மற்றோர் எருது பலமுள்ள தாதலால் தன் பாரத்தை லகுவாய்த் தாங்கிச்செல்கின் றது, துர்ப்பலமான எருது மிகச்சிரமத்துடன் தாங்குகி ன்றது. இதற்காகத்தான் யான் நெஞ்சுபுண்ணாகிக் கண் ணீர் விடுகின்றேன். எனக்கூறக்கேட்டு இந்திரன் ஆச் சரியமடைந்து இம்மாதிரி எத்தனையோ ஆயிரங் கணக் காய் நின் குழந்தைகள் ஒவ்வொருநாளும் உலகத்தில் கொடுமையுடன் நடத்தப்படுகின்றனவே. எனக்கேட்க அதற்கு சுரபியும் "ஆம் அரசனே இவ்விதம் வருத்தப் படும் அத்தனைக்கும் இப்படியே நான் துக்கிக்கிறேன். அதிலும் பலமுள்ள எருதுகளைக்காட்டிலும் பலமற்ற வைகளைப்பற்றி எனக்கு வியசனமதிகம்." என்றது. இதைக்கண்டு இந்திரன் தன் குழந்தையின் வருத்தத் தைக்கண்டும் தாய் படும் துக்கமின்னதென அறிந்து கொண்டு, பூலோகத்தில் நிலங்களின் மீது மாரி நிரம்ப வருஷித்து, மனிதர் மிருகங்கள் யாவருக்கும் க்ஷேமத் தை விளைவித்தான். தசரதன் சகல நற்குணங்களும் பொருந்திய ராமச்சந்திரனிடம் காட்டிய அன்பு மிக வும் அருமையானது. ராமச்சந்திரனது உயர்ந்த குணத் தைக்கண்டு தசரதன் அடைந்த சந்தோஷமும், பின்னர் ராமச்சந்திரன் காட்டுக்குப்போகும்படி நேர்ந்தபொ ழுது அடைந்த துக்கமும், அவரது புத்திரவாஞ்சையை

விளக்குகின்றது. தன் தேசத்திலுள்ள பிரபுக்களையும் ராஜகுமாரர்களையும் வரவழைத்து, அவர்கள் முன்னிலையில் தன் குமாரனைத் தனது சிம்மாசனத்தில் ஏற்றுவிக்கத்தான் கொண்ட கருத்தை வெளியிட்டபொழுது அவர் கூறினதைக்கேட்டால் அவரது ஒவ்வொரு வாக்கியமும் அவர் மனதிலுள்ள அன்பையும் சந்தோஷத்தையும் வெளிப்படுத்துகின்றது; பின்னர் கைகேயி தன்வரங்களைக்கேட்டுராமன்காட்டுக்குப்போகவேண்டுமென்றபொழுது, தசரதர் அவள் காலில் வீழ்ந்து உலகம் சூரியனைவிட்டுப்பிரிந்து வாழ்ந்தாலும் தான் ராமனைவிட்டுப் பிரிந்து ஜீவிக்கப்போகிறதில்லை என்று கதறியதைப்பாருங்கள், அவர் இன்னும் கைகேயியைப் பார்த்து "உன் பாதத்தில் என்சிரசை வீழ்த்துகிறேன், என்னிடத்தில் இரக்கம்வை. யான் மூப்படைந்து மரணத்துக்குச் சமீபமாயிருக்கின்றேன், ஆதலின் நீ எனக்கு இரங்கவேண்டும்." என்று சொன்னார். அவர் தான் மரணத்துக்குச் சமீபமாயிருப்பதாய்க் கூறிய துண்மையன்றோ! ஏனெனில் கடைசியாய் ராமச்சந்திரன் தந்தையினிடம் விட்டுப்பிரிந்து காட்டுக்கேகின பொழுது, தசரதன் நெஞ்சம்புழுங்கித் தன்னருங்குமாரன் நாட்டைவிட்டுத் துரத்தப்பட்டதை நினைந்துருகி மரணத்தையே யடைந்தனன்.

ஸ்ரீராமச்சந்திரன் தனது அன்னையாகிய கௌசல்யையிடம் தான் காட்டுக்குப்போகும்படி நேரிட்ட செய்தியைத் தெரிவிக்கச் சென்றபொழுது, அவ்விருவருக்கு மத்தியில் நடந்த பரிதாபகரமான விருத்தாந்தத்தைக்கவனியுங்கள். அவன் அவ்விதம் செல்லக்

கூடாது, செல்லமுடியாது, அவனில்லாமற்போனல் தான் மனம் நொந்து இறந்துவிடுவளென்றும், ஒரு சமயம் அவன் பிதாவின் ஆக்ஞைக்குப் பக்தியுடன் கீழ் படிந்து நடக்க உறுதிகொள்வானயின், தானுமவனைப் பின்பற்றிக் காட்டுமார்க்கங்களில் சஞ்சரிக்கத்துணி வாய்க் கூறினள். தன் கன்றைத் தொடர்ந்து தாய்ப் பசுவும் கூடவே செல்லுவதுபோல் யானும் என் கண் மணியே ! நீ எங்கே சென்றாலும் கூடவே பின்பற்று வேன்." என்றனள்.

தன் உதாரகுணமுள்ள புத்திரர்களாகிய பஞ்ச பாண்டவர்கள் மாயச்சூதாட்டத்தில்சகலசம்பத்தையும் தோற்று, வனத்துக்குத்துரத்தப்பட்டபொழுது ஸ்திரீ களிலும் தாய்மார்களிலும் மிகவும் தைரியம் படைத்த வளான குந்திதேவி கலங்கினதைப்பாருங்கள் ! பிற்கா லத்தில் யுத்தத்திற்கு சமயம் வந்தபொழுது தன் குமா ரர்களுக்கு கண்ணபிரான் மூலமாய், க்ஷத்திரிய ஜாதிப் பெண் எதற்காக ஆண்பிள்ளைப்பெறுகின்றாளோ அத ற்கு ஏற்ற சமயம் வந்திருக்கின்றதெனவும், கண்ணியத் தைப்பாதுகாக்கும் விஷயத்தில் உயிரையுங்கூட விட்டு விடவேண்டியதே யெனவும், உற்சாகம் கூறியனுப் பிய பெண்மணியாகிய இக்குந்திதேவியும், பாண்டவர் கள் வனவாசத்திற்குப் புறப்படும் சமயத்தில் நெஞ் சிழந்து கதறியழுது, அவர்களைவிட்டுத் தன்னைப்பிரித் துக்கொள்ளக்கூட முடியாதவளாயும், அவர்கள் நகரத் தைவிட்டு வெளியேறினபொழுது அவர்களோடு தா னும் பின் செல்லாமல் நிற்கவும்கூட முடியாதவளாயு மாயினள்.

இன்னும், அர்ஜுனன் தனது வீரனுகிய குமாரன் அபிமன்யு மரணமடைந்தபொழுது துன்புற்றதைப் பாருங்கள்! ரணகளத்தைவிட்டுத் தன் பாட்டிவீட்டுக்குத்திரும்பிவருகையில் என்னுளுமிராத ஓர் மனக்கலக்கம் தன்னை மூடுவதைக்கண்டு, அர்ஜுனன் அதைத் தீர்த்துத் தனக்குதவிபுரியும்படி ஸ்ரீகிர்ஷ்ணனை வேண்டினுன். பின்னும் தன் சகோதரர்களையும் வினவினுன். அவர்கள் எல்லோரும் காரணமின்னதென அவனுக்கு விவரிக்க நடுங்கினுர்கள். முடிவில் சமாசாரம் தெரிந்தவுடன் தனது அருங்குமாரனது மரணமானது பிதாவாகிய அர்ஜுனனது நெஞ்சைத்துளைத்தது. உண்மையில் இளம்பிள்ளையாகிய அபிமன்யுவும், தன் சத்துருக்கள் கூட்டம் தன்னை நாற்புறத்திலும் வளைத்துக்கொண்டபொழுது, நிச்சயமாய்த் தன் தகப்பன் அவ்வாபத்தினின்றும் தன்னைத் தப்புவித்துவிடுவனென்றே எண்ணியிருப்பான். அவ்விதம் உதவிக்குத் தகப்பன் அவ்விடம்வந்து சேரவில்லை யாதலால், முடிவில் சத்துருக்களால் பல காயங்களடைந்து ரண பூமியில் வீழ்ந்தனன். தன் குமாரன் சத்துருக்களால் சூழப்பட்டு வருந்திய வேளையில் தான் அங்குவந்து சேராது போனதாகிய வெண்ணமே அர்ஜ்ஜுனனை மிகவும் வருத்தியது. ஏனெனில் வீரியமுள்ள எந்தப்புமானும் ஆபத்துவேளையில் பல மற்றவனைக் காப்பாற்றுவதற்குக் காத்துக்கொண் டிருப்பானன்றே! அதிலும் பலஹீனன் அருமையான தன் குமாரனுகியும், வீரியமுள்ளவன் பிதாவாயுமிருந்தால் கேட்கவேண்டுமோ?

பலமற்றவர்களை சம்ரக்ஷணம் பண்ணும் தொழில் தார்மிஷ்டனுன அரசனுக்கு ஸ்வதர்மமாய் அமைந்துள்

ளது. இக்கடமையை நிறைவேற்றுவதால் ஜனங்கள் அரசனிடம் பக்தியல்லது விசுவாசம் வைக்கிறார்கள். "தன் பிரஜைகளை ரக்ஷித்தல் அரசனது கடமைகளில் முதன்மையானது ; ஒரு தாய் தன் குழந்தையினிடத்தி லெப்படியோ அப்படியே அரசனும் குடிகளினிடத்தில் ஒழுகல்வேண்டும். தாய் தனக்குத் திருப்தியைத்தரும் பதார்த்தங்களையும் கவனியாமல் தனது குழவியின் க்ஷேமத்தையே கருதுகின்றதைப்போலவே அரசனும் நடத்தல்வேண்டும்" என்று பீஷ்மரும் கூறியிருக்கின்றார். ராஜ தர்மமானது மிகவும் கடுமையானதால் முற்காலத்தில் சகரமகாராஜனும், அசமஞ்சன் என்னும் தன் மூத்தகுமாரனை, அவன் இரக்கமற்றுத் தன் குடிகளின் குழந்தைகளை நதியில் அமிழ்த்திக்கொன்றானென்று ராஜ்ஜியத்தை விட்டு வெளியேறச்செய்தான்.

நீதிமான்களாகிய அரசர்கள் தம்மை நம்பிய குடிகளை ரக்ஷித்துவந்த வழிகளைப்பற்றிய கதைகள் பலவுண்டு. இவ்விதம் இவர்கள் தமது ரக்ஷணத்திற்குள் பட்டனவாக மானிடரை மட்டுமன்று, மிருகாதிகளையும் கூடப்பாவித்து வந்திருக்கிறார்கள். தர்மராஜன் என்னும் பெயரடைந்த யுதிஷ்டிரர் கடைசியிற் செய்த மஹாயாத்திரையில் ஒரு நாயும் அவருடன் ஹஸ்தினபுரத்தைவிட்டுக் கூடவே பல விடங்களிலும் சென்று, முடிவில் அவர் கூடவே மஹாரணியத்தையும் தாண்டித் தம்பிமார்களும்துரௌபதையும் இறந்தபின் அவருடன் மிகுந்து நின்றது. யுதிஷ்டிரரைச் சுவர்க்கமழைத்துச் செல்ல தேவேந்திரனும் பிரத்தியக்ஷமாகி, எதிர்நிற்கும் விமானத்தில் தன்னுடன் ஏறிப் புறப்படும்படி ஏவினான்.

அரசனிதைக்கேட்டுச் சற்றுத்தலைகுனிந்து தனது விசுவாசமுள்ளநாயின் தலையைத்தொட்டு இந்திரனைநோக்கி "ஓ! இறந்தகாலம், வருங்கால மிரண்டிற்கும் அதிகாரியாகிய தேவேந்திரா! இந்தநாயொன்று என்னை மிகவும் விசுவாசித்திருக்கிறது. ஆகையால் அதுவும் என்னுடன் வரவேண்டும். இவ்வற்ப பூலோகஜந்துவின்மீது எனக்கு மிகவு மிரக்கமுண்டாயிருக்கிறது." எனக்கூறினர். அதற்கு இந்திரன் ஸ்வர்க்க பூமிகளில் நாய் சஞ்சரிக்க வுதவாது. "ஓ அரசனே மரணமற்ற நிலைமை, எனது பதவிக்குச் சமானமான பதவி, விசாலமான பாக்கியம், உயர்ந்த ஜயம், சுவர்க்க வின்பம் இவற்றை நீயின்று சம்பாதித்துக்கொண்டிருக்கின்றனை. அவ்வித ஸ்வர்க்கலோகத்திக்கு நீ செல்வதற்கு இடைஞ்சலாகவிருக்கும் இந்நாயைத்தள்ளிவிடு, இதிலெவ்விதவக்கிரமமும் இல்லை. பூலோகத்தைச்சேர்ந்த ஜந்துவான இது இங்கேயே நிற்கவேண்டியதன்றோ"வென்றான். இதற்கு யுதிஷ்டிரர் "ஓ! ஆயிரங்கண்படைத்தவனே! சகல தர்மானுஷ்டானங்களையுமுடையவனே! ஆரியன் எவனும் அநாரியமான எச்செய்கையையும் செய்தலாகாது. என்னிடம் விசுவாசம் வைத்திருக்கும் இஜ்ஜந்துவை பரித்தியாகம் பண்ணினபின் கிடைக்கும் எவ்விதவானந்தமும் எனக்கு வேண்டாம்." என விடைபகர்ந்தார். அதற்கு இந்திரனும் நாயைத்தன்னுடன் கொணர்வோர்க்குச்சுவர்க்கத்தில் கண்டிதமாய் இடம்கிடையாது ஆதலின்நாயை விட்டுவிட்டுவாரும். வீணாய் காலம்விரைந்து செல்கின்றது" என்றனன். யுதிஷ்டிரர் இந்திரனைப்பார்த்து "நம்பினோரைக்கைவிடுதல் அளவிடற்கரியபாபமென மேலோர் கூறுவர். சக்தியற்றவரைக் கைவிடுத

லாகிய பாபம் பிராம்மண ஹத்தியைக்காட்டிலும் மிகப் பெரியதுவேயாகும். ஓ! இந்திரா! பெரியோய்! பெரிய வானந்தத்தை யடையும்பொருட்டு இந்த நாயை நான் கைவிடேன்." என்று மறுமொழி பகர்ந்தனர், மறுப டியும் அநேக விதங்களாய் இந்திரன் ஆக்ஞையாலும், வியவஹாரத்தாலும் யுதிஷ்டிரர் எண்ணத்தை மாற்ற முயன்றும் பயன்படவில்லை. அரசன் சற்று மசையாது நின்றான். பிறகு தப்பான நியாயத்தால் அரசனை ஏமாற் றிவிடவிந்திரன் முயன்றும் அரசன் மயங்கி விடவில்லை நீ சகோதரர்கள், மனைவி இவர்களனைவரையும் கைவிட் டாய். இந்நாயை விட்டாலென்னவென்றா னிந்திரன். யுதிஷ்டிரனதற்கு "இறந்தவரோடு நட்புமில்லை பகையு மில்லை யென்பது உலகமறிந்தவுண்மையன்றோ! என் சகோதரர்களும் மனைவியும் மார்க்கத்தில் வீழ்ந்திறந் தார்கள். அவர்களை உயிர்ப்பிக்க எனக்குச் சக்தியில்லை; ஆதலினவர்களைக் கைவிட்டேன். அவர்களுயிரோடிருக் கும்வரை நான் கைவிடவில்லை. சரணமடைந்தவரை பயமுறுத்துவதும், ஸ்திரீயைக் கொலைசெய்வதும், பிராமணன் சொத்தை யபகரிப்பதும், சிநேகிதனுக்குக் கெடுதிசெய்வதும், இவற்றுள் ஒவ்வொரு பாபத்துக் கும் என்னிடமிவ்வளவு விசுவாசமுள்ள இந்நாயைக் கைவிடுதல் சமானமாகும் என்பது திண்ணம்" எனவுறு தியுடன் மொழிந்தனன். பிறகு நாய் மறைந்துபோய் அது தங்கியிருந்தவிடத்தில் யமதர்மராஜன் திவ்விய மஹிமையுடன் தோன்றினர். அப்பொழுது இந் திரன், யமதர்மராஜன் இவ்விருவரோடும் தேவதைகள் பாடப் பெரியோர்கள் ஸ்துதிக்கத் தர்மிஷ்டனான யுதி ஷ்டிரர் தேவலோகத்துக்குக் கொண்டுபோகப்பட்டார்.

இன்னுமோர் பூர்வகாலத்திய சரித்திரத்தைக் கேளுங்கள். உசீநரன் குமாரனுகிய சிபி யென்னு மரசன் விசாலமான தனது அரசாட்சி மண்டபத்தில் தன் சபையார்களுடன் வீற்றிருக்கையி லொருநாள், திடீரென ஒரு புரு சபைக்குள் பறந்துவந்து களைப்பு, பய மிவற்ருல் நடுக்கமுற்று, பெருமூச்சோடும் அரசனது விசாலமான மடியில் விழுந்தது. அரசனதைக் கண்டு வியப்படைந்து மிக்க கருணையுடன் தன் கைகளால் அதன் முதுகைத் தடவிக் கொஞ்சி அதன் கலைந்த சிறகுகளைச் செம்மைபண்ணிக்கொண் டிருக்குமளவில், மிகச் சினங்கொண்ட வல்லூறென்று மண்டபத்துள் மிக வேகத்துடன் பறந்துவந்து அரசனைக்கண்டவுடன் திடீரெனமுன் நின்றது. வல்லூறைக் கண்டவுடன் புரு பழையபடி மிகப் பீதியடைந்ததாய் மானிட பாஷையில் அரசனைப்பார்த்து "நீ நான்வசிக்கு மிந்நாட்டிற்கு அரசன். ஆதலின் நீ யென்னைக் காப்பாற்றவேண்டியது கடமை. அதனுல் இந்த வெனது சத்துருவினின்றும் தப்பிப் பிழைக்கும்பொருட்டுச் சரணமாய் உன்னையடைந்தேன்.'' எனக்கதறியது. உடனே வல்லூறும் மனிதபாஷையில் "ஓ அரசனே! நானும் உன் ராஜ்ஜியத்திற்குள் தான் வசிக்கிறேன். இப்புருவும் எனக்குக் கடவுளால் நியமிக்கப்பட்ட வாகாரமேயன்றி வேறன்று. ஆதலின் நீ எனக்கிதை யளிக்காயாகில் எனக்குள்ள பாத்தியதையை நீ கெடுப்போனுவாய்" என்றது. இவற்றைக்கேட்ட வரசன் சற்று யோசித்து "நீங்களிருவரும் சொல்லுவது சரியே. ஓ புருவே நிரபராதியாகிய உன்னுயிரை ஆபத்தினின்றும் நான் காப்பாற்றவேண்டியதும் கட

மையே. ஓ வல்லூறே! உனக்கேற்பட்ட வாகாரத்தை உன்னைவிட்டுப் பிடுங்காமலிருக்கவேண்டியதும் என் கடமையே. ஆனாலிவ்விதம் இந்தத் தர்மத்தின் சிக்கலை யவிழ்ப்பேன். ஏ, வல்லூறே உனக்கு வயிறு நிரம்பும் வரை என்னிடமிருந்து வேறு ஆகாரத்தைப் பெற்றுக் கொள்'' என்றான். அதற்கு வல்லூறு ''எனக்குப்புறாவே வேண்டுமேயொழிய வேறொன்றும் வேண்டாம். அப்ப டிப் புறாவைத்தவிர வேறேதேனும் நான் பெற்றுக்கொ ள்ளவேண்டுமாகில் ஓ! அரசனே நின் சரீரத்தினின்றும் இந்தப்புறாவின் இடைக்குச்சரியான நிறையுள்ள மாமிச த்தைத்தான் யான் பெற்றுக்கொள்ளுவேன்'' என்றது. இவ்வசனத்தைக்கேட்ட சபையிலிருந்த மந்திரிகள் தங்களன்பிற்குரிய வரசனது விலைபற்றவுயிருக்கு அபா யத்தை யுத்தேசித்த அவ்வல்லூறை யுடனேகொன்று விடும்படியான சினங்கொண்டு, அவ்வற்ப ஜந்துவான வல்லூறின் வசனத்தை யங்கீகரிக்கப்படாதெனக் கூவினார்கள். அப்பொழுது சிபிச் சக்கரவர்த்தியும் நான் அரசனாய் இங்கு வீற்றிருப்பது அற்பஜெந் துவி னிமித்தமாவது பெரியதினிமித்தமாவது அல்ல. புறாவுக்காவது அல்லது வல்லூறுக்காவது அல்ல. பின்னை கேவலம் தர்மத்தின் விக்ரஹமாய் எனது பிர ஜைகளுக்கோர் உதாரணமாகவேயன்றி வேறன்று. அற்ப விஷயங்களில் யான் தவறுவேனாகில் பெரியவற் றிலும் தவறுவேன் என்பதில் சந்தேகமில்லை. அதனால் எனது குடிகளும் என்னையேகொண்டு அநியாயமாய்த் தவறுதலுக்குள்ளாவர். இந்த க்ஷணம் ஒரு திராசுகொ ண்டுவாருங்கள்'' எனக்கூற இதைக்கேட்டு மந்திரிகள்

பெருந்துக்கங்கொண்டு அரசனது ஆக்ஞையை மீறச் சக்தியற்றவர்களாய்த் தங்களையறியாது கிளம்பும்பாஷ்பங்களைப் பற்களைக் கடித்துக்கொண்டு அடக்கிக்கொண்டு, ஒரு திராசைக்கொணர்ந்தார்கள். உடனே அரசனும் ஓர் கையால் மிருதுவாய் அப்புறுவை யோர் தட்டில் வைத்து மற்றோர் கையால் பலத்தோடு தன்னங்கங்களின்றும் ஒரு மாம்சத்துண்டை வெட்டி திராசின் தட்டில் கிடத்தினன். புறு மிகப் பளுவாயிருந்தது. ஆதலால் அரசன் மறுபடியும் தன் சரீரத்தினின்றும் மாமிசத்தை வெட்டிவைத்தான். இன்னும் புறுவின் நிறை பளுவாயிருந்தது. அதற்காக அரசன் இன்னுமோர் தடவை சதையை வெட்டிப்போட்டான். புறுவோ வின்னும் பளுவாகவேயிருந்தது. இதைக்கண்டு வியப்படைந்து அரசனும் பழையபடி இன்னுமோர் துண்டு சதையை யரிந்து தராசில் வைத்தான். புறுவின் பளுவானது வரவர அதிகமாகவே யாகிவந்தது. முடிவில் அரசன் தன் சரீர முழுவதையும் திராசில் வைத்தான். அப்பொழுதுடனே வல்லூறும் புறுவும் மறைந்துபோயின. அவைகளிருந்த விடங்களில் இந்திரனும் அக்நியுந் தோன்றினர்கள். அவர்கள் அரசனைப்பார்த்து "உண்மையாய் நீயே அரசன்! அரசனது முதற்கடமையாகிய பிரஜா பரிபாலனத்தை நீ நன்கு அறிந்திருக்கின்றனை. உன்னை நாங்கள் கேள்விப்பட்டதைவிட விசேஷமாய் இன்று அறிந்தோம். உன் சரீரத்தில் காயங்கள் யாவும் இல்லாமற்போகுக.

உனது குடிகள் யாவரும் வாழ்த்த நீ பன்னாள் வாழக்கடவை" என்று ஆசீர்வதித்துச் சென்றனர்.

இக்கதைகள் யாவும் அரசர்களைப்பற்றியே கூறப்பட்டிருக்கின்றன வென்ப துண்மை. பலவீனர்களை ரக்ஷிக்கவேண்டியவர்கள் அரசர்களே. முதன்மையானவர்களாதலால் அவர்களைச் சகல மானிடர்க்கும் உதாஹரணமாய் எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது. ஆதலால் இதைப்படிக்கும் சிறுவர்களும் தம்மாலியன்றவளவு சொல்பமாய்த் தம்மினும் பலங்குறைந்தவர் யாவரிடமும் இவ்வித ரக்ஷணத்தைப் பாராட்டலாமன்றோ! இக்கதைகள்யாவும் நாம் உதாரணமாய்க்கொண்டு அவற்றிலுள்ள நன்னடக்கைகளை நமது வாழ்க்கையிலும் அனுஷ்டிக்கவேண்டுமென்றே கூறப்பட்டிருக்கின்றன.

காருண்யத்திற்கு மஹா திருஷ்டாந்தமாகிய ரந்திதேவரும் அரசனாகவேயிருந்தவர்; இவரது காருண்யம் மிகச்சிறந்ததாதலால் 'ரந்திதேவனைப்போல் கருணையுடையவன்' என்னும் பழமொழியே ஏற்பட்டிருக்கின்றது. ஒரு சமயத்தில் அவர் தன் பரிவாரத்துடன் நாற்பத்தெட்டுநாள் வரை உபவாஸமிருந்தார். நாற்பத்தொன்பதாம்நாட் காலையில் கொஞ்சம் நெய், பால், கோதுமைமா, ஜலமிவை யவர்க்குக்கிடைத்தது. இந்தசொற்பவாகாரத்தை யவருண்ணவுட்கார்ந்தவுடன்ஒருபிராமணனதிதியாக வந்துசேர, அப்பிராமணனை முதலில் தாமுண்ணுமுன் உண்பித்தார். பிறகு மிகுந்த வாகாரத்தில் சரிபாகங்களாகப் பிரித்து மற்றவர்க்கெல்லா மளித்தபின், தன் பாகத்தையெடுத்துக்கொண்டு உண்ணவாரம்பிக்குமுன் ஒரு சூத்திரன் வந்தனன். தனது சொற்பபாகத்தில் சந்தோஷமாய் அவனுக்கும் சிறிது ஈந்தார். சூத்திரனும் உண்டுசென்றபின் அவர்தனக்கு மிகுந்திரு

ந்த வுணவைத் தீண்டுமுன் ஒருவன் சில நாய்களுடன் வந்தடைந்தனன். அவனுக்கு ஒருவாய் ஜலத்தைத்தவிர மற்ற மிகுந்தவுணவவ் வளவையும் ரந்திதேவர்கொடுத்த னர். இவனும் நாய்களுடன் உண்டு அப்பாற் சென்ற பின் ரந்திதேவர் கடைசியாய் மிச்சமிருந்த ஜலத்தை மிகவாவலோடு உலர்ந்துபோயிருந்த தன் உதட்டிற்குயர் த்தினர். அதற்குள் தண்ணீர்! கொஞ்சந்தண்ணீர்! எனச் சமீபத்தில் ஒருகுரலெழுந்தது. அதுயாதென ரந்திதேவர் திரும்பிப்பார்க்கையில் மிகவும் பரிதாபகார மான நிலைமையிலிருந்த ஒரு சண்டாளஜாதி மனிதன் அவர் கையிலிருந்த ஜலத்தில் ஆவலுடன் வைத்த திரு ஷ்டியுடன் தரையில் கிடக்கக்கண்டார். உடனே அவன் மீது குனிந்து மிகுந்த கருணையோடுகூடிய திருஷ்டியு டன் ரந்திதேவர் அவன் தலையைச்சிறிதுயர்த்திப்பரிசுத் தமும் குளிர்ச்சியுமுள்ள அந்தஜலத்தை அவனதுலர்ந்த னவும் தூளி நிறைந்தனவுமான உதடுகளில் ஊற்றி "அப்பா குடிப்பாயாக!" என்ற மதுரமொழிகளைக் கூறினர். இவரதுமிகமுவுயர்ந்த தானம் இவருடைய மிருதுவு மன்பும் பொருந்திய மொழிகளால் பன்மடங் கு விருத்தியாக்கப்பட்டது. அந்த ஜலத்தை அச்சண்டா ளன் பானம் பண்ணும்பொழுது ரந்திதேவரது அன்பு நிறைந்தமனம் ஆனந்தத்தால் பொங்கி ஹரியை ஸ்தோ த்திரம்பண்ணி (அணிமாதி) அஷ்டசித்திகளை நான் பிரார்த்திக்கவில்லை; எனக்கு நிர்வாணமும் வேண்டாம். என் பிரார்த்தனையெல்லாம் சகல சரீரங்களுள்ளும் நான் நிரம்பி அவர்களது துக்கங்களையெல்லாம் நான் தாங்கிக்கொண்டு அவர்கள் துக்கமற்றவர்களாகவேண்டு மென்பதே. இந்தப் பரிதாபகரமான பிராணிக்கு

இந்த ஜலத்தைக் கொடுத்தால் எனது பசி, தாகம், களைப்பு, சிரம்ம், கிருகிருப்பு இவை யாவும் நீங்கிப்போயிற்றன்றோ ! என்றுகூறிப் பரவசமாயினர். இந்தப் பிரார்த்தனை காருண்யத்தை விளக்குவதில் மிகவும் பூர்ணமானதாய் இந்நாள்வரை பெயர்பெற்றிருக்கின்றது. நம்மிலும் பலவீனர்களிடம் கருணை, பாதுகாத்தல் இவற்றைக் காட்டுவதில் ஒருதோஷம் மட்டு நம்மிடத்திலுண்டு. அதாவது சகாயஞ் செய்தோமென்னும் கர்வந்தான் நான், நீ என்னும் வித்தியாச பாவனையாலுண்டாகும் அகங்காரத்தினின்றும் இக்கர்வமுண்டாகின்றது. அது யாவர்க்கும் பொதுவாயிருக்கும் சம்ரக்ஷணம் முதலியவற்றைத் தற்காலம் பின்ன சரீரத்தால் மட்டும் வேறுபட்டிருக்கும் நாமொவ்வொருவரும் ஒவ்வொருவர்க்கு நாம் காட்டுகிறோம் என்பதை விட்டு நாம் பிறருக்கு உபகாரம் செய்கிறோமென்பதைமட்டும் விசேஷித்துப்பாவிக்கும்படி செய்துவிடுகிறது. ஆதலால் இவ்விதம் நாம் பிறர்க்குபகரிப்பதையும் அவ்விஷயத்தில் நமக்கிருக்கும் சாமர்த்திய வைபவங்களையும் நினைக்கும்படி மனதை விட்டுவிடுவதால் கர்வம் ஜனிக்கின்றது. நாம் முன்செய்திருக்கு முபகாரங்களையும் நாசப்படுத்திவிடுகின்றது. எவற்றிலும் ஆழ்ந்ததும் மிகவும் மறைந்ததுமான அகங்காரமெனும் இச்சத்துருவுக்குப் பின்னமாகிய சரீரத்தை தரிக்கும் எவருமுள்ளாகாமற் போகார். மிகப்பெரியோரும் மறந்த சமயங்களில் இதற்கா தீனமாகி அவசியம் இதன்பலன்களை யனுபவிக்கவே செய்கின்றனர். கர்மநியதியானது அசைக்கமுடியாதது, பெரியோர்க்குஞ் சிறியோர்க்கும் ஒரு தரமானதன்றோ ! ஆதலால் ஸ்மிருதிகளில் ஞானம், பல மிவை

யுடையோர்க்கு மகா சத்துருவான இவ்வகங்காரத்தை ப்பற்றி பல திருஷ்டாந்தங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இவற்றில் சில கேளுங்கள்.

பூர்வகாலத்திய ரிஷியாகிய நாராயணர் என்பவர் ஹிமாலயபருவதங்களில் பதரி என்னும் சிகரமொன்றில் நெடுங்காலம் கடுந்தபசு பண்ணினர். இந்திரியங்களின் விஷயங்களால் இவர் அசையாமலிருப்பதைப் பரிசோதிப்பதற்காக இந்திரன் கணக்கற்ற தேவமாதர் கணங்களை அவர் தவம் புரிந்துவந்த ஸ்தானமாகிய தபோவனத்தில் சென்று விளையாடி அவர் தபஸைக் கெடுக்கும்படி அனுப்பினன். அவர்களுமிந்திரனுக்ஞையின்படிநடந்தார்கள். நாராயண ருஷியுமிவர்கள் வரவின் காரணத்தைத் தன்னுடைய ஞானதிருஷ்டியாற் கண்டுகொண்டு தைரியத்தாற் பின்னகைகொண்டு பின்தனது யோகவலிமையால் இம்மாதர்களைப்போன்ற உருவங்களை எண்ணிறந்தன சிருஷ்டி செய்து இந்திரன் கணங்களை வரவழைத்து மரியாதைசெய்யும்படி யனுப்பினர். இவர்களைக்கண்டு இந்திரன் கணங்கள் வெட்க முற்று ரிஷியை வணங்கித்தங்கள் கெட்டநோக்கத்தை மன்னிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். ரிஷியும் பிரீதியடைந்து அவ்விதமேயவர்களை க்ஷமித்து அவர்களுக்குவேண்டிய ஒருவரத்தையு மளிப்பதாய் வாக்குக் கொடுத்தார். அவர்களுடனே கேட்டுக்கொண்ட வரமாவது.—அவர் தங்கட்கு கணவனும் ரக்ஷகருமாகவேண்டுமென்பதே. ரிஷியிதைக்கேட்டு முழிப்படைந்தார்; ஆயினும் தருவேனென்று வாக்களித்தபின் மீள அவராலாக்கக்கூடவில்லை. மிகவுந் துக்கங்கொண்டு பச்சாத்

தாபமடைந்து "இக்கொடுஞ் சங்கடம் நிச்சயமாய் எனது அகங்காரத்தாலேயேவிளைந்தது. ஆதலால் எவ் வித தர்மநாசத்திற்கும் முதற்காரணம் அகங்காரமே" எனத்தீர்மானித்தார். பிறகு இந்திரன் அம்மாதர்களைப் பார்த்து.— "இந்த ஜென்மத்தில் கிருஹஸ்தனுயிருத்த லால் யான் கொண்டிருக்கும் பிரதிக்ஞைக்கு விரோத மாகின்றது. ஆதலால் இனியோர் ஜன்மத்தில் வேறு காரியத்தின் நிமித்தமாய் நான் கிருஷ்ணனுய்ப் பிறக்கப் போகிறேன் அப்பொழுது என்வாக்கை நிறைவேற்று கிறேன். அச்சமயத்தில் உயர்ந்த குலங்களில் பிறந்தி ருக்கும் உங்களை விவாஹஞ்செய்துகொண்டு மிகவும் பயங்கரமான சுமையாகிய இம்மகா சம்சாரத்தைத் தாங்குவேன்." எனக் கூறினர்.

பிர்ம்மாவினிடமிருந்து வந்த குசன் என்பவரால் ஸ்தாபிக்கப்பட்ட க்ஷத்திரிய வரசவம்சத்தைச் சேர்ந்த விசுவாமித்திரன் காதிதேசத்துக் கரசனுயிருக்கையில் ஒரு சமயத்தில் ஓரிடத்தில் பெரும் வெற்றியடைந்து தன்னிராஜ்ஜியத்திற்குத் திரும்பி வரும்பொழுது வசி ஷ்டமகாரிஷியின் தபோவனத்தருகே சென்றுர். சிறிது தூரத்தில் தன் சைனியங்களை நிறுத்தி, விசுவாமித்தி ரர் தான்மட்டும் மகரிஷியைக்கண்டு வந்தனம் செய்து வருவதற்கு அவ்வாசிரமத்துட் சென்றுர். வசிஷ்டருமவ ரைப்பட்சம் மரியாதைகளுடன் வரவழைத்தார். பிறகு விசுவாமித்திரன் தன் சைனியங்கள் சாந்தமாகிய அத் போவனத்தி லிடையிலேதேனும் தீங்குவிளைவிக்குமெ ன்று பயந்து மகரிஷியிடம் விடைபெற்றுச்செல்ல வெ ழுகையில், வசிஷ்டர் சகல சைனியங்களுடன் அரசனு

க்கு அதிதி பூஜை யளிப்பேனென்ருர். விசுவாமித்திரர் இதைக்கேட்டு ரிஷிக்கு விசேஷசௌகரியமில்லாததால் அவருக்குத்தொந்தரவுகொடுக்க மனமில்லாமல் அதிதி பூஜைவேண்டாமென்று பலதடவை மறுதலித்தார். வசிஷ்டர் அதை யேற்றுக்கொள்ளாமல் தன் தபோ வல்லமையாலும், தன்னிடமிருக்கும் அற்புத மஹிமையுள்ள நந்தினி யென்னும் பசுவின் உதவியாலும், வெகு சுலபமாய் அரசனது படை யாவற்றிற்கும் வேண்டிய சௌகரியங்களைத்தன்னாலளிக்கத்தகுமென்று கூறி, அரசனை யவ்விடந்தங்கிப் உபசரிபைப்ப் பெற்றுப்போதல் வேண்டுமென்று கட்டாயப்படுத்தினூர். இவ்விதம் வசிஷ்டர் மனதி லகங்காரமுதித்தது. விசுவாமித்திரர் இவ்விதம் கட்டாயப்படுத்தப்பட்டதால் இணங்கி யவ்விடம் தங்கி நந்தினியென்னும் வசிட்டரது பசுவின் மஹிமைகள் யாவையும் கண்டார். விசுவாமித்திரர்க்கு அப்பசுவின் மீது ஆசையுண்டாயிற்று. "ஒரு பிராமணனுக்கு இவ்விதமானபசு எதற்காகவேண்டியுள்ளது? இது அரசர் வசமிருக்கவேண்டிய வஸ்து" எனக்கூறி அப்பசுவைக்கொடுக்கும்படி வசிட்டரைக் கேட்டார். வசிட்டரிதைக் கேட்டு வியசனமுற்று, தன்னைவிட்டுப் பசுபோகச் சம்மதிக்குமானல் அதைவிசுவாமித்திரர்கொண்டுபோகலாமென்ருர். ஆனல் வசிட்டரிடம் மிகுந்தபக்தியுள்ள வப்பசு அவரைவிட்டுச் செல்லச் சம்மதிக்கவில்லை. பிறகு விசுவாமித்திரரது ஜனங்களதைப்பிடித்துப் பலாத்காரமாய் இழுத்துக்கொண்டு போகத்தலைப்பட்ட பொழுது அதுகதறித் தீன தொனியுடன் தன்யஜமானனுகிய வசிட்டரிடம் தன்னைக்கைவிடப்படாதென முறையிட்டது.

பிறகு வசிட்டர் கோபங்கொண்டார். முதலாவது மறைவாய்த் தோன்றும் அகங்காரத்திற்கு அடுத்தபடியாய்ச் சுபாவத்தில் தோன்றுவது கோபமன்றோ! பின்னர் அப்பிராமணருக்கும் க்ஷத்திரியருக்கும் பலத்த யுத்தமுண்டாயிற்று. அதனால் தேசத்தின் சரித்திரமே மாறிப் போம்படியாயிற்று. அப்பசுத் தன்னுதவிக்குச் சாகர், பல்லவர், யவனர், பப்பரர் முதலிய அநாரியஜாதியார்களைச் சிருஷ்டிபண்ணிற்று. இவர்களையெல்லாம் விசுவாமித்திரர் நாசம் பண்ணினர். ஆனால் முடிவில்வசிஷ்டருடைய பிர்ம்ம சக்தியானது விசுவாமித்திரருடைய க்ஷத்திரியவீரியத்திற்கு மிஞ்சி அந்தச்சக்தியை யடக்கிற்று. இதைக்கண்டு விலகி விசுவாமித்திரர் வைராக்கியமடைந்து ராஜ்ஜிய பாரத்தைத் தியாகஞ்செய்து பிரம்மசக்தியை யடையவேண்டுமென்னும் நோக்கத்துடன் பல காலம் கொடுமையான தவம்புரிந்தார். பிறகு வெகு காலம் சகலத்தையும் பரித்தியாகம் பண்ணித் தவஞ் செய்து பிராம்மணியத்தையு மடைந்தார். அப்பொழுது அவருக்கும் வசிட்டருக்கும் சமாதானமாயிற்று. வசிட்டருமவரைப் பிரம்மரிஷியென வேற்றுக்கொண்டார்.

தேவர்க் கதிபதியாயிருக்கும் பதவியானது கர்வம் மனதில் குடிகொள்ளக்கூடிய ஒரு நிலைமையாகும். இதனால் சீக்கிரத்தில் தேவேந்திரன் எத்தனையோ தடவை தன் உன்னத பதவியிழந்திருக்கின்றனன். ஒரு சமயத்தில் தேவர்கள் சூழ அவன் சிம்மாசனத்தில் வீற்றிருக்கையில் சகல தேவர்கட்கும் குருவாகிய பிருகஸ்பதி பகவான் சபைக்கு வரவே, அம்மஹாசாரியரை வணங்காமல் ஆசனத்திலிருந்தபடியேயிருந்துவிட்டான். பிறகு

பிருகஸ்பதியும் திரும்பித் தேவர்களை விட்டுவிட்டுத் தனக்கிஷ்டமானவழியே சென்றார். அதனால் அசுரர்கள் தேவர்களையெதிர்த்து ஜயித்து அவர்களையும் தேவேந்திரனையும் சுவர்க்கத்தை விட்டுத் துரத்தி விட்டார்கள். இதனால்இன்னும் பல சங்கடங்கள் இந்திரனுக்கு விளைந்தன. ஒன்றிரண்டு சமயங்களில் பிராம்மணனை இந்திரன் கொல்லும்படியும் நேர்ந்தது. இப்பாபங்களின்றும் தன்னைப் பரிசுத்தம் பண்ணிக்கொள்ளும் பொருட்டு அவன் வெகுகாலம் தபசுபண்ண வேண்டிவந்தது.

இவ்விதமிந்திரன் நீடித்த தபசைச் செய்துகொண்டிருந்த பொழுது சுவர்க்கலோகம் அரசனில்லாமையாலுண்டாகும் சங்கடங்கட்குள்ளாகாவண்ணம் தேவர்கள் பூலோகவரசர்களுள் சந்திரவம்சத்தைச் சேர்ந்தவனாகிய நகுஷனைச்சுவர்க்காதிபத்தியம் வகிக்கும்படி ஏற்படுத்தினார்கள். அக்காலத்தில் இவனைத்தவிர வேறொருவரும் அப்பதவிக்குத் தக்கவராயகப்படவில்லை. அவ்விதம் நகுஷன் அரசாண்டபொழுது இந்திரனைக் காட்டிலும் மிகுந்த பராக்கிரமத்துடன் அரசாட்சிபுரிந்து வந்தான். ஆனால் அவன் மனதில் கர்வமுதித்தது. பிறகு பாபபுத்தியும் அக்கர்வத்துடன் தோன்றிற்று. அப்பொழுது நகுஷன் தேவர்களைப்பார்த்து "யானிந்திரனது ராஜ்ஜியச் சுமையை தாங்குகிறேனாகையால் அவனது சகல பாக்கியங்களும் எனக்குக் கிடைக்க வேண்டும். ஆதலின் இந்திரன் பத்தினியாகிய சசிதேவியும் 'என் முன் வரட்டும்" என்றான். இதைக் கேட்டுத் தேவர்கள் மனங்கலங்கி இனியிந்தநகுஷனிச்சுவர்க்கத்தை யாளத்தகுதி யுடையவனல்ல வென

வொருவரோடொருவர் பேசிக்கொண்டு இந்திரன் திரும்பி வருங்காலமும் சமீபித்ததென உணர்ந்தார்கள். ஆயினும் நகுஷன் முன்னெதிர் நிற்கப் பலமுடையவர் யார்? சென்ற காலத்திய புண்ணியங்களால் அவனடைந்திருக்கும் வீரியத்தைப் போக்கடிப்பதற்கு எந்தப் பெரிய ரிஷிக்காவது பெரிய பாபமொன்றையவன் செய்து அதனாலவர்க்குக் கோப மூட்டினாலொழிய வேறுவழி யில்லாமலிருந்தது. ஆதலால் தேவர்கள் நகுஷனுக்குடனே பதில் சொல்லாமல் சசிதேவியுடன் கலந்து கொண்டு, நகுஷனைப்பார்த்து அவன் சப்தரிஷிகள் தோள்மீது வருவானாகிலவனைச் சசிதேவியும் ஏற்றுக்கொள்ளச் சம்மதிப்பதாய்ச் செய்தி சொன்னார்கள். நகுஷனு முடனே சப்தரிஷிகள் சுமக்கும் வாகன மொன்று ஆயத்தப்படுத்த வுத்தரவளித்தான். அகஸ்தியர் முதலிய ரிஷிகள் பல்லக்கைச் சுமக்கும்படி சொல்லப்பட்டார்கள். அதற்கு அவர்களும் அமரிக்கையுடன் சம்மதித்தார்கள். பிறகு நகுஷன் ஏறிய பல்லக்கும் கூட்டமும் சென்று கொண்டிருந்த பொழுது நகுஷன் தன்னுவலாலும் மிதமிஞ்சிய கர்வத்தாலும் பல்லக்கை யோர்புறந்தாங்கிய அகஸ்திய பகவான் சிரசின்மீது தன் காலைவைத்து மிக்க கோபத்துடன் அவரை விரைந்து செல்லும்படி ஏவினான். அப்பொழுது அகஸ்தியரும் நகுஷனுக்குக் காலமுடிந்ததென்று கண்டு அவன் மீது ஓர் சாபத்தை யுச்சரித்தார். நகுஷனும் சுவர்க்கத்தை விட்டுக்பூலோகத்தில் ஓர் பெரும் பாம்பின் சரீரத்தினுள் வீழ்ந்து உயர்ந்த பரிபாகமடைந்த ஜீவன் மிகத்தாழ்ந்த சரீரத்தில் கிடப்

பதாலடையும் சகல சங்கடங்களையும் பலகோடி காலம் அனுபவித்தான். முடிவில் இவன் வம்சத்திலுதித்தவனான சத்துருவற்றவனென்னும் பெயர் கொண்ட யுதிட்டிராது உத்தம வசனத்தால் விமோசனமடைந்தான்.

இன்னும் விரோசனன் குமாரனாகிய பலிச்சக்கரவர்த்தியும் வெகுகாலம் மிக பாக்கியத்துடன் வாழ்ந்து வந்தான். ஏனெனில் அவன் செய்த புண்ணியங்களுக்குவந்து ஸ்ரீ தேவியாகிய லக்ஷிமியும் அவனிடம் வசித்துவந்தாள். பிறகு தான் வெகு புண்ணியசாலியென்றும் அதனால் தனக்கு மிகுந்த பாக்கியம் கிடைத்திருக்கிறதென்றும் கர்வமானது அவன் மனத்தில் நுழைந்தது. அதனாலவன் தன்னையே விசேஷமாய் நினைத்துப் பிறர் க்ஷேமத்தைப் பாராட்டாமல் அவர்க்குத்தீங்கிழைக்கத் தொடங்கினன். அதனால் ஸ்ரீதேவியுமவனிடமதிருப்தி யுள்ளவளாகி அவனை விட்டு விட்டு அவன் சத்துருவாகிய தேவலோகத்தரசனாகிய தேவேந்திரனிடம் வசிக்க உத்தேசித்தனள். பின்னர் தன்னிடம் பன்னாள் வசித்துவந்த லக்ஷ்மி தேவேந்திரனிடம் வசிப்பதைக்கண்ட பலியும் பல காலம் மிகவும் பச்சாத்தாபமடைந்தனன். ஆதலாலிது கர்வம், அசூயை யிவற்றின் பலன். இதையறிந்து "ஓ! மாந்தாதாவே! நீயும் உன்னை விட்டு லக்ஷ்மி கோபங்கொண்டு அப்பாற் செல்லாவண்ணம் விழிப்பாயிரு. அதர்மமானது லக்ஷ்மிதேவியினிடம் கர்வமென்னும் ஓர் புத்திரனைப் பெற்றதென சுருதியும் வர்ணிக்கின்றது. ஓ அரசனே! இக்கர்வம் சுராசுரர்களில் வெகுபேர்களை

ஙாசமடையச் செய்திருக்கின்றது. அப்படியே பல ராஜ ரிஷிகளும். அதனால் கெட்டுப்போயிருக்கிறார்கள். ஆத லாலரசனே நீ விழித்துக்கொள். இச்சத்துருவைஜயிப்ப வனே அரசனவன். அப்படியில்லாமல் இதைத் தன்னை ஜயிக்கும்படி விட்டு விடுகிறவன் அடிமையாகிறான்" என்று உதத்தியர் மாந்தாதாவுக்குக் கூறினார்.

சில சமயங்களில் சிறியோர் தமது யோசனையுள்ள கிரியைகளாற் பெரியோரையும் கோபங் கர்வமிவற் றால் நேரும் பாபங்களில் வீழாவண்ணம் பாதுகாத்து விடுகிறார்கள். இவ்விதம் ஒரு குமாரன் முற்காலத்தில் தன் பிதாவைக் காப்பாற்றினான். அங்கீரஸ வம்சத் தில் கௌதமர் என்பவருக்குச் சிரகாரி என்னும் ஒரு புத்திரன் இருந்தான். சிரகாரி என்னும் பதத்திற்கு தாமதமாய் எதையும் செய்பவன் என்று பொருள். இக்கருத்துக்கிணங்க அப்புத்திரனும் எதையுஞ் செய்யு முன் பன்முறையு மாழ்ந்தாலோசிக்கும் வழக்க முடையவனாயிருந்தான். அதனால் அவனுக்குத் தீர்க் காலோசனையும், விவேகமுமிருந்தது. ஒருநாள் கௌ தமர் தன் மனைவி யோர்குற்றத்தைச் செய்யக்கண்டு மிகுந்த கோபங்கொண்டவராய்த் தன் குமாரனைப் பார்த்து "இந்த ஸ்திரீயைக் கொன்று விடு" என் று சொல்லிவிட்டுச் சென்றார். இவ்வசனத்தைக் கே ட்ட சிரகாரி யென்னும் புத்திரனும் என்ன செய்வ தென வெகுகாலம் யோசித்தான். ஓர் புறத்தில் பிதுர் வாக்கியபரிபாலனஞ் செய்யவேண்டிய கடமையும் மற் றோர் புறத்தில் தன்னை ஈன்ற மாதாவின் சரீரத்தைப் பவித்திரமாக வெண்ணிப் பேணவேண்டிய கடமையும்

அவனைத் தூண்டிற்று ; அப்போது: "பிதாவின் ஆக்ஞைக்குக் கீழ்ப்படிதல் பெரும் புண்ணியம். மாதாவைக்காப்பாற்றுவதோ நிச்சயமாய் எனது கடமையாகின்றது. இப்படியிருப்பதால் நான் எவ்விதம் பாபத்தைத் தவிர்ப்பேன், எனது பிதாவுக்கும் நான் புத்திரன், மாதாவுக்கும் புத்திரன் - புத்திரனுக்குள்ள சகலமும் பிதாவால் அளிக்கப்படுகின்றது. பிதா பிரீதியடைந்தால் தேவதைகள் எல்லோரும் பிரீதியடைகிறார்கள். பிதாவின் திருப்தி வசனங்கள் புத்திரனுக்கு சகல மங்களங்களையும் வருவிக்கின்றன. ஆனால் மாதாவோ! சரீரத்தைக்கொடுத்தவள். குழந்தைப்பருவத்தில் காப்பாற்றினவள். தாயை யிழந்த புத்திரனுக்கு உலகமுழுமையும் பாழே. அவளுக்குச்சமானமான ஆதரவும், அடைக்கலமும், ஆபத்தில்துணையுந் தனக்கு வேறொன்றும் கிடையாது". என்று யோசித்து இவ்விதம் விரோதப்படும் பலவகை எண்ணங்களால் கலக்கமடைந்து சிரகாரிபின்னும் "கணவனுக்குப் பத்தினியைப் போஷித்துக் காப்பாற்றுவதாலன்றோ பர்த்தா (பரிப்போன்) வென்றும், பதி (பாலனம் பண்ணுவோன்) யென்றும் பெயர் கிடைத்திருக்கின்றது. அவனவ்விதம் போஷித்துக் காப்பாற்றாவிடில் அவன் கணவனாயிருத்தலெப்படி. எனது அன்னையேஎனக்குப் பரம பூஜாஸ்தான"மென நினைத்துக் கொண்டிருந்தான். இஃதிப்படியிருக்க, கௌதமரும் வெளியே சென்றபின் நிஷ்டையால் மனது சாந்தமடைந்து தன் குமாரனைத் தன் பத்தினியைக் கொன்றுவிடச் சொன்னதால் தான் செய்துவிட்டபாபத்தை நினைத்துக்கலங்கி யழுதுபுலம்பிக்கொண்டு தன்மனைவியின் குற்றத்திற்குத் தன் அஜாக்கிரதையையே யெனத் தன்மீது குற்றங் கூறிக்கொண்டு, தன் புத்திரன் தன்னாக்ஞையை நிறைவேற்றாமலிருக்க வேண்டுமெனப் பிரார்த்தித்துக்கொ

ண்டு வீடு நோக்கி விரைந்து சென்றார். புத்திரனை நினைத்து "என்னைக் காப்பாற்று" என்னையும் உன் அன்னையையும் நான் செய்து முடித்த தபசையும், பெரும் பாபத்துக் காளாக்காமல் உன்னையும் காப்பாற்றுவாயாக என்று அலறிக்கொண்டு வந்தார். ஆதலால் சிரகாரி என்பவன் தன்பொறுமையாலும், ஆழ்ந்த வாலோசனையாலும் தன் பிதா அவசரத்திலிட்ட வுத்தரவைத் தள்ளி அவரது அந்தரங்கத்தில் நிலைத்த கருத்தையே நிறைவேற்றிப் பிதாவைக் கோபம் கர்வமிவற்றால் நேர்ந்த கொடும்பாபத்திற்காளாக்காமல் தப்புவித்தான்.

## பிரமாணங்கள்.

𑌅𑌹𑌿𑌂𑌸𑌯𑍈𑌵 𑌭𑍂𑌤𑌾
𑌨𑌾𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌶𑍍𑌰𑍇𑌯𑍋𑌽𑌨𑍁
𑌶𑌾𑌸𑌨𑌮𑍍। 𑌵𑌾𑌕𑍍𑌚𑍈𑌵 𑌮𑌧𑍁𑌰𑌾
𑌶𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌣𑌾 𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑍍𑌯𑌾 𑌧𑌰𑍍𑌮𑌮𑌿𑌚𑍍𑌛𑌤𑌾

மனுஸ்மிருதி ii 159.

சகல பூதங்களுக்கும் நன்மார்க்கத்திற்கு உபதேசங்கள் ஹிம்சையன்றியில் அளிக்கப்படவேண்டும். தர்மத்தை விரும்புகிறவன் மிருதுவாயும், அமரிக்கையாயுமுள்ள வசனத்தையே யுபயோகித்துவரவேண்டியது.

𑌰𑌕𑍍𑌷𑌣𑌾𑌦𑌾𑌰𑍍𑌯𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌨𑌾𑌂
𑌕𑌣𑍍𑌟𑌕𑌾𑌨𑌾𑌂𑌚 𑌶𑍋𑌧𑌨𑌾𑌤𑍍 ।
𑌨𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌦𑌿𑌵𑌂𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌪𑍍𑌰
𑌜𑌾𑌪𑌾𑌲𑌨𑌤𑌤𑍍𑌪𑌰𑌾𑌃 ॥

மனுஸ்மிருதி ix 253.

ஒழுங்காய் நடப்பவர்களை ரக்ஷிப்பதாலும், அயோக்கியர்களை தண்டித் தப்புறப்படுத்துவதாலும், பிரஜைகளைப் பரிபாலனம் பண்ணுவதில் ஊக்கமுடையவரசர்கள் சுவர்க்கமடைகிறார்கள்.

𑌸𑍍𑌵𑍇 𑌸𑍍𑌵𑍇 𑌧𑌰𑍍𑌮𑍇 𑌨𑌿𑌵𑌿𑌷𑍍𑌟𑌾𑌨𑌾𑌂
𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌮𑌨𑍁𑌪𑍂𑌰𑍍𑌵𑌶𑌃 ।
𑌵𑌰𑍍𑌣𑌾𑌨𑌾𑌮𑌾𑌶𑍍𑌰𑌮𑌾𑌣𑌾𑌂 𑌚 𑌰𑌾
𑌜𑌾 𑌸𑍃𑌷𑍍𑌟𑍋𑌽𑌭𑌿𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌾 ॥

மனுஸ்மிருதி vii 35.

தத்தம் தருமங்களை முறைப்படியனுஷ்டிக்கும் வருணங்கள், ஆசிரமங்கள் இவற்றைப் பாதுகாப்பவனாக அரசன் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றனன்.

𑌯𑌥𑍋𑌦𑍍𑌧𑌰𑌤𑌿 𑌨𑌿𑌰𑍍𑌦𑌾𑌤𑌾 𑌕𑌕𑍍𑌷𑌂
𑌧𑌾𑌨𑍍𑌯𑌂 𑌚 𑌰𑌕𑍍𑌷𑌤𑌿 । 𑌤𑌥𑌾 𑌰𑌕𑍍𑌷𑍇
𑌨𑍍𑌨𑍃𑌪𑍋 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 𑌹𑌨𑍍𑌯𑌾𑌚𑍍𑌚 𑌪
𑌰𑌿𑌪𑌨𑍍𑌥𑌿𑌨𑌃 ॥

மனுஸ்மிருதி ix 110.

எப்படி களையெடுப்போன் களைகளைப்பிடுங்கி யெறிந்து பயிரை ரக்ஷிக்கிறானோ அவ்விதமே அரசனும் தன் ராஜ்ஜியத்தைப் பாதுகாக்கவும்விரோதிகளை நாசம் பண்ணவும் வேண்டும்.

𑌸𑍁𑌵𑌾𑌸𑌿𑌨𑍀𑌃 𑌕𑍁𑌮𑌾𑌰𑍀𑌶𑍍𑌚
𑌰𑍋𑌗𑌿𑌣𑍋 𑌗𑌰𑍍𑌭𑌿𑌣𑍀𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌅𑌤𑌿𑌥𑌿𑌭𑍍𑌯𑍋𑌽𑌗𑍍𑌰 𑌏𑌵𑍈𑌤𑌾
𑌨𑍍 𑌭𑍋𑌜𑌯𑍇𑌦𑌵𑌿𑌚𑌾𑌰𑌯𑌨𑍍 ॥

மனுஸ்மிருதி iii 114.

நூதனமாய் விவாகஞ் செய்யப்பட்ட பெண்ணையும், குமாரிகளையும், ரோகிகளையும், கர்ப்பிணிகளையும், அதிதிகளுக்கு முன்னால் விசாரியாமல் கிருஹஸ்தன் போஜனஞ் செய்விக்கலாம்.

[illegible]

மனுஸ்மிருதி ii 138.

வண்டியிலுள்ளவன், 90 வயதுக்கு மேற்பட்டவன், ரோகி, சுமையுடையவன், ஸ்திரீ, ஸ்நாதகன், அரசன் மணமகன் இவர்கட்கு (உடனே) வழிவிடவேண்டும்.

[illegible]

மஹாபாரதம் அனுசாசன பருவம் V. 28.

காருண்யமே சாதுக்களின் பெருமைக்கு அடையாளம் காருண்யகுணம் சாதுவுக்குப் பிரீதியை யுண்டுபண்ணுகின்றது.

[illegible]

ஈசுவரனுக்கு மப்பாலுள்ளதும் அஷ்டசித்திகளோடுங் கூடியதுமான பதவியையாவது, பிறப்பற்ற நிலைமையையாவது நான் விரும்புகிறேனில்லை; பின்னைச், சரீரிகள்யாவரும் துக்கமற்று வாழும்படியாக அவர்க்குள்ளெல்லாம் யான் நிரம்பி அவர்கள் துக்கங்கள் யாவையும் தாங்க வேண்டுமென்ப தொன்றையே வேண்டுகிறேன்.

𑌕𑍍𑌷𑍁𑌤𑍍𑌤𑍃𑌟𑍍𑌶𑍍𑌰𑌮𑍋𑌗𑌾𑌤𑍍𑌰 𑌪𑌰𑌿
𑌭𑍍𑌰𑌮𑌶𑍍𑌚𑌦𑍈𑌨𑍍𑌯𑌂𑌕𑍍𑌲𑌮𑌃𑌶𑍋𑌕𑌵𑌿
𑌷𑌾𑌦𑌮𑍋𑌹𑌾𑌃 । 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑌿𑌵𑍃
𑌤𑍍𑌤𑌾𑌃𑌕𑍃𑌪𑌣𑌸𑍍𑌯𑌜𑌨𑍍𑌤𑍋𑌰𑍍𑌜𑌿𑌜𑍀
𑌵𑌿𑌷𑍋𑌰𑍍𑌜𑍀𑌵𑌜𑌲𑌾𑌰𑍍𑌪𑌣𑌾𑌨𑍍𑌮𑍇

விஷ்ணுபாகவதம் ixxxi 12, 13.

என் பசி, தாகம் உடலின்களை, மனதின்கவலை, விசாரம், சோகமோஹவிஷாதங்கள் இவை யாவும் ஜீவனிலாசையுடைய இந்தப் பரிதாபகரமான நிலைமையிலுள்ள பிராணிக்கு உயிருக்காதாரமான இந்த ஜலத்தைக் கொடுத்தால் விலகிப் போயின வன்றே!

---

## அதிகாரம் XI.

### நற்குணங்களும் துற்குணங்களும் ஒன்றோடொன்று சம்பந்திக்கும்பொழுதுண்டாகும் பலன்கள்.

இதுவரை யநேகம் நற்குணங்களையும் துற்குணங்களையும் தனித்தனியாய் விசாரித்து அநேக முகாந்தரங்களில் நற்குணங்கள் க்ஷேமத்தையும் துற்குணங்கள் துன்பத்தையும் வருவிக்கின்றன என்பதை யறிந்தோம். இப்பொழுது முடிவில் ஒரு நற்குணம் பிறரிடத்திலும் நற்குணத்தை எப்படி யுண்டாக்குமோ அப்படியே துர்க்குணமும் பிறரிடத்தில் துர்க்குணத்தையே யுண்டாக்குமென்று அறியவேண்டும். இதனால் பிறரிடத்தில் நல்லெண்ணம் நற்செய்கைகளை யுண்டு பண்ணி அவர்க்கு க்ஷேமத்தை விருத்தி பண்

ணும் வழி யின்னதென நாமறிகிறோம். பிறரிடம் நாமன்பு பாராட்டுவோமாயின் அவரிடம் அன்பையே யுண்டு பண்ணுவோம். அப்படியே துவேஷத்தைக்காட்டினால் துவேஷமே கிளம்புகின்றது. பிறர் நினைவுகளின்படியே நம்முடைய வெண்ணங்களு முதிக்கின்றன. கோபமுடைய வொருவன் தன்னைச் சூழ்ந்திருக்கும் யாவரிடத்திலும் கோபத்தையே யுண்டாக்குகிறான். அதனால் கலகங்களுண்டாகி நாளடைவில் துக்கத்தையடைகிறான். ஒரு கோபமான வார்த்தைசொன்னால் அதற்கு வதில் சொல்லுவோனும் கோபமான வார்த்தையையே சொல்லுகிறான். திரும்பி முதற் பேசினவன் இன்னும் விசேஷமான கோபத்துடன் சொற்களைச்சொல்ல இவ்விதமே சண்டை வளருகின்றது. இப்படியில்லாமல் மிருதுவான சொற்களுக்குச் சாந்தமான மறு மொழியே கிடைக்கின்றன. பிறரிடம் நாம் பட்சமாயிருந்தால் அவர்களும் நம்மிடம் பட்சமாயிருப்பார்கள். ஆதலால் உபகாரம் உபகாரத்தையே வருவிக்கின்றது.

இவ்வுண்மையை நாமறிந்து கொண்டால் பிறர் நம்மிடம் கெட்ட எண்ணங்களை நினைக்கும் பொழுது நாமும் அவ்விதத்கெடுதலான எண்ணங்களுக் கிடங்கொடாமல் பிறரிடமுள்ள கெட்டவெண்ணங்களை மாற்றும் பொருட்டு நல்லவெண்ணங்களை நம்மிட முற்பத்தி பண்ணிக்கொள்ளுவோம். ஒருவன் நம்மைப்பார்த்துக் கோபத்துடன் பேசுவானாகில், நமக்கும் கோபத்துடன் அவனைப்பார்த்துப் பேசத் தோன்றும் பொழுது நாம் நம்மையடக்கிக்கொண்டு மிகவும் சாந்தமாய்ப்பதி

னுரைக்கவேண்டும். இம் மிருதுவானமொழி யவனைச் சாந்தப்படுத்தி அவன் கோபத்தையும் மட்டுப்படுத்தும். இவ்விதம் நடத்தற்குத்தான் கெடுதலுக்கு நலம் செய்த லென்று பெயர். இவ்விதம் நாம் நடந்து வருவதால் ஜனங்கள் மத்தியில் சமாதானம் குன்றும் பொழுது சகலருடைய க்ஷேமத்தின் பொருட்டும் அதைத் திருப்பி வருவிக்கமுடியும்.

யுதிஷ்டிரமகாராஜனைக் கௌரவர்கள் மிகவுமனியாயமாய் வஞ்சித்துத்கெடுத்ததற்காகத் துரௌபதியம்மை அவர்களைக்கௌரவர்கள்மீது படை யெடுக்கும்படியன் முறை தூண்டியபொழுது, விவேகியானயுதிஷ்டிரர் தீங்கிற்கு வதில் தீங்கிழைப்பதால் தீங்கே விளையுமே தவிர வேறுண்டாகாது. பிறரால் துன்புறுத்தப்பட்ட போழ்தும் தன் கோபத்தைக் கிளம்ப வொட்டா தடக்கிக் கொள்ளும் விவேகியானவன் தன் சத்துருவை லக்ஷியம் பண்ணாது மறந்துவிடுவதால் பின்னர்ப் பரலோகத்தில் இன்பமடைவன். என்று அவளுக்குக்கூறினர். ஆகையால் விவேகியானவன் பலமுள்ளவனுயிருந்தாலும் சரி, இல்லாதவனுயிருந்தாலும் சரி தன்னை வருத்தியவனை யவன் துன்பத்தி லகப்பட்டுக்கொண்டாலும், க்ஷமிக்கவேண்டுமென்று கூறப்பட்டிருக்கின்றது. மானிடருள்ளும் பூமி தேவியைப்போல் பொறுமையுடையோர் சிலராவது இல்லாமற் போவார்களாயின் மனிதர் மத்தியில் ஒரு நாளும் சாந்தியென்பது நிலைபெறாது, கோபத்தால் ஓயாத கலகமே குடிகொள்ளும், துன்பமடைந்த ஒவ்வொருவனும் தனக்கேற்பட்ட துன்பங்களையே திரும்பித் தன் சத்துருவுக்கும் செய்வானு

கில், யஜமானனால் கண்டிக்கப்பட்ட வேலைக்காரர்களும் திரும்பி யஜமானனைக் கண்டிப்பார்களாயின், முடிவு சகலப் பிராணிகளும் நாசமடைவதேயாகும்; பாபமே பிரகாசிக்கும். பிறரிடம் கடுஞ்சொற்கேட்டவொரு மனிதன் அவ்விதக் கடுஞ் சொற்களையே தானுங் கூறுவானாகில், துன்பமடைந்தவன் அவ்விதத் துன்பங்களையே தானும் திருப்பிச் செய்வானாகில், பிறரால் கண்டிக்கப்பட்டவன் தானுமப்படியே அவரைக் கண்டிப்பானாகில், அப்பொழுது பிதாக்கள் தம் புதல்வர்களைக் கொல்லுவார்கள், மனைவிகள் தங்கணவர்களைக் கொல்லுவார்கள், கணவரு மனைவியரைக் கொல்லுவார்கள். அப்பொழுது ஓ! கிருஷ்ணா! அவ்விதங் கோபமே நிறைந்திருக்கும் உலகில் ஜனனம் எவ்வாறு சம்பவிக்கும். பிராணிகள் ஜனிப்பதற்கு ஒற்றுமை அவசியமென்று நீயறியவேண்டும்". என்று அர்ச்சுனன் கூறினான்.

தசரதராஜன் தன் மனைவியின் கோபத்தை தன் சாந்தகுணத்தால் மாற்றிவிட்டதைக் கேளுங்கள். இராமச்சந்திரனது தாயாராகிய கௌஸலை தன்னுத்தம குமாரன் தன்னை விட்டு வெகு காலத்திற்கு முன் காட்டுக்குத் துரத்தப்பட்டதைக்கண்டு, துக்கத்தால் மனம்புண்ணாகித்துயரத்தைச் சகிக்கமாட்டாமல்தசரதரைப்பார்த்து முதல் தடவையில் அடியில் வருமாறு கோபமுள்ள வார்த்தைகளைக் கூறினாள். அவையாவன "ஓ அரசனேநீ யுனது நிரபராதியான புத்திரனைஉனது கைகளாலேயே கொன்றாய்! உன் முன்னோர்கள் ஏற்படுத்தியிருக்கும் தொன்று தொட்டுவந்திருக்கும் மார்க்கத்தைவெகு சிரமத்துடன் நீ யனுஷ்டித்துவந்திருப்பது

மிகவு நன்ருயிருக்கிறது. ஸ்திரீகளுக்குப் புருஷன் முதல் சரணம், புத்திரன் இரண்டாவதாஆவன். பந்துக்கள் மூன்ருவதாவர். நான்காவது கிடையாது. இப்பொழுது நீ என்னை (முழுவதும்) கைவிட்டுவிட்டாய், ராமனும் சென்றுவிட்டான். நானுமுன்னை விட்டு ராமனிடன் செல்வது கூடாது. ஆதலால் எல்லாவிதத்திலும் என்னை நீ கொன்று விட்டாய். இந்த ராஜ்ஜியத்தையும் ஜனங்களையும் நாசப்படுத்தி விட்டாய்". என்பனவாம். இக்குரூரவார்த்தைகளைக் கேட்டவுடன் அரசனும்இன்னுமதிகமாகத் துக்கசாகரத்தி லாழ்ந்தான். அவன் மனம் புழுங்கிப் பிரக்ஞை யிழந்து மூர்ச்சையாயினன்.

சற்றுநேரஞ் சென்றபின் மூர்ச்சை தெளிந்து கௌசலைதேவி யின்னும் தன் பக்கத்தில் நின்றுகொண்டிருக்கக் தசரதர்கண்டார். அந்தநிமிஷத்தில் தான்வெகு நாளைக்கு முன் செய்துவிட்ட தவறுதலும் அதனல் தற்காலத்தில் விளைந்த பலன்களும் முழுவதும் அவர் நினைவுக்கு வந்தன. முதலில் தான் செய்த தவறுதலையும் இப்பொழுது ராமனை யிழந்ததையும் நினைத்துருகி; நடுங்கி, கைகளைக் கூப்பிக்கொண்டு தலைவணங்கி அவளைப்பார்த்து கூறியதாவது: "கௌசலாய் நீ என்னை க்ஷமிக்கவேண்டும். உனக்கு அஞ்சலி பண்ணுகிறேன். நீ எப்பொழுதும் அன்னியரிடத்திலும் இரங்கிய சித்தமுடையவள். உன் கணவன் நல்லவனுயினும் பொல்லாதவனுயினும் அவனுக்கு நீ சிறிதிரங்கி நடப்பாயாக, எனக்கு நேரிட்டிருக்கும் துக்கத்தால் நான் முன்னமே மனமிழந்திருக்கின்றேன். ஆதலால் நீ துன்பமடைந்தாலும் என்னை நோக்கிக் குரூர வார்த்தைகளைப்பேசா

திருப்பாயாக". என்றேயாம். இவ்விதமாய்த் தாழ்வ டைந்த அரசனுடைய பரிதாபகரமான வார்த்தைகளைக் கேட்டுக் கௌசலையின்கண்களிலிருந்து மலையருவிகளி லிருந்துமழைஜல மிறங்கினாற்போலத் துக்கத்தால் நீர் பெருகிற்று. அவளுக்குக் கோபம் விலகி ஆழ்ந்த தாழ் மையும் பச்சாத்தாபமும், தான் குரூர வார்த்தைகளைப் பேசியதற்குப் பாபபயமும் உண்டாயின. இவள் அர சனதிருகரங்களையும் எடுத்துத் தன் தலைமீது வைத் துக்கொண்டு மிகுந்த நடுக்கத்துடன் " அரசனே என்னை க்ஷமிக்கவேண்டும், க்ஷமிக்கவேண்டும். உன் பாதங்களில் வீழ்ந்து மன்றாடுகிறேன். நான் உன்னை மன்னிப்புக் கேட்க வேண்டுமே யொழிய நீ யென் னைக் கேட்கவேண்டிய துண்டோ ! ஏனெனில் உன்னை யவ்விதம் கேட்கும்படி செய்வேனாகில் எனக்கு மிகப் பாபம் வந்து சேருமன்றோ ! தன் புருஷன் தன்னைப் பிரார்த்திக்கும்படி செய்து கொள்ளும் ஸ்திரீக்கு இவ் வுலகிலும் மறு வுலகிலும் பூஜ்யதை கிடையாது. நான் தர்மமறிவேன். என் கணவனாகிய நீரும் தர்மமறிந்த வரானதால் உமது பிரதிக்ஞையை நிறைவேற்றிச் சத்தி யத்தைப்பாதுகாக்க வேண்டியதவசியம் என்றும் நான றிவேன். என்புத்திரனை நோக்கி யுண்டான வருத்தத் தால் தவறிப்போய் அவ்விதக் குரூரமான வார்த்தைக ளைச் சொல்லும்படி தூண்டப்பட்டேன். துக்கம் சகல உறுதியையு நாசப்படுத்தும். துக்கம் சகல வறிவை யும் அழித்துவிடுகின்றது. துக்கத்தைப்போன்ற சத்து ருவேறொன்றும் கிடையாது. எனது அருமையான குமாரனை நினைக்கும்பொழுது அவ்விதத் துக்கம் மாறி

காலத்தில் ஆறுகள் பெருகுவதுபோல் பெருகின்றது."
எனக் கூறினள்.

இவ்விதமாய்க் கௌசலையின் கோபம் தசரதருடைய பொறுமையாலும் சாந்தகுணத்தாலும் விலக்கப்பட்டது. அவளுடைய கொடுஞ்சொற்களுக்கு அவரும் கொடுமையுடன் மறுமொழி கூறியிருப்பாராகில் இருவருக்கும் பெருங் கலகமுண்டாயிருக்கும். அவ்விருவருக்கும் பொதுவான துக்கமே அவ்விருவரையும் முற்றிலும் பிரித்துவிட்டிருக்கும். அப்படிப் போகாமல் தசரதர் தாழ்மையுடன் அவள் கர்வத்தையும், அவள் கடுமொழியைச் சாந்த குணத்தாலும், கோபத்தை யன்பாலும் கிரஹித்ததால் சாந்தமு மன்புந் தாழ்மையும் அவளிடத்தும் உற்பத்தி யாக்கப்பட்டன.

இவ்விதமே ராமச்சந்திரனும், லக்ஷ்மணன், பரதன் மீது கோபமும் அவநம்பிக்கையுங் கொண்டபொழுது, தான் முதலில் நம்பிக்கையையு மன்பையும் பரதன்மீது காட்டிப்பின்னர் லக்ஷ்மணனுக்கு மவன்மீதுநம்பிக்கை வரச்செய்தார். பிதிர்வாக்கியத்தைக் காப்பாற்றுவதற்காகத் தம்பி மனைவியுடன் ஸ்ரீராமன் அயோத்தியைவிட்டு வெளியேறிக்காடுகளில் வசித்துவந்தபொழுது, ஒரு நாள் தூரத்தில் பெருஞ்சைநியம் எதிர்நோக்கி வரும் சப்தத்தைக்கேட்டு உடனே லக்ஷ்மணனை ஓர் மரத்தின் மீதேறி அச்சத்தம் யாதெனப் பார்த்துவரும்படி கட்டளையிட்டார். லக்ஷ்மணனு மவ்விதம் சென்று பார்க்கையில் பரதன் சேனையுடன் வருவதைக் கண்டான். ஸ்ரீராமனும் தானும் நாட்டைவிட்டுத் துரத்தப்பட்டதைப் பற்றிய நினைவுடனே லக்ஷ்மணன் மனதைப் பரதனிடம்

சந்தேகப்படும்படி செய்தது. லக்ஷ்மணன் சீக்கிரம் ராமனிடம் ஓடிச் சண்டைக்கு ஆயத்தப்படவேண்டு மென்றும், பரதன் தங்களைக் கொன்றுவிட்டு ராஜ்ஜிய த்தைத் தனக்கு ஸ்திரப்படுத்திக்கொள்வதற்குச் சேனை யுடன் புறப்பட்டு வருகின்முனெனவும் தெரிவித்தான். அதற்கு ஸ்ரீராமன் உடனே "நீயவ்விதம் அவனைச் சந்தேகியாதே. அவனிடம் இந்த ராஜ்ஜியத்தை யிவ் வளவையும் லக்ஷ்மணனுக்குக் கொடுத்துவிடு என்று சொல்லுகிறேன். அதற்கு 'ஆகட்டும்' என்ற ஒரேவார் த்தையை விடைகொடுக்கிமுன் பார்."—என்று கூறி னுர்.

உடனே லக்ஷ்மணனுக்குக்கோபம் போய் லஜ் ஜையுண்டாயிற்று. பிறகு பரதனும்வந்து சேர்ந்துஸ்ரீரா மனைத்திரும்பி யயோத்திக்கு வந்து சேரும்படி யிர ந்து வேண்டினுன். ராமன் பிதாவின் வாக்கியத்திற்கும் கருத்திற்கும் வேருக நடப்பதில்லை யென்முர். பின்பு பரதன் ஸ்ரீராமனது பாதகுறடுகளைப் பெற்றுக்கொ ண்டு அவற்றை நியாயமான வரசனது முத்திரையாய்ச் சிம்மாசனத்தில் வைத்து ஸ்ரீராமனது பெயரால் அவ னது அதிகாரியாய் ராமன் வனவாசம் பண்ணின 14 வருஷ மளவும் அயோத்தியை யாண்டுவந்தான்.

பாண்டவர்கள் வனவாசம் செய்துகொண்டிருந்த பொழுது மிகவும் கஷ்டப்படுகையி லெல்லாம் மனைவி யும் தம்பியரும் தைரியம் பொறுமையிழந்து யுதிஷ்டிர ரை அவர் பொறுமையுடன் கௌரவருடன் செய்து கொண்ட வுடன்படிக்கையை மீருமலிருப்பதற்காகவும் தன் கஷ்டங்களைச் சகித்துக்கொண்டு வருவதற்காகவும்

அடிக்கடி குற்றங்கூறினார்கள். தடவைக்குத்தடவை யிவ்விதம் தனக்கு வேண்டியவர்களின் நிந்தனைகளால் துன்பூட்டப்பட்டும் அவர் தன் சாந்தகுணத்தால் அவர்களைத் தடவைகள்தோறும் கௌரவமும் நியாயமுமான மார்க்கத்துக்குத் திருப்பிக்கொண்டுவந்தார். ஒருநாள் பீமன் மிகுந்த கோபத்திற்கு இடங்கொடுத்தவனாய் யுதிஷ்டிரர் பாண்டவரை வஞ்சித்து மாயமாய்ச் சூதாடி அவர்களோடு செய்தவுடன்படிக்கையை மீறுது பாதுக்கும் சத்தியம் மிக மெச்சத்தகுந்த தென்றும், ராஜ்ஜியத்தையும், சம்பத்தையும் பாண்டவர்களிழக்கும்படி நேரிட்டது யுதிஷ்டிரரால்தானென்றும், அவர் உறுதியற்றவர் என்றும், க்ஷத்திரிய வர்ணத்திற்குரிய குணங்களான வீரியமுதலியவற்றை யிழந்து தன்னை மிகவு நிந்தைக்குள்ளாக்கிக் கொண்டன ரென்றும், மிகவுங் கடுமையாய்த் தன் தமையனைப் பழித்தான். அதற்கு யுதிஷ்டிரர் தனக்குள்ள பொறுமை யெல்லாவற்றையுங் கொண்டு சில நிமிஷநேரவரை பதில் சொல்லாமல் மௌனமாயிருந்து பின் பீமன் சொன்ன தவ்வளவு முண்மையே யென்று கூறி " நீ யிவ்விதம் என்னைச் சுடுவதற்கும், அம்புபோன்ற வசனங்களால் என்னைத் துளைப்பதற்கும் நானுன்னைக் குற்றங் கூறுவது சரியன்று. ஏனெனில், எனது சொந்த முட்டாள் தன்மையால் தான் உங்களுக் கிவ்வாபத்து வந்தது. நான் என் மனதை யடக்கி ஆணவம், பெருமை, கர்வமிவற்றிற் கிடங்கொடாம லிருந்திருக்க வேண்டும். ஆதலால் உன்னை யுனது கொடுமையான சொற்களுக்காகக் குற்றங்கூறுதல் நியாயமன்று. ஆயி

னும் நான் எனது வாக்கை யளித்திருக்கிறேனன்றோ! எவர்தான் தானளித்த வாக்கை மீறலாகும். பொய் யால் இராஜ்ஜியத்தை யடைவதைப் பார்க்கிலும் இற த்தல் லகுவேயாகும். ஆதலால் என்னை யிவ்வளவு கடுஞ்சொற் சொன்னதால் என்ன பயன் கிடைக்கும். என்னாலுண்டாகிய இந்தக் கஷ்டங்களைப் பார்ப்பதால் என் மனமுடைந்து போயிருக்கின்றது. ஆயினும் நான் அளித்த வாக்கை மீறுதலெங்ஙனமாகும்? ஆத லால் தம்பி விதைவிதைத்தவன் அறுவடைகாலத்தை எதிர் நோக்கி நிற்பதுபோல் நமக்கு நற்காலம் வரும் வரை பொறுத்திரு. ராஜ்ஜியங்கள், புத்திரர்கள், கீர்த்தி சம்பத்து இவை யாவும் சத்தியத்தின் மஹிமையில் 16-ல் ஒரு பாகத்துக்கீடாகா." என்று விடை பகர்ந்த னர். இவ்விதம் மிகப்பொறுமையுடன் தம்பியின் கோப வசனங்களை யுதிஷ்டிரரும் தாங்கினார். எப்பொழுதும் குரூரமான நிந்தைமொழிகளுக்கும் மிருதுவும் சாந்த முமான வசனங்களால் பதில் சொல்லிவந்தார். அத னால் கோபத்தினால் எப்பொழுதும் வசப்படுத்தமுடி யாத மகா வீரியமுடைய தம்பிமார்களையும் தன் சாந்த குணத்தால் வசப்படுத்தினார்.

சாந்தமு மிரக்கமு மன்பை யுண்டுபண்ணுவது போல் யோசனையற்ற யிகழ்ச்சியும் முறைப்படி பகை யைவிளைவித்துப் பலகெடுதிகளுக்கு இடந்தருகின்றது. யுதிஷ்டிரரது கீர்த்தி வெகுதூரம் பரவியது. அவர் செய்த ராஜசூய யாகத்தின் சிறப்பை யாவரும் கொண் டாடினார்கள். தன் சத்துருவான யுதிஷ்டிரருக்குக்கிடை த்த இக்கீர்த்தி துரியோதனனுடைய ஹிருதயத்தில்

மாற்சரியத்தையே பெருக்கிற்று. இம்மாச்சரியம் அடங்கினின்றது. பீமன் இன்னுமற்றவர்கள் யோசனையற்றுத் துரியோதனனை நோக்கிச் செய்த பரிஹாசத்தால் பகை பிரகாசமடைந்து விருத்தியாயிற்று. ஒருசமயத்தில் யுதிஷ்டிரர், தம்பிமார், பலவரசர்கள் மற்றுமுள்ள சபையார்களும் சூழச்சுவர்ண சிம்மாசனத்தில்வீற்றிருக்கும் பொழுது, துரியோதனன் தன் தம்பிமார்களோடு சபா கிருஹத்தில் பிரவேசித்தான். அசுரனை மயன் யுதிஷ்டிரரது அரண்மனையைக் கட்டியிருந்த விசித்திரயுக்தியால், துரியோதனன் மயக்கப்பட்டு, பளிங்கு முத்தத்தை ஜலமென்று நினைந்து தன் வஸ்திரங்களை ஜலத்தில் நனையாவண்ணம் கையாற் றூக்கிப்பிடித்துக்கொண்டும், அப்பால் ஜலம் நிரம்பியிருந்ததைக் கெட்டித்தரையென்று நினைத்து அறியாமல்சென்று வஸ்திரங்களை நனைத்துக்கொண்டும், பிரவேசித்தான். அப்பொழுது பீமன் மிகவுந் தாட்சணியமற்றுச் சிரித்தான். அதைக்கண்டுமற்றவர்களும் அவ்வண்ணமே துரியோதனனைப் பார்த்து நகைத்தார்கள். இவர்களையெல்லாம் யுதிஷ்டிரர், துரியோதனனை அவமரியாதைப்பண்ணினதற்காகக் கண்டித்தாராயினும், துரியோதனன் முகத்தில் கோபங்கொண்டு லஜ்ஜையுடன் மனத்திலழுக்காறழுந்தச் சென்று முடிவில் இவ்விகழ்ச்சிக்குத்தக்க பழிவாங்க வேண்டுமென்ற தீர்மானத்துடன் ஹஸ்தினபுரம் திரும்பினன். பின்னல் நடந்த கொடிய சூதாட்டம், அதன் பலனான பாண்டவர்களது வனவாசம், குருக்ஷேத்திரத்தில் நடந்த கொடும்போர், அதில் துரியோதனன், அவனுடையவும், யுதிஷ்டிரருடையவுமான பந்துக்களின் நாசமிவற்

றிற்கேற்பட்ட காரணங்களில் மேற்கூறிய பீமன் முத லினோர் பண்ணின பரிஹாசமு மொன்ருயிற்று.

தீங்குக்குப் பதிலாக தீங்கை யிழைப்பின் அது இன்னும் புதிதான தீங்கையே விளைவிக்கும். இதனுல் துக்கமே விருத்தியாகுமன்றி வேறன்று. பிருகுவுக்கு 'ஜமதக்கினி' என்ருேர் குமாரனிருந்தார். இவர் தபசின், அனுஷ்டானங்களில் சிறந்தவராயிருந்தார். இவர் வம் சத்தில் ராமன் என்னும் ஓர் புத்திரன் பிறந்தார். இவருக்குப் பிற்காலத்தில் பரசுராமன் என்னும் பெயர் கிடைத்தது. இந்த ராமன் என்பவர் பிராமண குலத் தவராயினும் அவர் பாட்டனுன பிருகு இவரை க்ஷத்தி ரியவகுப்பிற் குரியவர் என்று கூறியிருந்தபடியே யிவ ருக்கு க்ஷத்திரிய சுபாவமே அந்தரங்கத்தில் விளங் கிற்று. ஜமதக்கினியிடத்திலும் சிறிது மூர்க்கக்குணம் தங்கியிருந்தது. இது அவர் வெகுநாள் செய்துவந்த தபசாலும் அடங்கவில்லை. இதனுல் அவ்வம்சத்திற்கே பல விடைஞ்சல்களும் துக்கங்களுமுண்டாயின. ஜமதக் கினி ஒரு சமயத்தில் தன் மனைவியின் பாதிவிரதத்தின் மீது தனக்குத் திடீரெனத் தோன்றிய சம்சயத் தால் தனது குமாரர்களை யழைத்து அவர்களில் ஒவ் வொருவனையு நோக்கி அவளைக் கொன்றுவிடும்படி கட்டளை யிட்டனர். மாதாவின் பவித்திரமான சரீ ரத்தை அவர்களி லொருவரும் கொல்லத் துணிய வில்லை. கடைசியில் யாவருக்கு மிளைஞனுன ராமன் துணிந்து ஒரு கோடரியால் அவள் தலையைத் துண்டித் தான். இதற்காகப் பிதாவால் ஒரு வரம் கொடுக்கப்பட் டது. அவ்வரத்தின்படி தன் மாதாவை திருமியுமுயிர்ப் பிக்கப்படவேண்டுமென வேண்டினன். பிறகு மாதா

வைவதம் செய்தபாபத்தைப் போக்கடித்துக் கொள் வதற்காகத் தீர்த்த யாத்திரை சென்ருர். இவ்விதம் ஓர் விதமாய் இவ்வனர்த்தங்கள் ஒழிந்துபோயினும் ஜமதக்கினியின் கோபத்தாலுண்டாகியவை மட்டும் அம் மட்டில் ஒயவில்லே. ஜமதக்கினியின் மனேவியாகிய ரேணுகையானவள் ஒரு சமயத்தில தன் குமாரர்களெல் லாம் வெளியே போயிருந்ததால் வீட்டில் தனியே யிருந்தபொழுது, கிருதவீரியன் குமாரன் அர்ஜ்ஜுனன் வீட்டிற்குவர அவனுக்கு அதிதியின் வழிபாடு செய்ய நேரிட்டது. அவன் தனக்குச் செய்த வுபசாரம் தன்னுயர்ந்த பதவிக்குத் தகுந்ததல்லவென்று அதிர்ப்தி பட்டு, நித்தியம் கிருஹத்தில் நடத்தப்படும் யக்ஞத் திற்கு வெண்ணெய் உதவும் பசுவின் கன்றை பலாத் காரமாய் அபகரித்துக்கொண்டு சென்றனன். ராமன் திரும்பி வந்தவுடன், ஜமதக்கினி நடந்த சமாசாரத்தை யவரிடம் சொல்லவே அவருக்குக் கோபமுண்டாயிற்று. அஃதொடு கன்றிழந்த பசு தன் கன்றை நினேந் தழுத பரிதாபகரமான குரலானது அக்கோபத்தை யதிகப்படுத்தியது. இதனல் கோபத்தை யடக்க முடியாமல் சென்ருேடிப் பலத்த யுத்தம்செய்து அர்ஜ் ஜுனனது ஆயிரங்கரங்களேயும் வெட்டி யவனேக்கொன்ருன். இதனல் அர்ஜ்ஜுனனது பந்துக்களுக்கு மிகுந்த கோபத்தை விளேவித்தது. அவர்கள் இந்தத் தீங்கிற்குப்பதில் தீங்கைச் செய்வதற்காக ஜமதக்கினி யின் ஆசிரமத்திற்கோடி அங்கு தனியே தியானத்தில் ஆழ்ந்து நிஷ்டையிலிருந்த ஜமதக்கினியை கூரிய அம் பால் கொன்ருர்கள். இதோடு கொலே நின்றபாடில்லே.

ஏனெனில் கெடுதல் மேலுமேலுண்டாவதை நிறு த்திவிடக்கூடியது க்ஷமை யொன்றுதான். அதுவே பரசுராமர் மனதில் இல்லை. ஆதலால் பரசுராமரும் தன் தகப்பன் மரணத்திற்குத் துக்கித்து, அவரது சரீரத் தைத் தக்க சடங்குகளுடன் தகனம் செய்து, அந்த தகனக்கினியில்தானே க்ஷத்திரிய ஜாதியையே யழித்து விடுவதாய்ப் பிரதிக்ஞை பண்ணினர். இவ்விதம் முத லில் அற்பமாயிருந்த பகையானது வர வர விருத்தியாகி மிகவும் விசாலிக்கவே, பிறகு பரசுராமர் தன் கோடரி யாயுதமேந்திஅர்ஜ்ஜுனன் சுற்றத்தாரை யெதிர்த்து அவர்களைக்கொன்றார். பின்னர் க்ஷத்திரியர் எல்லா ரோடும் எதிர்த்து அந்த ஜாதியை யநேகமாய் முழுவ துமே அழித்தார்.

அநியாயமாயும் பக்ஷமில்லாமலும் பிறரால் நாம் நடத்தப்பட்ட பொழுதும் நாம் மிகவும் சாந்தமுமமரிக் கையுங்கொண்டு பிறருக்குப் பிரீதி ஜனிக்கும்படி நட ந்துகொள்ளலே மேன்மை. இதனால் நமக்குக் கொடு மைசெய்பவர், நமக்கு சமானர் மேலோர் அல்லது கீழோர் இவருள் யாவராயிருந்தாலு மவரை நாம் வசப் படுத்தி நமக்கு பட்சங்காட்டும்படி செய்து கொள்ள லாம். ஒருகாலத்தில் தூர்வாசர் துரியோதனனைக் கா ணச்சென்றார். அவருக்குத் திருப்தி வரும்படி யுபசரிப் பது மிகவும் கடினமயாயிருந்தது. இரவும் பகலும் அவர் பக்கல் காத்திருந்து துரியோதனனும் அவன் தம்பியரும் அவரை மிகச்சிறப்புடன்உபசரித்து வந்தும் முடியவில்லை. சில வேளைகளில் "ஓ அரசனே எனக்கு மிகப் பசியாயிருக்கிறது. அதி சீக்கிரத்தில் எனக்கு

போஜனம் வரவழை'' என்பார். ஒரு சமயத்தில் அவர் ஸ்நாநத்திற்காக வெளியேறிப்போ யிருக்கும்பொழுது துரியோதனன் அவர்திரும்பிவருவதற்கு முன்னால் போஜனம் தயார்செய்து வைத்திருப்பான். அவர் திரும்பி வந்தவுடன் தனக்குப் பசியில்லாததால் போஜனம் தேவையில்லை யென்பார். இன்னுமொருசமயத்தில் அதி சீக்கிரத்தில் திரும்பிவந்து "இப்பொழுதெனக்கு அதி சீக்கிரம் போஜனம் செய்வி" என்பார். மற்றோர் சமயத்தில் நடுராத்திரியில் திடீரென வெழுந்திருந்து தனக்கு ஆகாரம் தேவை என்பார். அது கொணரப்பட்டால் அதைப்பார்த்துத் தோஷங்கூறித் தொடமாட்டேன் என்பார். இவ்விதம் துர்வாசரும் துர்யோதனனை சிறிது காலம் மிகவும் ஹிம்சித்தார்; பின் துரியோதனனிதற்கெல்லாம் கோபமாவது பொறுமையாவது காண்பியாமலிருந்ததைக்கண்டு மனமிரங்கி "உனக்கேற்ற வரம் நான் தரக்கூடும். உனக்கு வேண்டியதைக் கேள். உன்னிடம் நான் பிரீதியுடையவனாயிருப்பதால் வேதசாஸ்திரங்களுக்கு விரோதமில்லாத தொன்றை நீ பெற்றுக்கொள்.'' எனக் கூறினர்.

சில வேளைகளில் எவ்வித வுபகாரத்தாலு மிளகாதபடி ஒரு மனிதன் மிகவுங் கடினமான மனதையுடையவனாயிருத்தலுமுண்டு. அப்பொழுது அவன் சிறிது மிரங்காத கொடுமைகளைப் புரிந்துகொண்டே முடிவில் தானழியும்வரை செல்வன். இதற்குத் துரியோதனனைத் தகுந்த திருஷ்டாந்தமாகக் கொள்ளலாம். தன் தாயாதிகளிடமிருந்து ராஜ்ஜிய சம்பத்துக்களைப் பிடுங்கிக்கொண்டபின்னும் அவர்கள் காட்டில் சங்கடங்

களாலும் தரித்திரத்தாலும் படும் அவஸ்தைகளைத் தன் கண் குளிரக்கண்டு மனம் பூரிக்கவெண்ணினான். மாயா ஜாலகனான சகுனியும் இவ்விதமவர்கள் துயரங்களை இவன் பார்ப்பதால் இவனது சுகம் விருத்தியாகுமென்று இவனுக்குபதேசித்தான். இதற்காகத் தம்பிமார்கள், சிநேகிதர், அரண்மனை யந்தப்புரத்திலுள்ள மாதர் இவர்களோடும், பாண்டவர்கள் இவ்வளவு கூட்டத்தினுடைய சிறப்பையுங்கண்டு தங்கள் எளிமையை யுன்னி லஜ்ஜை யடைவார்களென் றெண்ணிச் சென்றான். பக்கத்தில் ஓரிடத்தில் தங்கி யிருந்த கந்தர்வராஜனது சைனியங்களை யிவன் கர்வமிகுதியால் யிகழ்ந்து பேசியதால், அவர்கள் இவனையு மிவன் பரிவாரங்களையும் சிறைப்பிடித்ததால் இவனது கொடியயோசனை நிறைவேறாமல் போயிற்று. இவனது கூட்டத்தில் தப்பியோடின சிலர் அருகே வனத்திற் றங்கியிருந்த யுதிஷ்டிர மகாராஜனிடம் சென்று உதவியைப் பிரார்த்தித்தார்கள். சாந்தமூர்த்தியாகிய யுதிஷ்டிரராஜனும் முதலில் பீமன் மறுதலித்ததைக் கண்டித்துத் தம்பியரைச் சென்று பந்துக்களைச் சிறைமீட்டுவரும்படி யேவினார். துரியோதனன், அவன் கிருஹத்திலுள்ள ஸ்திரி ஜனங்களிவர்கள் சிறைப்பட்டால் தமது குடும்பத்தின் கவுரவம் போய்விடுமென்று எண்ணல்வேண்டுமெனத் தம்பியர்க்கு யுதிஷ்டிரர் எடுத்துரைத்தார். "ஐயா எங்களைக் காக்க வோடிவாரும்" என்றிவ்வள விரங்கிய வசனங்களால் பிரார்த்திக்கப்பட்டால் தன் சத்துருவாயினும் அவர்தம் கைகூப்பி அடைக்கலம் வேண்டும்பொழுது அஃதில்லையென்றுமறுதலிக்கும் அற்பப்புத்தியுள்

ளானும் முண்டோ? ஒரு வரத்தைத்தருதல், மகாராஜ்ய பதவி, குழந்தையின் ஜனனம் ஆகிய இவை சந்தோஷத் தைத்தருபவை ; ஆனுல் பாண்டுபுத்திரர்களே ! ஆபத்தி னின்றும் தன் சத்துருவைத் தப்பித்து விடுவதோ மேற் கூறிய வத்தனைக்கும் சேர்ந்து ஈடாகும். இவ்வித மவ் வவுதாரகுணசாலியாகிய வரசன் மொழிய அவர் தம்பி மார்களும் கீழ்ப்படிந்து சென்றார்கள். சிறிதுநேரம் யுத்தம் நடந்தபின் அர்ஜ்ஜுனனும், கந்தர்வராஜ னும் முன்னமே சிநேகிதர்களா யிருந்ததால் சண்டை நிறுத்தப்பட்டது. அர்ஜ்ஜுனன் துரியோதனன் மீது கந்தர்வர்கள் எதிர்த்ததற்குக்காரணம் யாதென வினவ, கந்தர்வராஜனும் துர்யோதனன் காட்டுக்குப் புறப்பட் டதின் கருத்தைத் தானறிந்து அவனைத் தண்டிப்பதற் காக இவ்விதமவனைச் சிறைப்படுத்தித் தேவேந்திரனிட ம்கொண்டுபோவதாகக் கூறினுன். அர்ஜுனன், அவர் களைச் சிறையிலிருந்து விட்டுவிடும்படி தன் சினேகிதனை வேண்ட, கடைசியில் கந்தர்வராஜனும் யுதிஷ்டிரர் அவ் விருத்தாந்தத்தைக் கேள்விப்பட்டபின் அவ்விதம் விட்டுவிடும்படி சொன்னுல் விட்டுவிடுவதாக ஒப்புக் கொண்டான். யுதிஷ்டிரர் மௌனமாய்த் துரியோதனன் கருதின அற்பத்தனமான அக்கிரமத்தைப் பூரணமாய் விவரிக்கக்கேட்டுக் கந்தர்வர்களை நன்றிபாராட்டி வண ங்கித் துரியோதனனுதியர்களைச் சிறையினின்றும் விடு வித்தார். கந்தர்வர்கள் விடைபெற்றுச்சென்றபின் யுதி ஷ்டிரர்மிக்கவன்புடன் துரியோதனனைப்பார்த்து:"ஐயா குழந்தாய் ! இனி இவ்விதமான யோசனையற்ற காரிய மொன்றையும் நீ செய்யாதே. ஏனெனில் ஓ பாரத ! யோ

சனையற்ற செய்கையில் ஒருநாளும் சுகம் கிடைக்கப் போகிறதில்லை. ஆ! குருவம்சத்திற் பிறந்தவனே! உனது தம்பிமார்களுடன் நீ க்ஷேமமா யிருப்பாயாக. உன்னிஷ்டப்படி நீ யுன் ராஜதானிக்குச்செல்லக்கடவாய், வியசனப்படாதே என்ருர். இவ்விதம் மிகவும் பட்சத்தோடு அசூயை நிறைந்ததன் சத்துருவும் இஹலோகத்தில் தானடையும் சகல துக்கங்களுக்குங்காரணமுமான, அத்துரியோதனனை அக்குற்றமற்ற வரசன் நடத்திஞர். ஆனல் துரியோதனனே விடைபெற்றுக்கொண்டு சென்றபின் முன்னினும் விசேஷமாய்த் துக்கம், கோபமிவை கொண்டான்; இவ்விதம் தனக்கு யுதிஷ்டிரர் பட்சமாயிருந்ததுவே அவனுக்கு ஓர் நூதனமான குற்றமாயிற்று. அதனல் மிக மனவருத்தத்துடனேயே திரும்பி ஹஸ்திணபுரம் வந்து சேர்ந்தான். முன்னினு மதிகமாகவே தன் தீமைக்கு நன்மைசெய்த பாண்டவர்களைத் துவேஷித்தான்.

நல்லவேளையாய் இவ்விதமான தீராத கோபசிந்தனை எங்கேயாயினும் அபூர்வமாய்க் காணப்படுவதல்லாது, யாவரிடத்தும் இவ்வளவாழ்ந்து விளங்குகிறதில்லை. சாமானிய ஜனங்களிடத்தில் சொற்பசொற்பமே இக்கொடிய சிந்தனை காணப்படுகின்றது.

சூரியனது பிரகாசம் வெண்ணெய்யை யுருக்கிவிடுவதுபோல் அன்பு கோபத்தை நிமிஷத்தில் மாற்றி விடுகின்றது.

பிறருடைய கோபமானது நம்மிடத்தில் அதற்குச் சரியான கோபத்தை யுண்டுபண்ணும்பொழுது நாமதை யடக்கிக்கொள்ள முயன்று அதற்கு வார்த்தை, பார்வை, நடத்தை யிவற்ருல் வெளிப்பிரகாசத்திற்கு

இடங் கொடாமலிருக்கலாம். அவ்விதமதை யடக்குவதால் அவ்வித நினைவு வரவரத் தணிந்துவருகிறது. இதனல் கோபத்தையுற்பத்தியாகாமலே யடக்கிக்கொள்ள நம்மால் முடியாவிட்டாலும், எரிகிற விளக்கிலெண்ணெயூற்றியதை யதிகரிக்கப் பண்ணுவதுபோல்செய்யாமல், கோபத்தைப் பிரகாசிக்கவொட்டாமல் உள்ளடங்கி நிற்கும்படியாகவாவது செய்துகொண்டவர்களாவோமன்றோ!. இவ்விதம் சிலகாலம் அனுஷ்டித்துவந்தால் பிறர் கோபிக்குமிடத்து நமக்கும் கோபம் வருவது நின்றுபோவதைக் காணலாம். நமது முழுச்சக்தியையும் இச்சமயத்தில் நம்மிடம் கோபிக்கும் பிறர்மீது அன்பு பட்ச மிவற்றை யனுப்புவதிலுபயோகிக்கச் சக்தியுள்ளவர்களாவோம்.

இப்பொழுது கெட்டசகவாசத்தை நாமேன் விலக்கவேண்டுமென்பது நமக்குச் சுலபமாய்த்தெரிகிறது. பட்சமற்றதும், கொடியதும் அசுத்தமுமான நினைவுகளை வழக்கமாய் நினைத்துவருபவர்க ளருகிலும், அசுத்தமும், பேராவல் கொண்டனவும், மிதமிஞ்சுகின்றனவுமான செய்கைகளைச் செய்பவருக்கருகிலும், நாமிருக்கும்பொழுது அவர்களது நினைவுகள்நம்மையுஞ்சம்பந்தித்து,அவர்கள்வழியே நம்மையுஞ்செல்லும்படி தூண்டிவிடுகின்றன, இவ்வித வியற்கைகளுள்ள தீயகுணங்கள் எவையாயினும் நம்மிடம் அடங்கி நின்றிருக்குமாயின், அவை யித்தருணங்களில் உத்ஸாஹ மடைந்து பிரகாசிக்க வாரம்பித்து உறுதியடைந்து நம்மாலடக்க முடியாத நிலையை யடைகின்றன. இக்காரணங்களால் உதாரகுணமும், பிறர்க்குதவும் சீலமும் நிறைந்த மரனி

டத்தன்மையை யடைய விரும்பும் எப்பையனும், கெட்டசகவாசத்தைத் தன்னல் கூடியவரைவிலக்கவேண்டும். எப்பொழுதாவது தன்னுல் விலக்கமுடியாமல் இச்சக வாசத்துள்ளகப்படும்படி யிவனுக்கு நேருமாகில், அப்பொழுது தன்மனதை ஜாக்கிரதையுடன் உயர்வு, சுத்தி, மேன்மை யிவை பொருந்திய சிந்தனைகளிற் செலுத்தி நிற்கவேண்டும். இதனல் பிறர் நினைவுகள் இவனைத்தீண்டி இவனை மாற்றி விடுவதற்கு வதிலாக இவனது நினைவுகள் வெளியேறிச் சுற்றிலுமுள்ளவர்மனதுகளைச்சம்பந்தித்து அவற்றை மாற்றிவிடக்கூடும். நமதறிவை நம் வாழ்க்கையில் அனுஷ்டானத்திற்குக் கொண்டுவந்து நல்ல பிரயோசனதிற் குதவச்செய்யவேண்டும். ஏனெனில் இவ்விதமாய்ச் சகலதோஷங்களையும் நீக்கிக்கொண்டு உலகிற்கு விசேஷ க்ஷேமத்தை வருவிக்கமுயன்று வருவதாலன்றி வேறெவ்விதத்தானும் நாமடையு மறிவிற்குப் பிரயோஜனம் ஏற்படாது.

---

## பிரமாணங்கள்.

𑌕𑍍𑌰𑍁𑌧𑍍𑌯𑌨𑍍𑌤𑌂 𑌨 𑌪𑍍𑌰𑌤𑌿𑌕𑍍𑌰𑍁𑌧𑍍𑌯𑍇𑌤𑍍
𑌆𑌕𑍍𑌰𑍁𑌷𑍍𑌟𑌃 𑌕𑍁𑌶𑌲𑌂 𑌵𑌦𑍇𑌤𑍍॥

மனுஸ்மிருதி VI. 43.

கோபிக்கு மொருவனை (பார்த்து) நாமும் பதிலாய்க் கோபிக்கலாகாது. நாம் கோபமூட்டப்பட்ட பொழுதும் க்ஷேமத்தையே யுச்சரிக்கவேண்டும்.

𑌸𑍇𑌤𑍂𑌂𑌸𑍍𑌤𑌰 𑌦𑍁𑌸𑍍𑌤𑌰𑌾𑌨𑍍 𑌅𑌕𑍍𑌰𑍋𑌧𑍇𑌨 𑌕𑍍𑌰𑍋𑌧𑌂 𑌸𑌤𑍍𑌯𑍇𑌨𑌾𑌨𑍃𑌤𑌮𑍍 ॥

சாமவேதம் ஆரண்யகானம் அர்க்கபர்வம் 2-வது பிரபாடகம்.

தாண்ட முடியாதவற்றைத் தாண்டவேண்டும்; கோபமின்மையால் கோபத்தையும், சத்தியத்தாற்பொய்யையும்.

𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌚 𑌪𑌰𑌾𑌂𑌶𑍍𑌚𑍈𑌵 𑌤𑍍𑌰𑌾𑌯𑌤𑍇 𑌮𑌹𑌤𑍋 𑌭𑌯𑌾𑌤𑍍 । 𑌕𑍍𑌰𑍁𑌧𑍍𑌯𑌨𑍍𑌤𑌮𑌪𑍍𑌰𑌤𑌿𑌕𑍍𑌰𑍁𑌧𑍍𑌯𑌨𑍍𑌦𑍍𑌵𑌯𑍋𑌰𑍇𑌷 𑌚𑌿𑌕𑌿𑌤𑍍𑌸𑌕𑌃 ॥

மஹாபாரதம் வாணபருவம் XXIX. 9.

தன்னைக் கோபிப்பவனைப் (பார்த்து) எவன் திரும்பிக் கோபிக்கிறானில்லையோ அவனிருவர்க்கு சிகித்சை புரிவோனாகிறான். தன்னையும் மற்றொருவனையும் பெரும்பயத்தினின்றும் காப்பாற்றுகிறான்.

𑌕𑍍𑌷𑌮𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌕𑍍𑌷𑌮𑌾 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌕𑍍𑌷𑌮𑌾 𑌭𑍂𑌤𑌂 𑌚 𑌭𑌾𑌵𑌿 𑌚 । 𑌕𑍍𑌷𑌮𑌾 𑌤𑌪𑌃 𑌕𑍍𑌷𑌮𑌾 𑌶𑍌𑌚𑌂 𑌕𑍍𑌷𑌮𑌯𑍇𑌦𑌂 𑌧𑍃𑌤𑌂 𑌜𑌗𑌤𑍍 ॥

மஹாபாரதம் வாணபருவம்.

க்ஷமையே பிர்ம்மம் க்ஷமையே சென்றகாலமும் வருங்காலமும். க்ஷமையே தவம் க்ஷமையே சௌசம். க்ஷமையாற்றானிந்த ஜகத்து தரிக்கப்படுகின்றது.

பரஶ்சேதேநமதிவாதபாணை
ர்ப்ருஶம் வித்யேச்சம ஏவே
ஹ கார்ய: । ஸம்ரோஷ்ய
மாண: ப்ரதிஹ்ருஷ்யதே ய:
ஸ ஆதத்தே ஸுக்ருதம் வை
பரஸ்ய ॥

பிறனால் அம்புபோன்ற வார்த்தைகளாலடிக்கப்படும் பொழுது க்ஷமையையே செய்யவேண்டியது. கோபமூட்டப் படும்பொழுது எவன் தன்னையடக்கிக் கொள்கிறானோ அவன் அவ்வன்னியனுடைய புண்ணியத்தையுங் கிரஹித்துக்கொள்ளுகிறான்.

ஆக்ருஶ்யமாநோ ந வதாமி கிம்
சித் க்ஷமாம்யஹம் தாட்யமா
நஶ்ச நித்யம் । ஶ்ரேஷ்டம்
ஹ்யேதத் க்ஷமாமாஹுரா
ர்யா: ஸத்யம் ததைவா
ர்ஜவமாந்ருஶம்ஸ்யம் ॥

கடுமையாய்ப் பேசப்பட்டால் யான் ஒன்றும் பேசேன். அடிக்கப்பட்ட பொழுதும் க்ஷமிக்கவே செய்வேன். இந்த க்ஷமையை பெரியோர்கள் மிகவுயர்ந்ததெனக் கூறியிருக்கிறார்கள். அவ்விதமே, சத்தியத்தையும் ருஜுஸ்வபாவத்தையும், சாந்தியையும் பேசியிருக்கிறார்கள்.

𑌆𑌕𑍍𑌰𑍁𑌶𑍍𑌯𑌮𑌾𑌨𑍋 𑌨𑌾𑌕𑍍𑌰𑍋𑌶𑍇𑌨𑍍𑌮𑌨𑍍𑌯𑍁𑌰𑍇𑌵 𑌤𑌿𑌤𑌿𑌕𑍍𑌷𑌤𑌃 । 𑌆𑌕𑍍𑌰𑍋𑌷𑍍𑌟𑌾𑌰𑌂 𑌨𑌿𑌰𑍍𑌦𑌹𑌤𑌿 𑌸𑍁𑌕𑍃𑌤𑌂 𑌚𑌾𑌸𑍍𑌯 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 ॥

கோபமூட்டப்பட்டால் திரும்பியும் கோபமூட்டலாகாது. கோபமூட்டினவனது கோபமானது அவனை நாசமடைவித்து அவனது புண்ணியத்தையும் கிரஹித்துக்கொள்ளுகின்றது. பதில் கூறாதிருப்பனோ, எவன் தடைப்பட்டபொழுது தன்னை யடக்கிக்கொண்டு எதிர்த்தடிக்காமலிருப்பனோ அப்படியே தன்னை யடித்தவனுக்கு யாதொரு தீங்கையு மினையாமலிருப்பானோ அவனைக் கண்டு தேவர்களும் பொறாமைப் படுகிறார்கள்.

𑌯𑍋 𑌨𑌾𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌾𑌹 𑌰𑍂𑌕𑍍𑌷𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌂 𑌵𑌾 𑌯𑍋 𑌵𑌾 𑌹𑌤𑍋 𑌨 𑌪𑍍𑌰𑌤𑌿𑌹𑌨𑍍𑌤𑌿 𑌧𑍈𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌪𑌾𑌪𑌂 𑌚 𑌯𑍋 𑌨𑍇-

மிகவும் பாபிஷ்டர்களானாலும் சரி, தனக்கு சமானர்களானாலும் சரி தனக்குத்

ஸ்தித்வாஹம் தேஃ தஸ்ய
ஸதைவாஃ ஸர்வ ஸம்யந்தி நி
த்யஶஃ ॥

வா பலீயஸஃ க்ஷமிதவ்யம்
யஸஃ ஸர்வஶஸ்ச । வித்வா
நிதோ ஸஹிதாஃ க்ஷ
ஏவம் ஸம்ஸித்திம் கமிஷ்யதி ॥

மஹாபாரதம், சாந்திபருவம்.
ccc. 10. 12. 16-28.

தாழ்ந்தோர் அல்லது பெரியோராளுலும் தனக்குக் கோபமூட்டிளுலும் சரி, தன்னை இடித்தாலும் சரி அவமானப் படுத்திளுலும் சரி க்ஷமையையே செய்யவேண்டும். இவ்விதமே சித்தியையடைய வேண்டும்.

ஆக்ருஷ்டஸ்தாடிதஃ க்ருத்தஃ க்ஷ
மதே யோ பலீயஸஃ । யஶ்ச
நித்யம் ஜிதக்ரோதோ வி
த்வாநுத்தமபூருஷஃ ॥

மஹாபாரதம் வாணபருவம்.
XXIX. 25-28.

தன்னிலும் பலிஷ்டனுலும் கோபமூட்டப்பட்டாலும், அடிபட்டாலும் அவமதிக்கப்பட்டாலும் எவன் எப்பொழுதும் தன் கோபத்தையடக்கிக்ஷமையையே செய்கிருனே அவனே அறிந்தவன், சதப்புருஷன்.

𑌯𑌦𑌿 𑌨 𑌸𑍍𑌯𑍁𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍇𑌷𑍁 𑌕𑍍𑌷
𑌮𑌿𑌣𑌃 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌸𑌮𑌾𑌃 । 𑌨 𑌸𑍍𑌯𑌾
𑌤𑍍𑌸𑌨𑍍𑌧𑌿𑌰𑍍𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌕𑍍𑌰𑍋
𑌧𑌮𑍂𑌲𑍋 𑌹𑌿 𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ॥

மானிடருள் பிருதிவிக்குச் சமானமான பொறுமை யுள்ளோர் இல்லாமற்போனால் மனிதருள் ஒற்றுமையென்பதே யிராது. கோபத்தால் கலகமே விளங்கும்.

𑌅𑌭𑌿𑌷𑌕𑍍𑌤𑍋 𑌹𑍍𑌯𑌭𑌿𑌷𑌜𑍇𑌦𑌾𑌹
𑌨𑍍𑌯𑌾𑌦𑍍𑌗𑍁𑌰𑍁𑌣𑌾 𑌹𑌤𑌃 । 𑌏
𑌵𑌂 𑌵𑌿𑌨𑌾𑌶𑍋 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾
𑌮𑌧𑌰𑍍𑌮𑌃 𑌪𑍍𑌰𑌥𑌿𑌤𑍋 𑌭𑌵𑍇𑌤𑍍 ॥

துன்பமுடப்பட்டவர்கள் துன்பத்தையே திரும்பிச்செய்வதும், பெரியோரால் கண்டிக்கப்பட்டவர் திரும்பித்தானும் கண்டிப்பதுமாயிருந்தால் சகல பூதங்களின் விநாசமே முடிவாகும். அதர்மமே சிறந்து விளங்கும்.

𑌆𑌕𑍍𑌰𑍁𑌷𑍍𑌟𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌸𑌰𑍍𑌵𑌃
𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌾𑌕𑍍𑌰𑍋𑌶𑍇𑌦𑌨𑌂
𑌤𑌰𑌮𑍍 । 𑌪𑍍𑌰𑌤𑌿𑌹𑌨𑍍𑌯𑌾𑌦𑍍𑌧
𑌤𑌶𑍍𑌚𑍈𑌵 𑌤𑌥𑌾 𑌹𑌿𑌂𑌸𑍍𑌯𑌾𑌚𑍍𑌚 𑌹𑌿𑌂
𑌸𑌿𑌤𑌃 ।

பிறரால் கொடுஞ்சொற்கள் சொல்லப்பட்டால் தானும் கொடுஞ்சொற்களையே சொல்லுவதும், துன்பமடைந்தவன் தானும் துன்பங்களையே செய்வதும், பிறராலடியுண்டவொருவன் தானும் அடிப்பதும் ஏற்படும்

𑌹𑌨𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌪𑌿𑌤𑌰𑌃 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾
𑌨𑍍 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌃 𑌪𑌿𑌤𑍄𑌨𑌵𑌿𑌤𑌯𑌾𑌵𑌿
𑌤𑍍𑌥𑌾𑌨𑍍। 𑌹𑌨𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌪𑌤𑌯𑍋
𑌭𑌾𑌰𑍍𑌯𑌾𑌃 𑌪𑌤𑍀𑌨𑍍𑌭𑌾𑌰𑍍𑌯𑌾
𑌸𑍍𑌤𑌥𑍈𑌵 𑌚 ॥

மஹாபாரதம் வாணபருவம்.
XX. IX. 13. 25.

பிதாக்கள் புத்திரர்களைக் கொல்லுவார்கள், புத்திரர்களும் பிதாக்களைக் கொல்லுவார்கள், கணவர்கள் பத்தினிகளைக் கொல்லுவார்கள், பத்தினிகளும் கணவர்களைக் கொல்லுவார்கள்.

𑌏𑌵𑌂 𑌸𑌙𑍍𑌕𑍁𑌪𑌿𑌤𑍇 𑌲𑍋𑌕𑍇
𑌜𑌨𑍍𑌮 𑌕𑍃𑌷𑍍𑌣 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ।

ஓ! கிருஷ்ணா! இவ்விதமே கோபம் நிறைந்த வுலகில் ஜனனமே யுண்டாகாது.

𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌤𑌰𑌤𑍁 𑌦𑍁𑌰𑍍𑌗𑌾𑌣𑌿
𑌸𑌰𑍍𑌵𑍋 𑌭𑌦𑍍𑌰𑌾𑌣𑌿 𑌪𑌶𑍍𑌯
𑌤𑍁। 𑌸𑌰𑍍𑌵𑌃 𑌸𑍁𑌖𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍋
𑌤𑍁 𑌸𑌰𑍍𑌵𑌃 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌨𑌨𑍍𑌦
𑌤𑍁 ॥

யாவரும் தாண்டமுடியாதனவற்றையும் தாண்டுவாராக!

யாவரும் சகல மங்களங்களையுங் காண்பாராக!

யாவரும் சுகத்தை யடைவாராக!

யாவரும் எவ்விடத்திலும் ஆனந்திப்பாராக!

| | |
|---|---|
| 𑍐 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌵𑌦, 𑌧𑌰𑍍𑌮𑌂 𑌚𑌰। | ஓம். சத்தியம்பேசு. |
| | தர்மத்தில் நில். |
| 𑌸𑌤𑍍𑌯𑌮𑍇𑌵 𑌜𑌯𑌤𑍇, 𑌨𑌾𑌨𑍃𑌤𑌂॥ | சத்தியமே வெல்லும். பொய் வெல்லாது. |

